# கல்கி

## பொருளடக்கம்









பிலவங்க, ஆவணி 25 - செப்டம்பர் 10





"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## வளர்ப்பு நாயா? வெறி நாயா?






தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ❋ இதழ் 6




# உடனடி நடவடிக்கை வேண்டும்

**மா**தங்கள் பல ஆகியும் சிவசேனை இயக்கம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருவது மகாராஷ்டிர அரசாங்கத்துக்கும் மத்திய அரசாங்கத்துக்கும் மாளாத அவமானமாகும். காங்கிரஸ் தலைவர்கள் இவ்வியக்கத்தைக் கண்டித்து வாயளவில் அறிக்கை விடுத்துவிட்டால் போதாது. நிலைமை நாளுக்கு நாள் தீவிரமாகி வருகிறது. பம்பாயில் வாழும் தமிழர்களும், மற்ற மாநிலத்தவரும் தங்களது உயிருக்கும் உடைமைக்கும் எப்போது எப்படி என்ன ஊறு நேருமோ என்று நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள். இந்தக் கிலியை அகற்றுவதற்கு ஓர் அரசாங்கத்துக்குக் கையால் ஆகவில்லை யென்றால் அது வெட்கக்கேடாகும். புயலையும் பூகம்பத்தையும் எண்ணி மக்கள் அஞ்சினால் நியாயம் உண்டு; அந்நிய நாட்டு எதிரிகளை எண்ணி பீதியடைந்தால் நியாயமுண்டு. ஆனால் நம் நாட்டு மக்களுடனேயே, அலுவலகங்களில் நம்முடன் தோளோடு தோளாகப் பணி புரிபவர்களிடமே, நம் அண்டை வீட்டாரிடமே அச்சம் கொள்வது என்றால் அது எவ்வளவு துர்ப்பாக்கியமான நிலைமை?

தமிழர்களோ மலையாளிகளோ மற்ற மாநிலங்களில் பெருவாரியாகக் குடியேறியிருக்கிறார்களென்றால் அதில் தீய நோக்கம் எதுவும் கிடையாது. அந்த வெளி மாநிலங்களைச் சொந்தமாகக் கொண்டவர்களைக் கீழே அழுத்த வேண்டும் என்ற பகை உணர்ச்சியில் நாம் படையெடுத்துச் செல்லவில்லை. தங்களது தாய்மாநிலத்தில் போதிய வேலை வாய்ப்பு இல்லாததால்தான் இவர்கள் வெளி மாநிலங்களை நாட வேண்டியதாகிறது. இவர்களது அந்தரங்க சுத்தமான உழைப்பு, அறிவுக் கூர்மை, சாதுரியம் இவை காரணமாக எங்கு சென்றாலும் முன்னுக்கு வந்துவிடுகிறார்கள். இதற்காக இவர்களிடம் விரோதம் பாராட்டுவதும், விரட்ட முற்படுவதும், ஊரை விட்டு வெளியேறுவிடில் உலகத்தை விட்டே வெளியேற்றிவிடுவோம் என்று மிரட்டிப் பேயாட்டம் போடுவதும் அநீதியிலும் அநீதியாகும்.

இந்தியாவின் பற்பல மாநிலங்களிலும் பல்வேறு வகையான மக்கள் ஒன்று சேர்ந்து வாழ்கிறார்கள். சென்னையில் சௌகார்ப்பேட்டையில் சில இடங்களைப் பார்த்தால் மார்வாரி ராஜ்யமாகவே தோன்றும். மதுரையில் ஒரு பகுதி முழுவதும் சௌராஷ்டிரத் துண்டாகவே தெரியும். இதெல்லாம் இயற்கையாக அவரவர்களின் தேவையையும் ஆற்றலையும் ஒட்டி அமைந்த ஏற்பாடு. இதை எதிர்க்க நினைப்பது அறிவீனத்தின் எல்லையாகும்.

இந்தியாவைச் சேர்ந்த எந்தப் பகுதியிலும் குடியேறவும் தொழில் செய்யவும் எந்த இந்தியனுக்கும் உரிமை உண்டு. இவ்வுரிமை இல்லாவிடில் இந்தியாவை ஒரு தேசம் என்றோ, காச்மீரம் முதல் கன்யாகுமரி வரை உள்ள அனைவரும் இந்தியர் என்றோ சொல்வதே பொருளற்றதாகும். இந்தப் பொது உண்மையோடு பம்பாய்க்கு உரித்தான ஒரு தனி உண்மையையும் பார்க்க வேண்டும். அகில பாரதத்தின் தொழில் முன்னேற்றத்துக்காகப் பல பெரும் தொழில்கள் அமையப் பெற்ற மாநகரம் அது. அதனைப் பாரதத்தின் தொழில் தலைநகரம் என்றே கூறலாம். அப்படிப்பட்ட இடத்தில் மராட்டியர்தான் இருக்க வேண்டும் என்று வாதிப்பது சற்றும் நியாயமல்ல.

சிவசேனைக்காரர்கள் தங்கள் கோரிக்கை பற்றிப் பலவிதமாக நியாயம் பேசுகிறார்கள். இந்தக் கோரிக்கை நியாயமாயினும் சரி, அநியாயமாயினும் சரி, அச்சுறுத்தலால் அதைச் சாதிக்க நினைப்பதை நாகரிக சமுதாயம் ஒருகாலும் ஒப்பாது; வன்மையாகக் கண்டிக்கவே செய்யும். அப்படிப்பட்ட வன்மையான கண்டனக் குரலும் செயலும் மகாராஷ்டிர முதன் மந்திரி ஸ்ரீ நாயக் அவர்களிடமிருந்தோ, மத்திய உள்துறை அமைச்சர் ஸ்ரீ சவான் அவர்களிடமிருந்தோ எழும்பாத

வரையில் தமிழர்களின் சந்தேகம் தீருவதற்கு இடமில்லை. சிவசேனைக்கு எதிராக உறுதியான நடவடிக்கையை உடனே எடுத்தாக வேண்டும். பல ராஜ்ய மக்களைப் பொறுத்த இவ் விஷயத்தில் மத்திய அரசாங்கத்தின் பொறுப்பு மிக முக்கியமானது. இந்த முக்கியமான பொறுப்பைத் தம்மால் ஆற்ற முடியாவிடில் ஸ்ரீ சவான் அவர்கள் தம் பதவியைக் கைவிட்டுத்தானாகவேண்டும். மராட்டியரான அவரைக் குறித்துச் சிவசேனை விஷயமாக ஐயப்பாடுகள் எழும்ப இன்னமும் அவர் இடமளித்துக்கொண்டிருப்பது பாரத சர்க்காருக்கே களங்கத்தை உண்டாக்குவதாகும்.

இச்சமயத்தில் தமிழர்களுக்கு ஒரு வார்த்தை. பம்பாய்த் தமிழர்கள் பயம் என்ற அரக்கனுக்கு அடிபணிந்து விடக் கூடாது. நாடு முழுவதும் தங்கள் பக்கம் இருக்கிறது. நியாயம் தங்கள் பக்கம் இருக்கிறது. எனவே ஆண்டவனும் தங்கள் பக்கமே இருப்பான் என்ற நம்பிக்கையுடனும் தைரியத்துடனும் அவர்கள் செயலாற்ற வேண்டும். தமிழகத்தில் வாழும் தமிழர்கள் இச்சமயம் எதிர் நடவடிக்கை என்ற அபாய ஆயுதத்தைப் பற்றிக் கனவிலும் எண்ணக்கூடாது.

'சிவ சேனைக்குப் பதிலடியாகத் தமிழகத்திலிருந்து வடவரை வெருட்டுவோம்' என்று திரு ஈ. வெ. ரா. பெரியார் எழுப்பும் துவேஷக் குரலுக்குத் தமிழர்கள் ஒருபோதும் செவி சாய்க்கலாகாது. ஒருவர் செய்கிற தப்பை நாமும் திருப்பிச் செய்வதால் அது சரியாகி விடாது. இன்னா செய்தார்க்கும் இனியவே செய்ய வேண்டும் என்ற தமிழ் மறையைப் பின்பற்றும்' அளவுக்கு நாம் ஆதரிச மானுடர்களாக இருக்க முடியாவிடினும் யாரோ செய்யும் தவற்றுக்காக வேறு யார் மீதோ தாக்குதல் நடத்தும் மடமையை மேற்கொள்ளக் கூடாது. பதிலடி தர முற்பட்டோமாயின் நாம் பேரன்புடன் ஆட்சி பீடத்தில் ஏற்றியுள்ள தி. மு. க. அரசாங்கத்துக்கு மாளாத கெட்ட பெயரை ஏற்படுத்தியவராவோம். தமிழர்களின் நலன்களைப் பாதுகாக்கும் அவசியத்தை நன்கு உணர்ந்து, சிவசேனையைக் கண்டித்துள்ள திரு அண்ணாதுரை அவர்கள் அதேபோதில் தேச ஐக்கியத்தின் முக்கியத்தையும் வலியுறுத்தியுள்ளார். இந்த உண்மை மகாராஷ்டிரத்துக்கு மட்டுமின்றித் தமிழகத்துக்கும் பொருந்தும்.

# என்ன சேதி?

- இதற்குமா எதிர்ப்பு?
- திட்டம் என்னவாச்சு?
- நிலைமை விலகிற்று

சென்னை நகர பஸ்களில் திருக்குறள் பாக்களைப் பார்க்கும் எந்தத் தமிழருக்கும் மனப் பூரிப்பு ஏற்படாமல் இராது. பஸ்ஸில் உட்கார்ந்திருக்கும் நேரம் முழுவதும் மனத்தைக் கண்ட சிந்தனைகளில் ஓட விடாமல், சிறிது பொழுதாவது குறள்பா குறிக்கும் கருத்தினைச் சிந்தித்து மகிழ முடிகிறது. சாமானிய மக்களுக்குப் புரியும் வகையில் குறளின் பொருளையும் சேர்த்திருந்தால் பயன் பூர்த்தியாகி இருக்கும். எப்படியாயினும் தமிழ் முனிவரை நினைக்க வாய்ப்பு ஏற்படுவதே மனத்துக்கு மருந்துதான். இந்த வகை நல்ல ஏற்பாட்டைச் செய்ததற்கு தி. மு. க. ஆட்சியைப் பாராட்டவே வேண்டும். ஆனால் சில காங்கிரஸ்காரர்கள் இதனையும் கண்டித்துப் பேசுவது பரிதாபம்!

நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தை எப்போது ஆரம்பிக்கலாம், 67லிருந்து தொடங்கலாமா, 68லிருந்து தொடங்கலாமா, தொடங்காமலே இருக்கலாமா என்று டில்லி திட்டக் கமிஷனிலும் சர்க்காரிலும் இன்னமும் யோசித்து முடிந்தபாடில்லை.

சுதந்திரக் கட்சியினர் திட்டங்களை எதிர்த்த போதெல்லாம் காங்கிரஸ்காரர்கள் 'திட்டமில்லாமல் எப்படி முன்னேற முடியும்?' என்று கேட்டனர். 'பிற்போக்கு வாதிகள், முன்னேற்றத்தை விரும்பாதவர்கள்' என்று சுதந்திரக் கட்சியினரைக் குற்றம் சாட்டி வந்தார்கள்.

ஆனால் இப்போது என்னவாயிற்று? சுதந்திரக் கட்சி சொன்னது போலவே திட்டங்களின் விளைவாக நாடு திவாலா நிலையிலுள்ளது. உள்நாட்டிலும் சரி, வெளிநாடுகளிலும் சரி திட்டத்துக்குத் தேவையான நிதி பெயராது என்ற நிலை ஏற்பட்டு விட்டது. இதனால் இரண்டு ஆண்டுகளாகத் திட்டம் இல்லாமலேதான் காங்கிரஸ் ஆட்சி நடத்தி வருகிறது! முன்பு ஏளனமாகப் பேசியவர்கள் இப்போது சிந்தித்துப் பார்க்க வேண்டும்!

தஞ்சை மாவட்டத்தில் ஏற்பட்டிருந்த விவசாயத் தகராறு சுமுகமாகத் தீர்ந்து உழவுத் தொழிலாளிகளுக்கும், நில உரிமையாளருக்குமிடையே சமரசம் ஏற்பட்டு விட்டதாகச் செய்தி கூறுகிறது. விவசாய டைரக்டரும், மாவட்டக் கலெக்டரும் தலையிட்டு இந்தச் சகஜ நிலையை ஏற்படுத்தி, தங்கள் கடமையைச் சிறப்பாக ஆற்றியிருக்கிறார்கள். உணவு உற்பத்தியை ஒட்டியே, நாட்டில் முடங்கியுள்ள பல்வேறு தொழில்களும் இயங்க வேண்டியிருக்கிறது. இந்நிலையில் உணவு உற்பத்திக்குப் பாதகமாக யார் இருந்தாலும் அவர்கள் தேசத்துக்கே ஊறு செய்பவர்கள்தாம். தமிழகத்தில் இப்படியொரு நிலைமையை வளர விடாமல் பொறுப்புணர்ந்து நடந்து கொண்ட உழவுத் தொழிலாளரையும், நில உரிமையாளரையும் பாராட்டுகிறோம்!

# ராஜாஜியின் கருத்துக்கள்

ஹிந்தியை அகில இந்திய நிருவாக மொழியாகச் செய்ய விரும்புகிறவர்கள் யாவரும் நம் நாட்டில் ஆங்கிலம் அறிந்தோரின் எண்ணிக்கை ஒரு சதவிகிதம்தான் என்று மாயப் பிரசாரம் செய்து வருகிறார்கள். 1966ல் இந்தியாவில் 56 லட்சம் பிரதி ஆங்கிலத் தினசரிகள் செலாவணியானதாக அதிகார பூர்வமான அறிக்கை தெரிவிக்கிறது. 56 லட்சம் என்பதே ஒரு சதவிகிதத்துக்கு அதிகமாகும். வாங்குபவர் மட்டுமின்றி ஒவ்வொரு பிரதியையும் மற்றும் பலரும் படிக்கிறார்கள் என்பதைக் கருத்தில் கொண்டால் உண்மை புலனாகும்.

அரசியல் சாஸனத்தைச் சுட்டிக் காட்டி ஆங்கிலத்துக்குப் பதில் ஹிந்தியைப் பீடத்தில் அமர்த்தும் வெறித் திட்டத்துக்கு ஆதரவு தேடப் பார்த்திருக்கிறார் யூனியன் நிதிமந்திரி. இத்திட்டத்தை எதிர்ப்பவர்கள் சாஸனத்தையே எதிர்ப்பவர்களாவார்கள் என்று மிரட்டியும் இருக்கிறார். தமிழக மந்திரி திரு மாதவன் இந்த மிரட்டலை எதிர்த்துத் தைரியத்துடனும் உண்மையுடனும் பேசியது குறித்து மகிழ்கிறேன்.

ஆங்கிலம் தெரியாத மற்ற எல்லோரின் சௌகரியத்துக்காக நீண்ட காலமாகவே பிரதேச மொழிகளில் சட்டங்கள் மொழிபெயர்க்கப்பட்டுத்தான் வருகின்றன. பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்திலிருந்தே எல்லா அரசாங்கங்களும் இதைச் செய்து வருகின்றன. 'சட்டத்தை மொழிபெயர்க்க வேண்டும்' என்று பெரிதாக முழங்கும் நிதிமந்திரிக்கு இது தெரியாதா? மொழிபெயர்ப்புக்கள் இருப்பினும் அதிகாரபூர்வமான தஸ்தாவேஜுகள் ஆங்கிலத்திலேயே இருக்க வேண்டும். மொழிபெயர்ப்புக்கள் முற்றிலும் திருப்திகரமாகவோ, நம்பகமாகவோ இருப்பதில்லையாதலால் சுருக்கமாகவும் தெளிவாகவும் உள்ள ஆங்கில மூலச் சட்ட வாக்கியங்களும் தீர்ப்புக்களும் உத்தரவுகளுமே அதிகாரபூர்வமாக வைத்துக் கொள்ளப்பட வேண்டும்.

***

பிரதமர் சொன்னது போல் மக்கள் நன்னம்பிக்கை இழந்துவிடவில்லை. அவர்கள் எண்ணுவது யாதெனில், காங்கிரஸ் பல்லாண்டுகளாகச் செய்த குழப்பங்களை அந்தக் கட்சியால் சீர்திருத்த முடியாது என்பதே. இப்போது ஆட்சி பீடத்திலிருப்பவர்களே தொடர்ந்து நிருவாகம் செய்ய, தாங்கள் அவ்வப்போது அதைத் தாக்கிக் கொண்டிருந்தால் போதும் என்று எதிர்க் கட்சிகள் கருதுவதாகப் பொதுமக்கள் நினைக்கிறார்கள். எதிர்க்கட்சியில் உள்ள அனைவரும் ஒன்றுபட்டு காங்கிரஸ் ஆட்சியை அகற்றுவதற்கு வழி தேடாததே மக்களின் குறை. எதிர்க்கட்சியில் உட்கார்ந்திருக்கும் வெற்றுக் கௌரவத்தைவிடப் பெரிய பொறுப்புக்களை எதிர்க்கட்சித் தலைவர்களிடம் தேசத்தின் நெருக்கடி எதிர்பார்க்கிறது. தேசத்தின் அறிஞர்கள் யாவரும் கொண்ட ஒரு குழுவின் நிருவாகத்தை இன்றைய நிலவரம் அறைகூவி அழைக்கிறது.

***

ரூபாயின் மதிப்பு விழுந்து கொண்டே வருவதால் அதன் வாங்கும் சக்தியும் குறைந்து கொண்டே வருகிறது. எல்லாப் பண்டங்களின் விலையும் ஏறுமுகமாகவே உள்ளது. இந்நிலையில் ஊதியங்களை உயர்த்தாமல், 'உறைவிப்பது' எப்படிப் பொருந்தும்? மத்திய சர்க்கார் ஊழியர்கள் அரசாங்கத்தை அடிபணிய வைத்து ஊதிய உயர்வு பெற்றிருக்கும் அதே சமயத்தில், மற்ற தொழிலாளர்களின் சம்பளத்தை மட்டும் 'உறைவிப்பது' எப்படி நியாயமாகும்? இதைத் தொழிற்சங்கங்கள் ஒப்புக் கொள்ளா. தொழிலாளிகளின் எதிர்ப்பைத் தாக்குப் பிடிப்பதற்கு அரசாங்கத்துக்குப் பலமில்லை. ஊதிய உயர்வை உறைவிக்க முடியாதென்பதாலேயே, விலைவாசிகளை உயர விடாமல் உறைவிக்கும் யோசனையும் குப்புற விழ வேண்டியதுதான். உற்பத்திச் செலவு ஏறிக் கொண்டே போகும் போது பண்டங்களின் விலை எப்படிக் குறையும்? விலையைக் கட்டுப்படுத்தாமல் ஊதியத்தைக் கட்டுப்படுத்துவதற்கில்லை. லாபத்தை 'உறைவிப்பதாக'ப் பேசுவதும் வெறும் அரசியல் தந்திரம்தான். இன்றைய நிலையில் இயற்கையாகவே லாபம் உயர வாய்ப்பில்லை.

***

உற்பத்திச் செலவு அதிகமாவதால் கோவை நூற்பு ஆலைகளில் தயாராகும் நூலின் விலை ஏறியிருக்கிறது. கைத்தறி நெசவாளர்களால் இந்த நூலை வாங்க முடியவில்லை. விசைத்தறிகளுக்கு இன்னும் தாராளமாக லைசென்ஸ் தந்தால், பலர் இதில் சிறு முதலீடு செய்து, நூல் வாங்கி காடா தயாரிக்க முடியும் என்று ஓர் அநுபவம் வாய்ந்த தொழிலதிபர் தெரிவிக்கிறார். கரை போட்ட வேஷ்டி புடவைகளைக் கைத்தறிக்கு ஒதுக்கிவிட்டு, விசைத்தறிகள் காடா மட்டுமே உற்பத்தி செய்தால் போதுமாம். காடாவை நன்கு வெளுத்து விட்டால் தைத்துப் போடும் உடுப்புக்குப் பயன்படுத்தலாம். கூட்டுறவு முயற்சிகளுக்குப் பாடுபடுவதைவிட சர்க்கார் காடாவை உறுதியாக்கி வெளுக்க ஒரு மத்திய ஆலை அமைக்கலாம். நன்கு நடத்தினால் இதில் நஷ்டம் ஏற்படாது. இந்தப் புதிய ஆலைச் செலவைத் தவிர, இன்றைய ஆலைகள் மூடப்படுவதால் வேலை யிழந்தவர்களுக்குச் சர்க்கார் செய்ய வேண்டிய செலவு மிச்சமாகும்.

கோவை தொழில் மயமாக்கப்பட்ட ஆரம்ப காலத்தில், ஆலை ஏதேனும் மூடப்பட்டால் தொழிலாளிகள் விவசாயத்துக்குத் திரும்பினார்கள். ஆனால் இப்போது ஆலைகள் பெருத்து விட்டதால் நிலைமை மாறிவிட்டது. இத்தகைய ஆலை வேலை தவிர தொழிலாளிகளுக்கு வேறெதுவும் தெரியவில்லை. அலுப்புத் தட்டுவதும் எளியதுமான தேக உழைப்பே ஆலைகளில் தேவைப்படுவது. முன்பிருந்த பலமும் இன்றில்லை. முன்பு ஒருவர் செய்த வேலையை இன்று இருவரால் சமாளிக்க முடியவில்லை. சர்க்கார் பிரதிக்ஞை பூண்டுள்ள ஆலைத் தொழிலின் விஸ்தரிப்பு சொல்லும் சோகக் கதை இதுவே.



# பூரண ஹரியும் பூரண ரசிகமணியும்

ராஜாஜி

சென்ற திங்கட்கிழமை கண்ணன் பிறந்த நாள். அந்தத் திங்கட்கிழமையே தமிழ்க் கவிதை தரும் மகிழ்ச்சியின் ரகசியம், தமிழ் வசன நடை முன்னேற்றத்தின் ரகசியம், தாளமும் ராகமும் சேர்ந்த நல்லிசையின் ரகசியம், தெய்வ பக்தி தரும் நிம்மதியின் ரகசியம், அன்பின் பரம மகிழ்ச்சி, வேஷங்களின் பொய்ம்மை, அனைத்தும் நன்முகக் கண்ட பூரண ரசிகமணி டி. கே. ஸி. பிறந்த நாளும்.

ஹரியின் பூரணவதார கண்ணனின் ஜன்ம நட்சத்திரமும், டி. கே. ஸி.யின் ஜன்ம நட்சத்திரமும் ஒன்றுய்ச் சேர்ந்த திருவிழாவை மகிழ்ச்சியுடன் சென்ற திங்கட்கிழமை கொண்டாடினேம். இந்தத் திருவிழாக்கள் ஞானமும் அன்பும் நாட்டில் வளரச் செய்யும்.

மகாவிஷ்ணுவின் பூரண அவதாரமாகிய ஸ்ரீதாசாரியனுக்கும் அயோத்தியாபுரி ராஜகுமாரன் ராமசந்திரனுக்கும் உள்ள வேற்றுமைகளை வைஷ்ணவ ஆசாரியார்கள் பக்தியும் சாமர்த்தியமும் செலுத்தி எழுதியிருக்கிறார்கள். மொத்தத்தில் ராமசந்திரன் நான்கில் ஒரு பங்கு அம்சம் என்றும் கிருஷ்ண பகவான் பூரண அவதாரம் என்றும் கொள்ளப்பட்டிருக்கிறது.

பகவானைப் பங்கு போட இயலாது. கால் என்றும் அரை என்றும் சர்வேசுவரனை வகுப்பதற்கு இயலாது. ஆயினும் அவதாரங்களில் பேதம் உண்டு. சீதையை இழந்ததும் ராமசந்திரன் துயரமடைந்து பிரலாபித்தது ராம சரிதம் படித்தவர்கள் அனைவருக்கும் தெரியும். கண்ணனுக்குத் துயரம் என்பது கிடையாது. தான் சர்வேசுவரன் என்று உணர்ந்த அவதாரம்.

இராவணனை வதம் செய்து வெற்றி பெற்ற பின் சீதையிடம் ராமசந்திரன் "உனக்காக நான் யுத்தம் செய்யவில்லை. என் மானத்துக்காக யுத்தம் செய்தேன். நீ எங்கேயாவது எவனுடைய சார்பிலாவது வாழலாம். என்னுடன் இருக்க ஆசைப் படாதே" என்றதையும், இதைக் கேட்ட சீதை தாங்க முடியாத வேதனை யடைந்து அக்கினியில் பிரவேசித்ததையும் புராணம் படித்தவர்கள் அறிவார்கள். அக்கினியால் சீதையை எரிக்க முடியவில்லை. அது சோதனைக்கு நடந்த சம்பவம், உண்மையில் ராமசந்திரன் சீதையை விட்டுவிட உத்தேசிக்கவில்லை என்று சொல்லப்படுகிறது. எப்படியாயினும் கண்ணன் இம்மாதிரி நடந்து கொண்டிருப்பானு? ஒருநாளும் இவ்வாறு செய்ய மாட்டான். அநுமான் கொண்டு வந்த செய்திக்குப் பின் சோதனை என்னத்துக்கு?

பிறகும் கூட மூடர்கள் எளப்பிய அபவாதத்துக்குப் பயந்து ராமசந்திரன் சீதா தேவியைக் காட்டுக்கு அனுப்பி விட்டான். கண்ணன் இப்படிச் செய்வானு? ஒருநாளும் செய்ய மாட்டான். பிறகும்கூட சீதை குழந்தைகளைப் பெற்ற பின் ராமசந்திரன் சந்நிதியில் நின்றபோது மறுபடியும் முன்போலவே அவமதித்தான். இதற்கு மேல் மானுட வாழ்க்கை வேண்டாம் என்று தேவி பூமிக்குள் மறைந்து போனுள். நமக்கு வந்திருக்கும் ராமா







யணை ஏடுகளில் இப்படியெல்லாம் கண்டிருக்கிறது. உலக வழக்கத்துக்கு பலம் தருவதற்காக இந்தக் கதை உண்டாக்கப் பட்டிருக்கிறது. இது ராம சந்திரனுடைய பெருமையைக் குறைக்கிறது.

கண்ணனே குறைவற்ற தெய்வம். உலகத்துக்கு வழிகாட்டினன். 'வீட்டை விட வேண்டாம். மனைவியை விட வேண்டாம். செய்ய வேண்டிய காரியங்களைச் செய்யாமல் விட வேண்டாம். அவற்றின் பயன்களில் பற்று வைக்காதே. அதுவே சந்நியாசம்' என்று தெளிவாக எடுத்து உபதேசித்தவன் கண்ணபிரான். ஒரு பற்றை மட்டும் விடாதே. கடவுள் பற்றை விடாதே. அந்தப் பற்றைப் பற்றிக் கொண்டு மற்ற பற்றுக்களினின்று விடுதலை பெறுவாய் என்று உபதேசித்தான்.

**பற்றுக பற்றற்றான் பற்றினை, அப்பற்றைப்.**
**பற்றுக பற்று விடற்கு**

என்று திருவள்ளுவரும் உபதேசித்தார்.

கண்ண பகவான் ரோஹிணி நட்சத்திரத்தில் அவதரித்தான். ரோஹிணி நட்சத்திரக் கூட்டம் சகடத்தைப் போல் இருப்பதாகக் கண்டு அதற்குப் பெயரும் 'சகடம்' என்றே சொல்லுவது வழக்கம். வண்டியின் முக்கிய பாகம் அச்சு மரம். அச்சு மரத்துக்கு வடமொழி 'அக்ஷ:' அதன் கீழ் பிறந்தான் கண்ணன் என்று விஷ்ணுவுக்குப் பீஷ்மாச்சாரியார் தந்து பாடிய ஆயிர நாமங்களில் 'அதோக்ஷஜ:' என்பதும் ஒன்று. அதாவது அச்சு மரத்தடியில் அவதரித்தவன் என்று.

இந்த அச்சு மரத்தடியில் மற்றொருவர் அவதரித்தார். தமிழ்க் கவிக் காதலர் டி. கே. சி. என்று பெயரைப் பெற்ற மகான் சிதம்பரநாத முதலியார் அவர்கள். இவர்தான் 'கல்கி' கூட்டத்தின் குலபதியாக இருந்து பல்லாண்டு அந்தப் பத்திரிகையையும், அதை நடத்தியவர்களையும் படிப்பவர்களையும் ஆசீர்வதித்து வந்தார். அவரைக் கல்கி மறக்க முடியுமா? ஸ்ரீஜயந்தி என்றால் கண்ணன் பிறந்த நாள். டி. கே. சி. பிறந்த நாள் என்றும் தமிழர் கொண்டாடும் நாள்.



# செல்வர் தந்த செல்வம்

நலவனம்

பல ஆண்டுகளுக்குமுன் சென்னை சட்டக் கல்லூரியில் ஒரு சொற்போர் நிகழ்ந்தது. கம்பராமாயணம் பற்றிய அந்தச் சொற்போரில் எதிரும் புதிருமாகப் போரிட்டவர்கள் திரு அண்ணாதுரை அவர்களும், ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களும்தாம். அந்தப் போர் தென்னகம் முழுவதிலும் பரபரப்பை ஏற்படுத்தியது. அந்தச் சம்பவம் நிகழ்ந்து பல ஆண்டுகளுக்குப் பிறகு அதே சேதுப் பிள்ளையின் நினைவாகத் திருநெல்வேலியில் உருவாக இருக்கும் பிள்ளைப் பேறு விடுதிக்கு அடிக்கல் நாட்ட அதே அண்ணாதுரை அவர்கள் முதன்மந்திரி என்னும் நிலையில் வந்தது வியப்பும் மகிழ்ச்சியும் தரும் விஷயமாகும்.

சொல்லின் செல்வர் டாக்டர் சேதுப் பிள்ளை அவர்கள் நினைவு மகப்பேறு விடுதியின் கால்கோள் விழா, ஆகஸ்டு மாதம் 21ம் நாள் நடைபெற்றது. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் தமிழகம் முழுவதற்குமே பொதுவான சொத்து என்றாலும், திருநெல்வேலி நகரத்துக்கு அந்த உரிமையில் சற்று அதிகமாகவே பங்கு உண்டு. அதனால்தான் திரு ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் ஒரு லட்ச ரூபாயை ஒரு மகப்பேறு விடுதிக்கு அளித்து அந்த விடுதியை நெல்லையில் நிறுவ ஏற்பாடு செய்து விட்டார்கள்.

விழா ஆரம்பத்தில் புதுவைத் தலைமை நீதிபதியும், சொல்லின்செல்வரின் அறங்காவலருமான திரு எஸ். மகராஜன்அவர்கள் திரு சேதுப்பிள்ளையைப் பற்றிய வரலாற்றைக் கூறினர். பிள்ளை அவர்கள் அவருடைய பெற்றோருக்குப் பன்னிரண்டாவது குழந்தை என்பதைக் கூறிவிட்டு, அந்தக் காலத்தில் குடும்பக் கட்டுப்பாடு இருந்திருக்குமானால் நாம் ஒரு சொல்லின் செல்வரைப் பெற்றிருக்கவே மாட்டோம் என்றார் திரு மகராஜன். திரு சேதுப்பிள்ளை அவர்கள் பன்னிரண்டாவது பிள்ளையாகப் பிறந்தும், தமக்குப் பிள்ளைப் பேறு இல்லாததால், தாம் திரட்டிய செல்வம் அனைத்தையும் ஊர்ப் பிள்ளைகளின் நலனுக்கு அர்ப்பணித்துவிட்ட உயர்ந்த உள்ளத்தை நீதிபதி அவர்கள் எடுத்துக் காட்டியபோது கூட்டத்ினருக்கு மெய்சிலிர்த்தது. கடைசியில் நீதிபதி அவர்கள் தாம் பதவியிலிருந்து ஓய்வுபெற்ற பின் திரு ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களின் எழுத்தோவியங்கள் அனைத்தையும் அச்சிட்டு இன்னும் ஒரு லட்சம் ரூபாய் திரட்டி அந்தப் பிள்ளைப் பேறு விடுதிக்குக் கொடுக்க ஆசைப்படுவதாகக் கூறிய போது கூட்டத்தினரின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

மகப்பேறு விடுதிக்கு முதலமைச்சர் அடிக்கல் நாட்டியதற்குப்பின் நெல்லை நகரசபையின் முன்னாள் தலைவரும், முன்னாள் காங்கிரஸ் தியாகியும், சிறந்த இலக்கியகர்த்தருமான திரு ப. ராமசாமி அவர்களுக்குப் பொன்னாடை போர்த்திப் பெருமைப்படுத்தினார்கள்.

கடைசியில் பேசிய திரு அண்ணாதுரை அவர்கள், தமிழால் தமக்குக் கிடைத்த செல்வத்தையெல்லாம் கொடையாக அளித்துக் கொடுத்த பிள்ளை அவர்களைச் சங்கப் புலவர்களால் புகழப்பட்ட ஆய் என்ற வள்ளலோடு ஒப்பிட்டார். பழம் புலவர்களின் கருத்தைப் பாமரர்களும் உணரும்படி செய்த பிள்ளை அவர்களுக்கு ஈடு இணை யாருமில்லை என்று எடுத்துரைத்தார் முதலமைச்சர்.

தம்மை, ''அண்ணாத்துரை'' என்று திரு சேதுப்பிள்ளை அவர்கள் கூப்பிடும் பாணி தம்முடைய தாயார் கூப்பிடுவதுபோல் இருக்கும்; இன்றும் அது தம் காதுகளில் ரீங்காரம் செய்கிறது; அவ்வளவு கனிவும் அபிமானமும் பிள்ளை அவர்கள் தம்மிடம் வைத்திருந்தார் என்று திரு அண்ணாதுரை அவர்கள் நெஞ்சுருகிக் கூறியபோது, எதிரே இருந்த மக்களும் மனம் உருகினர்.

டாக்டர் சேதுப்பிள்ளையின் நினைவு மகப்பேறு விடுதிக்குத் தமிழக அரசும் ஒரு லட்ச ரூபாய் கொடுக்க முன்வந்திருப்பதை திரு அண்ணாதுரை அவர்கள் குறிப்பிட்டு, தமிழக அரசு தமிழுக்கும் தமிழை ஆண்ட சொல்லின் செல்வருக்கும் செலுத்தும் நன்றியே இது என்றார்.

திரு எஸ். மகராஜன் இன்னும் ஒரு லட்சம் சேகரிக்க நீதிபதி பதவியிலிருந்து ஓய்வு பெற்றுத்தானாக வேண்டும் என்பதில்லை; இப்போதே அந்தப் பணியைத் தொடங்கலாம்; அதற்குச் சட்டமோ அரசோ குறுக்கே நிற்காது என்று கூறி ஊக்கமூட்டினார் திரு அண்ணா.

விழாவில் பங்கெடுத்துக் கொண்ட முக்கியஸ்தர்கள் எல்லாருமே தமிழ் இலக்கியத்தில் வல்லுநர்கள் என்பது வியப்புக்குரியது. இலக்கியச் செம்மல் திரு எஸ். மகராஜன் அவர்கள் லட்சம் ரூபாய் செக்கை வழங்க, அதைப் பெற்றுத் தமிழ் அறிஞர் திரு அண்ணாதுரை அவர்கள் விடுதிக்குக் கல்நாட்ட, கல்நாட்ட வந்தவரை இலக்கியமேதை திரு பீர் முகமது அவர்கள் கவிதையால் வரவேற்க, சொல்லின் செல்வரின் விழா ஓர் இலக்கிய வைபவமாகவே நடைபெற்றது.






## செய்திப் படங்கள்

அமெரிக்க சர்க்காரின் அழைப்பின் பேரில் கல்வி துணை ஆசிரியர் ஸ்ரீ இ. ராஜேந்திரன் டி. டபிள்யூ. ஏ. விமான மூலம் அமெரிக்காவுக்குப் புறப்பட்ட போது பம்பாய் விமான நிலையத்தில் கல்வி ஆசிரியர் ஸ்ரீ சதாசிவம், அவருக்கு ஆசி கூறி வழியனுப்பினார்.

★

சதாபிஷேக விழாப் பெற்ற ஸ்ரீ சச்சிதானந்தம் பிள்ளை அவர்களுக்குக் காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் அனுப்பிய பொன்னாடையை ஸ்ரீ கே. எஸ். ராமசாமி சாஸ்திரிகள் அணிவிக்கிறார்.

★

திருப்பதி கோவிலில் பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி ஸ்ரீ வெங்கடேசவரரைத் தரிசித்து மகிழ்ந்தார்.





சென்னை சர்வகலாசாலையில் டாக்டர் ஏ. லட்சுமணசுவாமி முதலியார் அவர்கள் துணை வேந்தர் பதவியை இருபத்தைந்து ஆண்டுகள் சிறப்பாக நிர்வகித்ததைப் பாராட்டி விழா நடந்தபோது, உதவி ராஷ்டிரபதி ஸ்ரீ வி. வி. கிரி, டாக்டர் ஏ. எல். முதலியார் அவர்களின் உருவப் படத்தைத் திறந்து வைத்தார்.



**வா**னம் இலேசாக மூடியிருந்தது. ஆதவன் கண்ணாமூச்சி காட்டிக் கொண்டிருந்தான். வெய்யில் வரும்போது வெளியில் நின்றால் உடலுக்கு உறைக்கும் உஷ்ணம். அறையினுள் வந்தால் சில்லிப்பு. முன்னறையில் பத்திரிகை படித்துக் கொண்டிருந்த முதியவர் ஸ்ரீதரனின் அருகில் வந்தான் கோபாலன்.

''போய்விட்டு வருகிறேன், சித்தப்பா, ஆசிர்வாதம் செய்யுங்கள்.'' — அவருடைய கால்களைத் தொட்டு வணங்கினான் கோபு.

பெரியவர் சட்டென்று எழுந்து நின்று கையை உயர்த்தினார். கோபாலன் அணிந்திருந்த சட்டைக் காலரின் நூல் பிரிந்திருந்தது அவருடைய பார்வைக்குப் புலப்பட்டது. தம்மைவிட ஒரு பிடி உயரமாக நின்ற தம் நண்பனின் மகனை ஏறிட்டுப் பார்த்தார் ஸ்ரீதரன். அவன் அணிந்திருந்த ஆடை தூய தாக இருந்தது. ஆனால் பகட்டாக இல்லை. ஒரு பழுப்பு நிறக் கால்சராய், வெள்ளை முழுக் கைச் சட்டை, மேலே கம்பளி ஸ்வெட்டர், கால்களில் ரப்பர் செருப்புகள்.

''வேறு நல்லதாக ஒன்றும் இல்லையோ, கோபு?'' — தணிந்த குரலில் வினவினார் ஸ்ரீதரன்.

''உடையைப் பற்றிக் கேட்கிறீர்களா? இது போதாதா என்ன? ஒரு மிட்டாய்க் கம்பெனியில் உதவி மானேஜர் உத்தியோகத்துக்கு டெரிலின் ஸூட்டா வேண்டும்?'' சிரித்துக் கொண்டே கேட்டான் கோபாலன்.

''அப்படி இல்லை கோபு, ஆள் பாதி, ஆடை பாதி. ஒருவன் எப்படி உடை உடுத்திக் கொள்கிறான் என்பது மிக மிக முக்கியம். சமுதாய மதிப்புகள் எப்போதும் ஒரே மாதிரி இருப்பதில்லை. ஒருவன் நன்றாக உடை அணிந்திருக்கிறான் என்றால் அவன் தனது ஸ்தாபனத்தையும் சிறந்த முறையில் விளம்பரம் செய்வான் என்று பொருள்படும்.''

''சித்தப்பா!'' கோபு, அவரைக் கமறிய குரலில் விளித்தான். ''அந்த ஆடைகள் அனைத்தும் உங்கள் மகன்...''

ஸ்ரீதரன் தலையைக் குனிந்து கொண்டார். கண்களை நீர் திரையிட்டது. இதயத்தின் அடியில் தேங்கி நின்ற துயர உணர்ச்சிக்குச் சாளரமாக விளங்கிற்று அவருடைய முகத் தோற்றம்.

''....அதுதான் உலக வாழ்க்கை கோபு, அதைத்தான் பொயடிக் ஜஸ்டிஸ் — கவிதா நியாயம் — என்று பெரியவர்கள் வர்ணிக்கிறார்கள். உலகத்தில் நல்லவர்கள் துயர மடைவதுதான் இயற்கை. அவ்வளவு தூரம் போவானேன்? உன் தந்தையின் வாழ்க்கையையே எடுத்துக் கொள்ளேன். அவர் எத்தனை பேருக்கு அள்ளிக் கொடுத்திருப்பார்? எத்தனை நிராதரவான குடும்பங்களைக் காப்பாற்றியிருப்பார்? இன்று அவர் உனக்கு வைத்துவிட்டுப் போனது என்ன?''

கோபுவின் முகம் திடீரென்று மாறியது. ''அதைக்கூட நான் பெரிதாகக் கருதவில்லை சித்தப்பா. என் தகப்பனாரை ஒரு அறிஞர், எழுத்தாளர் என்ற கோணத்திலிருந்து நினைத்துத்தான் நான் ஆனந்தப்படுகிறேன். என்றென்றும் நிலைத்து நிற்கக் கூடியதாக எழுத அவர் ஆசை கொண்டார். எழுதவும் செய்தார்: குறிப்பேட்டில் பத்து வரிகளை எழுதிவிட்டுச் சோப்பு தேய்த்துக் கொள்ளப் போவார். சாப்பிடும்போதுகூடப் பல சமயங்களில் தம் நினைவு இராது. என்னைக் கூப்பிட்டு நோட்டை எடுத்துக் கொண்டு வரச் சொல்லி ஏதாவது கருத்துக்களை உதிர்ப்பார். நல்லவற்றையே எழுதி எழுதிக் காய்ந்துப் போன அவருடைய வலது கை பக்கவாதத்தினால் செயலற்றுப் போன அநியாயம் இருக்கிறதே....'' கோபு தலையைக் குனிந்து கொண்டான்.

''சரி, உடை மாற்றிக் கொண்டு சீக்கிரம் புறப்படு கோபு!'' என்று கூறினார் பெரியவர். அவருடைய மேல் துண்டின் முனை இமை ஓரங்களை அனுபவித் திரும்பிற்று.

**ந**கரத்தின் நெருக்கடி மிகுந்த பகுதியில் ஒரு மஞ்சள் கட்டடம். 'வெளியிலே 'மணிமா பவன்' என்று பல மொழிகளில் எழுதப்பட்டுள்ளது. முன்கூடத்திலே ஓர் அதிசய சித்திரம். குழந்தை ஒன்று மணிமா பவனில் தயாரான மிட்டாயைப் பறவை இனங்களுக்குப் பகிர்ந்து அளிப்பது போல்



வரையப்பட்டிருக்கிறது. அழகு கொழிக்கும் கன்னங்கள், பால முருகனின் கருணைக் கண்கள். பறவைகள் எவ்வளவு ஆவலுடன் அந்த மிட்டாய்ப் பொட்டலத்தைப் பார்க்கின்றன!

சுவர்களில் கவினுற வரையப்பட்டிருந்த சித்திரங்களை எல்லாம் கண்டு கோபாலன் பிரமித்து நின்றான். மணிமாப் பருப்பு ஒன்று தன் வரலாற்றைக் கூறுவதுபோல் அமைந்திருந்தது. அரை வட்ட வடிவில் இடப்பட்டிருந்த நாற்காலிகளில் அவன் விரும்பி வந்த உத்தியோகத்துக்காக மனுப் போட்ட பத்துப் பேர்கள் உட்கார்ந்திருந்தனர். அவர்களுடன் கோபுவும் அமர்ந்தான்.

ஒவ்வொருவராகத் தலைமை அதிகாரியின் அறைக்குள் சென்று திரும்பி நேராக வெளியேறினர். முதலாளி என்ன நினைக்கிறார், என்ன கேட்கிறார், எத்தகைய கேள்விக்கு விடை தயாரித்துக் கொள்ள வேண்டும் என்ற ஊகத்துக்கே இடமளிக்காமல் பேட்டி நடந்து கொண்டிருந்தது.

கோபுவின் முறை இறுதியில் வந்தது. செயற்கை உற்சாகத்துடன் முதலாளியின் அறையை நோக்கி அவன் நடந்தான்! நீலக் கதவுக்கு முன்புறம் தரையில் பரப்பப் பட்டிருந்த பலகையின் இணைப்புப் பிரிந்து ஒரு மரச் சட்டம் மேலே தூக்கியிருந்தது. ஒரு கணம் தயங்கித் தன் குதிகாலினால் அதை அழுத்திச் சரியான இடத்தில் பொருத்திவிட்டு முன்னால் நகர்ந்தான்.

''மே ஐ கம் இன் ஸார்?''

''ப்ளீஸ்'' என்ற இனிய பெண் குரல் ஒலித்தது. மங்கை நல்லாள் ஒருத்தி கோபுவை வரவேற்று விசாலமான அறைக் குள் அனுப்பிவிட்டுப் பின்வாங்கினாள்.

எல்லாவித அனுகூல வசதிகளையும் கொண்ட அழகிய அறை அது. தரையில் கயிற்றுப் பாய். நடுவில் பச்சைக் கம்பளம். விரித்த பெரிய நூக்கமர மேஜை. குஷன் நாற்காலிகள். ஒலிபெருக்கி இணைக்கப்பெற்ற தொலை பேசி, அழைக்கும் மணி, அழகிய பேனாக்கள், மசிக்கூடு, நடுவில் யானைக் கொம்பில் தங்கப் பதக்கம் ஒன்று ஊஞ்ச லாடிற்று. மணிலாப் பயிரிலிருந்து மிகச் சிறந்த குழந்தை உணவைத் தயார் செய்த தற்காக அரசாங்கம் அளித்த கௌரவ விருது அது.

ஏதோ எழுதிக் கொண்டிருந்த முதலாளி தலையை நிமிர்த்தாமலே கோபுவை அமரும்படி சைகை செய்தார். ஆசனம் மெத்தென்றிருந்தது. 'கோபாலகிருஷ்ணன் என்பது நீங்கள்தானா?'' என்று கேட்டவாறே முதலாளி தலை நிமிர்ந்தார். அவருடைய கண்களில் வியப்புணர்ச்சி நிலவியது. கோபுவை ஏறிட்டுப் பார்த்தார். எதையோ நினைவுபடுத்திக் கொள்ளும் பாவனை அவர் முகத்தில் மின்னலிட்டது.

தொலைபேசி மணியடித்தது.

''யெஸ், மணிலா பவன்'' நல்ல தெலுங் கின் உச்சரிப்பு. கோபுவுக்குச் சிரிப்பு வந்தது. ஒருவருடைய உச்சரிப்பிலிருந்தே அவர் எந்த மாகாணத்தைச் சேர்ந்தவர் என்று கண்டுபிடித்துவிட முடிகிறதல்லவா?

மேஜை மேலிருந்த ஒலிபெருக்கி தணி வான குரலில் பேசிற்று. ''இன்னும் அரை மணி நேரத்தில் அவர் விமான நிலையத்துக்குப் புறப்பட்டுப் 'போகிறார். உங்களையே அவர் நேரில் வந்து பார்த்திருப்பார். காலையி லிருந்து அவருக்குப் பல ஜோலிகள். ஒரு பத்து நிமிஷமாவது உங்களைக் கண்டு பேச ஆசைப்படுகிறார்.''

''சரி.'' — முதலாளி ஸ்விட்சைக் கீழே தள்ளினார்.

''மன்னிக்கவேண்டும், மிஸ்டர் கோபால கிருஷ்ணன்! நார்வே தேசத்துக்குப் புறப்பட் டுக் கொண்டிருக்கும் ஒரு விஞ்ஞானியை நான் உடனடியாகச் சந்திக்க வேண்டும். இந்த ஸ்தாபனத்துக்கு அவர் பெரும் உதவி செய்திருக்கிறார். அவரைப் பார்த்துவிட்டு உடனடியாகத் திரும்பி வந்துவிடுகிறேன்.''



கோபுவின் முன் ஒரு தடித்த புத்தகத்தைத் தள்ளினார். "இது எங்கள் மணிலாபவனின் சென்ற ஆண்டு அறிக்கை. நான் திரும்பி வரும்வரையில் நீங்கள் இங்கேயே இருங்கள்." அவர் எழுந்தார். கோபுவும் எழுந்து மரியாதை தெரிவித்தான்.

நிலைப் படிக்கு மேல் மாலை அணிவிக்கப்பட்டிருந்த பெரிய புகைப்படத்தை இப்போது தான் பார்த்தான் கோபு. அது முதலாளியின் பார்வைக்கு நேர் எதிரே இருந்தது. படத்தில் கண்டவருக்கு வெள்ளை ஜிப்பா, அங்கவஸ்திரம், சற்றே நீண்ட மூக்கு, முன்புறம் சிறிது வழுக்கை விழுந்த தலை. பெரிய நெற்றி. அது அவனுடைய தந்தையின் புகைப்படம். அப்பாவின் படம் இங்கே எப்படி வந்தது? அதுவும் இந்த வர்த்தக ஸ்தாபனத்தில் அதற்கு இடம் ஏது? கோபு திகைத்துப் போய் நின்றான்.

கொஞ்சம் கொஞ்சமாகப் பழைய நினைவுகள் முன்னுக்கு வந்தன. அவனுடைய தந்தை இந்தத் தெலுங்கானாப் பிரதேசத்தில் சில காலம் வசித்ததுண்டு. சித்தப்பா என்று உரிமையுடன் அவன் அழைக்கும் ஸ்ரீதரனுடன் அப்போதுதான் அவருக்குத் தொடர்பு ஏற்பட்டது. ஹைதராபாத்தில் அப்போதெல்லாம் 'முல்கி' முறை அமுலிலிருந்தது. அதாவது நைஜாம் ராஜ்யத்திலேயே பிறந்து வளர்ந்தவர்களுக்குத்தான் அந்த சமஸ்தானத்தில் நிரந்தர உத்தியோகம் கிடைக்கும். அந்தக் காரணத்தினால்தான் அவனுடைய தந்தை இந்த ஊரில் அதிக நாட்கள் தங்க இயலவில்லை. அந்தச் சிறிய கால இடைவெளிக்குள் அவருக்கு இந்த மனிதருடன் தொடர்பு ஏற்பட்டது எங்ஙனம்?

மறுபடியும் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான் கோபு. அவனிடம் முதலாளி தந்த ஆண்டறிக்கை அவனுடைய கவனத்தை ஈர்த்தது. அது வெறும் விளம்பரத் தாளாக இல்லாமல் ஏதோ ஒரு பிரபல பத்திரிகையின் சிறப்பிதழைப் போல் இருந்தது. முதல் பக்கத்தைப் புரட்டினான். ஹைதராபாத்தின் சார்மினார் தனது கம்பீரமான நான்கு கும்பங்களுடன் காட்சியளித்தது. அடுத்து யதுகிரி நரசிம்மர், பத்ராசலம் ராமர், ஸ்ரீசைல ருத்ரர். தொடர்ந்து ஓர் இந்திய தேசப் படம் மணிலா பவனத்தின் கிளை ஸ்தாபனங்களுள்ள இடங்களைக் காட்டிற்று.

புத்தகம் மூன்று பகுதிகளாகப் பிரிந்திருந்தது. தெலுங்கு, தமிழ், உருது ஆகிய மொழிகள். வள்ளுவரை முகப்புப் படமாகக் கொண்ட தமிழ்ப் பகுதியைப் புரட்டினான் கோபாலன். தெளிவான அச்சு, இடையிடையே சிறு படங்கள். 'வாழ்க்கைப் பாடங்கள்' என்ற பகுதியின் கீழ் மணிலா பவனின் உரிமையாளரே எழுதியிருந்தார். அட! அவர் தமிழரா? கோபாலனுக்கு வியப்பாக இருந்தது. படிக்கலானான்:

'பெரிய கற்றுச் சுவருக்கு இடையே பெரியதொரு வீடு. அதன் முன்புறம் காய்கறிச் செடிகள். வீட்டின் வெளி முற்றத்தில் ஒரு சாய்வு நாற்காலி. அதில் ஓர் இளைஞர் உட்கார்ந்து படித்துக் கொண்டிருக்கிறார். அவருக்குப் பக்கத்தில் ஒரு சிறுவன் உட்கார்ந்து வீட்டுக் கணக்குப் போடுகிறான். வாசற்புறத்தில் கையில் துடைப்பத்துடன் ஒருத்தி நிற்கிறாள். அவளுக்கு முன்பு முரண்டு பிடிக்கிறான் அவளுடைய மகன். "நீ வீட்டுக்குப் போடா, நான் ஐயாவைக் கேட்டு வாங்கி வருகிறேன்" என்று வேலைக்காரி கூறுகிறாள். "அப்புறம் எல்லாம் வித்துப் போகும்" என்று பையன் முணுமுணுக்கிறான்.

"செங்கம்மா! பையன் என்ன வேணும்கிறான்?" நாற்காலியில் உட்கார்ந்திருந்தவர் வினவுகிறார். விநயத்துடன் வருகிறாள் வேலைக்காரி. "அவனுக்கு எட்டணா வேணுமாம் ஐயா!"

"எதற்கு?" என்று அவர் புருவத்தை நெரிக்கிறார்.

"பெடன் பஜாரிலே வேர்க்கடலை, பட்டாணி வாங்கி வீதிகளிலே விற்பனை செய்கிறான். எட்டணா கொடுத்தால் மாலை அதைப் பன்னிரண்டணாவாக்குகிறான்."

"ஏய், இங்கே வா!" — சிறுவனை அவர் விளிக்கிறார்.

உடலைக் குறுக்கியவாறு பையன் உள்ளே நுழைகிறான். அவன் உள்ளே நுழைந்ததும் வீட்டுப் பாடம் செய்து கொண்டிருந்த பையன் "கோலி ஆடலாமா?" என்று சைகையின் மூலம் வினவுகிறான். கிழிந்த நிக்கரை அணிந்து கொண்டிருந்த வேலைக்காரியின் சிறுவன் பதில் ஏதும் சொல்லவில்லை.

அந்த வறுமையின் சின்னத்தை ஏறிட்டுப் பார்க்கிறார் அவர். "இவனை ஏண்டியம்மா, பள்ளிக்கூடத்திலே போடவில்லை?"

"வீட்டிலே இருந்தால் மாதம் பத்து ரூபாய் சம்பாதிக்கிறான். இவனெல்லாம் பள்ளிக்கூடம் போய் என்ன செய்ய வேண்டும் ஐயா? அதுக்கு வசதி ஏது எனக்கு?" செங்கம்மா பதிலுக்கு வினவுகிறாள்.

"சாவித்திரி!" என்று உடனே அவர் மனைவியை விளிக்கிறார்.

இடுப்பில் ஒரு பெண் குழந்தையுடன் அவரது மனைவி வருகிறாள். குழந்தையின் கழுத்தில் ஒரு நீண்ட பொன் சங்கிலி. அதில் ஒரு பெரிய பதக்கம் தொங்குகிறது.

"செங்கம்மாவுக்கு எட்டணாக் கொடு." அவர் எழுந்திருந்து தமது மேஜைக்குப் போகிறார். நோட்டுப் புத்தகம் பிரிகிறது. அன்றைய சிந்தனைப் படத்துக்கு வேண்டிய கரு அவருக்குக் கிடைத்து விட்டது. "செங்கம்மாவின் மகன்..." என்ற தலைப்பில் அவர் எழுதத் தொடங்குகிறார்.....

கையில் ஒரு மூங்கில் கூடை, அதன் மேல் மூடி கவிழ்த்து வைக்கப்பட்டிருக்கிறது. அதில் குப்பல் குப்பலாக வேர்க்கடலை, பட்டாணி, பொட்டுக் கடலை, குச்சி மிட்டாய். நடுவில் துணியிட்ட மண் குடுவையில் அனற் கங்குகள். 'மூங்... பல்லீ... பட்டாணு' சிறுவன் ஓலமிடுகிறான். வீதி வீதியாய் நடக்கிறான்.

பொலாராம் பஸ் ஸ்டாண்ட், கள்ளுக் கடை மூலை, ஹனுமார் கோயில் - ஒவ்வோர் இடமாகச் சுற்றுகிறான். சுமை குறைகிறது. கடைசியில் செட்டியார் கடை ஓரத்திலுள்ள குழாயில் அழுக்குப் போகக் குளிக்கிறான். மறுபடியும் அதே கிழிந்த நிக்கர், சட்டை. குளித்த பிறகு வயிறு கிள்ளுகிறது. கடை

யில் மீதியிருந்த தீனியை ஆவலுடன் பார்க்கிறான். பிறகு மனத்தை அடக்கிக் கொண்டு அவற்றைக் காகிதப் பொட்டலங்களாகக் கூடையின் அடியில் பத்திரமாக வைக்கிறான். குடுவையிலிருந்து சாம்பல் தரையில் கலக்கிறது. இரு மிடறு நீரைக் குடித்த பிறகு வீட்டை நோக்கி நடக்கிறான் அந்தக் குட்டி வியாபாரி.

**நா**ட்களும் மாதங்களும் இதே ரீதியில் நகர்கின்றன. அன்று வியாபாரம் கொஞ்சம் மந்தம். நிராசையுடன் அனுமார் கோயிலின் மூலையை அணுகுகிறான். அங்கே சிறிய ஜனக் கூட்டம். வியாபார நோக்கத்துடன் அந்த இடத்தை நெருங்குகிறான். மூன்றணாவுக்கு விற்றுப் போயிற்று. தண்ணீர்ப் பந்தலில் ஒரு டம்ளர் நீர் குடித்துவிட்டு மறுபடியும் திரும்புகிறான். அங்கே ரங்காட்டம் நடக்கிறது. டைமன், கிளாவர், ஆட்டின், ஸ்பேட், டப்பாவுக்குள் காய்கள் குலுங்குகின்றன. அதைக் கவிழ்த்து வைக்கிறான் ருத்திரதாரி. ''பெட்டு ராஜா, பெட்டு லக்கி ப்ரைஸ்!''

நாணயங்கள் ஒவ்வொரு கட்டத்திலும் விழுகின்றன. மூடியை விலக்குகிறான். மூன்று டைமன், ஒரு ஸ்பேட், காசு குலுங்குகிறது.

சிறுவனுக்கும் நாவில் நீர் ஊறுகிறது. உடலில் ஒரு பரபரப்பு. இடுப்பு முடிச்சை அவிழ்த்துக் காலணாவைக் கிளாவரில் வைக்கிறான். ''ஜெய், பஜரங் பலி.'' குடுகுடுவென்ற ஒலியுடன் காய்கள் குலுங்கி ஓய்கின்றன. மூடி விலகுகிறது. என்ன ஆச்சரியம்? நாலும் கிளாவர். ஓர் அணா. அரை மணி நேரம் பஸ் ஸ்டாண்டில் சுற்றினால் கிடைக்கக் கூடிய கூலி.

அடுத்த முறை, அதற்கும் அடுத்த முறை, இரண்டிலும் வெற்றி. பையனின் உடல் பதறுகிறது. தெரியாமல் இப்படி வீதி வீதியாகச் சுற்றுகிறோமே! இதோ இருக்கிறது பொன் சுரங்கம்!

அடுத்த தடவை அரையணா தோல்வி. பையன் விரலைக் கடித்துக் கொள்ளுகிறான். மெள்ள அங்கிருந்து நழுவியும் விடுகிறான். அது தான் புத்திசாலித்தனத்துக்கு அடையாளம்!

ஆனால் அந்தப் பொன் தூண்டில் அவனைச் சுண்டி இழுத்தது. தினமும் அவன் கோயில் மூலைக்குப் போகத் தொடங்கினான். இறுதியில் ஒன்றரை அணா ஆதாயம். இல்லையானால் நாலணா நஷ்டம், இரண்டில் ஒன்று.

இப்படி நஷ்டம் ஏற்பட்ட அன்றுதான் காசை எதிர்பார்த்து அவன் தாயார் வேலை செய்து கொண்டிருந்த வீட்டை அணுகினான். முன்கூடத்தில் யாருமில்லை. எஜமானருடைய பெண் குழந்தை மண்ணைக் கிளறிக் கொண்டிருந்தது. இவனைக் கண்டதும் ஓர் அறிமுகப் புன்னகை. இரு மல்லிகை மொட்டுக்கள் மாதுளைச் செப்பில் பளபளக்கின்றன. பையன் ஒரு குச்சி மிட்டாயை எடுத்து அதனிடம் கொடுத்தான். குழந்தையைத் தூக்கி அணைத்துக் கொண்டான். அதன் மலர் உடலெல்லாம் மல்லிகைத் தூளின் நறுமணம். அதனுடைய கழுத்துச் சங்கிலியில் பொற்பதக்கம் மின்னிற்று. மதலையைத் தோட்டத்துக்குத் தூக்கிக் கொண்டு போனான். இன்னொரு மிட்டாயை அதனிடம் கொடுத்துப் பதக்கத்தை மட்டும் சங்கிலியிலிருந்து நீக்கிக் கொண்டு மெள்ள நழுவி விட்டான். உடலில் உஷ்ணம் ஏறிற்று.

அது வரையில் எல்லாம் சுலபமாகத்தான் இருந்தது. மார்வாடி கடையில் அந்தப் பதக்கத்தை விற்கக் கொண்டு போன போது தொடக்க நிலைகூடச் சுகமளித்தது. சேட் ஜோதூலன்லால் அவனைக் கடையினுள் உட்கார வைத்து மிட்டாயும் தேநீரும் கொடுத்தார். ஆனால் அடுத்த அரை மணி நேரத்துக்குள் கடைக்குப் போலீஸ்காரர் ஒருவர் வந்து விட்டார். பொலாராம் போலீஸ் ஸ்டேஷனில் அவன் பட்ட அடியையும் உதையையும் ஆயுள் உள்ள வரையில் மறக்க மாட்டான். சமயத்தில் அவர் வந்து காப்பாற்றியிரா விட்டால் அவனுடைய உயிரே போயிருக்கும். அதுவும் அவர் நிலைமையை எப்படிச் சமாளித்தார்? அந்தப் பொற்

## காமகோடியின் கருணைமொழி



அழகு. அழகு என்றால் எது அழகு? அன்புதான் அழகு. காருண்யம்தான் லாவண்யம். ஒரு வேளை சாப்பிடாவிட்டால் ஒரு நாள் ஜுரம் அடித்தால், சிறிது கோபதாபம் வந்தால் முகத்தின் அழகு போய்விடுகிறது. ஆனால் லாவண்யமாகவும் காருண்யமாகவும் உள்ள அம்பாளின் அருளைப் பெற்றால் அதன் அழகு மறையாமல் நிற்கிறது. இந்த அழகு குழந்தையின் அழகு. தெய்வத்தை ஏன் அம்பாளாகப் பார்க்க வேண்டுமென்றால் அம்மாவின் எதிரில்தான் காம உணர்ச்சி நாசமாகிறது; நாம் குழந்தையாகிறோம். இரண்டாவதாக, உலக சகோதரத்துவம் என்று பேசுகிறோமே, அது போல் நாம் எல்லோரும் சகோதரர்கள் என்றால் நம் எல்லோருக்கும் பொதுவாக ஒரு அம்மா இருக்க வேண்டும். உருவமில்லாத கடவுளை உருவத்தோடு காணவேண்டும் என்றால், பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத ஒரு முகம் நமக்கு வேண்டும். எல்லோருக்கும் நல்லதே செய்ய வேண்டும் என்ற எண்ணத்துடன் எல்லாருக்கும் தாயாக இருக்கும் ஒருத்தியின் முகம்தானே அப்படி இருக்கும்? அவளுடைய கருணையே நமக்குச் சிறந்த அலங்காரம்.



## கதவில்லாத கிராமம்

அகமதாபாத் மாவட்டத்தில் தெவாலம் தாலூக்காவின் ஸிங்களப்பூர் என்றொரு கிராமம். இந்தக் கிராமத்தில் பெரும்பாலோர் விவசாயிகள். இக்கிராமத்தில் ஓர் அதிசயம், பல தலைமுறைகளாக இங்கு திருட்டு என்பதே நிகழாதிருப்பது தான். இத்தனைக்கும் இங்குதான் திருட்டு நடக்க அதிக வாய்ப்பு உள்ளது. ஏனெனில், இந்த அதிசய புரியில் ஒரு வீட்டுக்காவது வாசற் கதவே கிடையாது. பூட்டு — சாவி உபயோகிப்பதற்கே இந்தக் கிராம வாசிகளுக்குத் தெரியாது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். வீட்டை விட்டு எங்காவது வெளியில் செல்வதென்றால் பணத்தையும் மற்ற விலை மதிப்பான பொருள்களையும், வீட்டிலேயே திறந்த வெளியில் போட்டுவிட்டுப் போவார்களாம். அப்படி யிருந்தும் இங்கு திருட்டுப் போவதில்லை !

— வி.

பதக்கம் அவருடைய திறமைக்குச் சான்றாக அளிக்கப்பட்டது. அதிலே அவருடைய பெயர் பொறிக்கப்பட்டிருக்கிறது என்ற விவரம் அப்போதுதான் அந்தச் சிறுவனுக்குத் தெரிய வந்தது. அந்த நிகழ்ச்சியை இன்று நினைத்தால்கூட உடம்பு சிலிர்க்கிறது.

"அந்தப் பதக்கத்தின் காது இற்றுப் போயிருந்தது. அதைச் சரி செய்து வருமாறு கொடுத்தனுப்பினேன். அந்தப் பையன், அவனுடைய தாயார் இருவருமே எங்கள் வீட்டில் தான் வேலை செய்கிறார்கள். இரண்டு பேருமே கண்ணியமானவர்கள். அந்த மார்வாடி தான் இவன் கூறியதைத் தவறாகப் புரிந்து கொண்டிருக்க வேண்டும்." அவர் அப்படித் தான் கூறினார்.

போலீஸ் ஸ்டேஷனை விட்டு வெளியேறிய தும் அவர் சிறுவனின் தலையைக் கோதி விடுகிறார். "வருத்தப்படாதே, தம்பி! வீட்டுக்குப் போய்ச் சுடுதண்ணீர் வைத்துக் குளித்தீ யானால் உடம்பு வலி சரியாகி விடும். ஏதாவது சாப்பிட்டாயா?" அது தெய்வத்தின் குரல்.

அடுத்த வாரம் அந்தப் பையன் அவரோடு பஸ்ஸில் ஏறுகிறான். அது நகரத்துக்கு வெளியே எங்கோ போய் நிற்கிறது. அங்கே ஒரு பெரிய பள்ளிக்கூடம். நூற்றுக்கணக்கான சிறுவர்களும் சிறுமியரும் படிக்கிறார்கள், களிக்கிறார்கள், பணி புரிகிறார்கள். அது பெரிய தேன்கூடு.

தூய வெள்ளை வேட்டியும், ஜிப்பாவும் அணிந்த சிவந்த ஆகிருதியை உடைய பெரியவரின் முன்பு நிற்கிறார்கள் இருவரும்.

"இந்தப் பையன் என் குழந்தைமாதிரி என்று வைத்துக் கொள்ளுங்கள். மிகுந்த சுறுசுறுப்புடையவன். எந்த வேலையையும் முகம் சுளிக்காமல் செய்வான். உங்கள் நிறுவனத்துக்கு நல்ல பெயர் கொண்டு வருவான்."

பையனை விட்டுப் பிரியும் போது அவருடைய கண்கள் கலங்குகின்றன. அவனிடம் ஒரு சிறிய புத்தகத்தையும் பிருச்சையும் தருகிறார். மழமழவென்ற அந்தச் சலவைக் கல் புருச்சில் பொக்கைவாய்க் கிழவரின் படம். அது யார் என்று அப்போது அவனுக்கே தெரியாது.

"பையா — ஒரே ஒரு விஷயம், எல்லாத் தவறும் செய்யலாம். ஆனால் பொய் மட்டும் சொல்லக் கூடாது. உண்மை எல்லாச் செயல்களுக்கும் கவசம். எப்போதும் உண்மை பேசுவது என்று வைத்துக் கொண்டு விட்டால் யாராலும் உன்னால் தப்பே செய்ய முடியாது."

அவர் சொல்வதையே கவனித்து நிற்கிறான் சிறுவன். அவருடைய உருவம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறுகித் தேய்ந்துவிடுகிறது.

அவரை மறுபடியும் அவன் பார்க்கவே இல்லை. அந்தப் பிரதேசத்தை விட்டே அவர் வேறு ஊருக்குச் சென்று விட்டதாக அவனுடைய தாயார் கூறினாள். ஆனால் அவர் இறுதியாகக் கூறிய சொற்களை இறுக்கப் பிடித்துக் கொண்டான். அவர் தந்த புத்தகத்திலும் அந்த மறைச் சொல் இருந்தது. 'பொய்யாமை பொய்யாமை ஆற்றின்...'

**க**தையை அத்துடன் முடித்திருந்தார் முதலாளி.

"மன்னிக்க வேண்டும். உங்களைக் காக்க வைத்து விட்டேன்" என்று கூறியவாறே முதலாளி அறையினுள் நுழைந்தார். நரம் கட்டியிருந்த கோபுவினுடைய கண்களையும் அன்று அறிக்கையில் அவன் பிரித்து வைத்திருந்த பகுதியையும் பார்த்தார்.

கோபால கிருஷ்ணன் உணர்ச்சியுடன் பேசினான். "என் தகப்பனாரைப் பற்றி என் குடும்பத்தில் நல்ல அபிப்பிராயம் கிடையாது. உலகத்தோடு ஒட்டிவாழத் தெரியாத புதிர், தாமாகக் கஷ்டத்தை வரவழைத்துக் கொள்ளும் ஜீவன் என்று எண்ணி யிருந்தேன்."

.....ராபர்ட் ப்ரௌனிங் என்று ஞாபகம். அவர் ஒரு வன வேடனைப் பற்றி எழுதுகிறார். அவன் எய்த ஈட்டி ஒன்று ஒரு மலைப் பகுதியைத் தாக்குகிறது. பல காலத்துக்குப் பிறகு வேடன் தனது இலச்சினை பொறித்த ஈட்டியைக் காண்கிறான். அது பாய்ந்த இடத்திலிருந்து ஊற்று ஒன்று பெருகிச் சுனையை நிரப்பித் தன் சுற்றுப்புறங்களைப் பசுமையாக்கிப் பல உயிர்களை வாழ வைக்கிறது. சுனையில் பல கன்று காலிகள் நீர் அருந்துகின்றன. தனது ஈட்டி விளைவித்த செயலைப் பல ஆண்டுகளுக்குப் பிறகு கண்ட வேடன் மெய்சிலிர்த்து நிற்கிறான்.....!

கோபால கிருஷ்ணன் நாற்காலியைப் பின்னுக்குத் தள்ளி எழுந்திருந்து அவருக்கு வணக்கம் தெரிவித்துவிட்டுத் திரும்பி நடந்தான். மேலேயிருந்த படத்துக்கு அணிவிக்கப் பட்டிருந்த பெரிய மாலையிலிருந்து மலர் இதழ் ஒன்று அவன் மேல் உதிர்ந்ததைக் கூடக் கவனிக்கவில்லை.



# யாரோ இவர் யாரோ?

'ஜோ'

## அத்தியாயம் 6

"மடையன்! இவ்வளவு நெருக்கமாக லாரியை ஓட்டி வருகிறானே!" என்று முணுமுணுத்துக் கொண்டே தனது பழைய மாடல் காரைச் சற்று மெதுவாக ஓட்டினார் டாக்டர் மேகநாதன்.

எதிராஜ் ஏறி வந்த லாரி டாக்டர் மேகநாதன் வண்டியை மோதிவிடுவது போல் நெருங்கி, அதை முந்திக் கொண்டு சென்று சற்றுத் தொலைவில் தெருவை அடைத்துக்கொண்டு நின்றது.

டாக்டர் மேகநாதன் மேலே தொடர்ந்து செல்ல முடியாமல் தமது காரை நிறுத்தி இறங்கினார். வெளியிலிருந்து எதிராஜும் இன்னும் இருவரும் இறங்கி அவரை நோக்கி வந்தனர்.

"ஏன்யா! ஏதாவது அறிவு இருக்குதா? லாரியை இப்படி நடுத்தெருவிலே நிறுத்தினால், நான் எப்படிய்யா வண்டியை ஓட்டறது?" என்று எரிந்து விழுந்தார் டாக்டர் மேகநாதன்.

எதிராஜ் தனது கட்டுமஸ்தான தேகத்தை ஒரு முறை சிலிர்த்துக் கொண்டான். "நீங்கதானே டாக்டர் மேகநாதன்?"

"ஆமாம்! உனக்கு எப்படித் தெரியும்?" தாம் அவ்வளவு பிரபலஸ்தரா என்று ஆச்சரியத்தோடு எண்ணியபடியே கேட்டார் மேகநாதன்.

"சரி, லாரியிலே ஏறு!" என்றான் எதிராஜ்.

"ஏன்?"

"ஏறுய்யா?"

"என்ன மிரட்டறே? யார் நீ?"

"டேய்!" பக்கத்தில் இருந்தவனுக்கு எதிராஜ் சைகை காட்ட அவன் டாக்டர் மேகநாதனின் கழுத்திலே கையை வைத்து வளைத்தான். அந்த அரவணைப்பில் சிக்கிய மேகநாதன் கூக்குரலிட்டுத் திமிரப் பார்க்கவே, எதிராஜ் அவர் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை வைத்தான். தரதரவென்று இழுத்து அவரை லாரியில் போட்டு, வாயிலே துணியை அடைத்துக் கையைக் கட்டிப் போட்டனர் எதிராஜின் நண்பர்கள்.

"இழுத்துக்கிட்டுப் போய் அடைச்சு வையுங்கடா. ஆள் சாகாமல் பார்த்துக்குங்க. அப்பாலே நான் உங்களைப் பார்க்கிறேன்" என்று அவர்களுக்கு உத்தரவிட்டு விட்டு, மேகநாதனின் காரில் ஏறி அமர்ந்து, சென்னையை நோக்கிக் காரை ஓட்டினான்.

லாரி டாக்டர் மேகநாதன் சகிதம் புறப்பட்டது. தம்மை ஏன் இவ்வாறு அடித்துக் கட்டிப் போட்டு எடுத்துச் செல்கிறார்கள் என்றே மேகநாதனுக்குப் புரியவில்லை. டிரைவரைக் கேட்டுப் பார்க்கலாம் என்று அவன் பக்கம் திரும்பி, "பேப்பா பைப பிப்ப ப்பப் பபாபாபூ" என்றார். வாயில் துணி அடைக்கப்பட்டிருந்ததால் அவர் என்ன பேசினார் என்பது அவருக்கும், ஆண்டவனுக்கும் மட்டுமே புரிந்தது. இப்படித் தம்மைப் பேசக்கூட முடியாமல் செய்து விட்டார்களே என்ற ஆத்திரத்தில் லாரியில் இருந்தவர்களையும் தம் காரை எடுத்துப் போனவனையும் மனதாரத் திட்ட ஆரம்பித்தார் டாக்டர் மேகநாதன். "புப்ப பெபைபி பப்ப புப்பெப்பா பெப் பப்பேன் பாபு, பபி பப்பா! பா!"

அடுத்த நாள் காலை சுகஜீவர பவனத்திலிருந்து கிராப் தலையோடு வெளியே வந்தான் முத்து. டாக்டராகப் போகும்போது குடுமியோடு சென்றால் யாரும் நம்பமாட்டார்கள் என்று ரவி கூறியதை ஒப்புக் கொண்டு, அவன் சொற்படியே குடுமியையும் தியாகம் செய்தான். இப்போது தலையிலே ஒன்றுமே இல்லாதது போல் ஓர் உணர்ச்சி முத்துவுக்கு ஏற்பட்டது.

அவனுக்குப் பலவாறாகத் தைரியம் கூறி அவனை ராஜரத்தினம் வீட்டுக்குப் புறப்படச் செய்தான் ரவி.

முத்துவுக்குக் கடைசியாக ஒரு சந்தேகம் ஏற்பட்டது. ''ரவி! நான் டாக்டர் இல்லேன்னு தெரிஞ்சுட்டா அவங்க என்னடா செய்வாங்க?''

''போலீஸிலே அவங்க புகார் கொடுப்பாங்க!''

''போலீஸ் என்ன பண்ணுவாங்க?''

''டேய், முத்து! இதெல்லாம் எதுக்குடா வீண் பேச்சு? நீ டாக்டர் இல்லேன்னு தெரிஞ்சால் வம்புதான். நீ டாக்டர் மாதிரி நடந்துக்கிட்டால் பயமே இல்லே.''

''டாக்டர் மாதிரி என்னாலே எப்படிடா நடந்துக்க முடியும்? எனக்கு மருந்தைப் பத்தியோ, வியாதியைப் பத்தியோ ஒண்ணுமே தெரியாதே!''

''அப்போ நீ ஸ்பெஷலிஸ்ட்!''

''ஸ்பெஷலிஸ்டா !''

''ஆமாம். ஸ்பெஷலிஸ்டெல்லாம் என்னடா செய்வாங்க. டி. பி. வியாதிக்காரனை ஒரு சாதாரண டாக்டர் ஸ்பெஷலிஸ்டு கிட்டே அனுப்புவார். ஸ்பெஷலிஸ்ட் அவனைப் பார்த்துவிட்டு 'உனக்கு டி. பி.தான்' என்று சொல்லி அனுப்புவார். அவருக்குப் பீஸ். வைத்தியம் பார்க்கிறது சாதாரண டாக்



டர் வேலே. வியாதிக்குச் சர்டிபிகேட் கொடுக்கிறது ஸ்பெஷலிஸ்டு வேலே!''

''டேய்! நீ சொல்றதே, எனக்குப் புரியலேயே!''

''நான் பேசறது உனக்குப் புரியாது.''

''ஸ்பெஷலிஸ்டு மாதிரி பேசறியே!''

''முத்து! கவலேப்படாதே, மருந்தைப் பத்தியோ, வியாதியைப் பத்தியோ நீ ஒண்ணும் வாயைத் திறக்காதே. அதைத் தவிர மத்ததெல்லாம் பேசு. ஊர் வம்பைக் கொட்டு. இப்ப டாக்டரெல்லாம் அப்படித்தான் செய்யறாங்க. டைபாய்டைப் பத்திக் கேட்டால், 'இப்படித்தான் பாகவதருக்கு வயித்திலே வலி வந்தது''ன்னு சொல்லு. பல் வலிக்கிறதேன்னுட்டு சொன்னால், 'ரேஷன் சாப்பாடே மோசம்'னு சொல்லு. சம்பந்தா சம்பந்தமில்லாமல் ஊரிலே நடக்கிற சினிமாவைப் பத்தியெல்லாம் பேசு. நீ டாக்டர்னு நம்பிடுவாங்க!'' என்று ரவியும் சம்பந்தமே இல்லாமல் ஏதேதோ உளறிக் கொட்டினன்.

யாராவது அதிகமாகப் பேசிக் கொண்டே போனால் அவர்கள் பேசுவது பெரிய உண்மை என்றும், அப்படிப் பேசுபவர்களை மேதையென்றும் எண்ணிப் பாராட்டுவது நமது பண்பாடு. முத்துவும் இதற்கு விதிவிலக்கல்ல. ரவியின் பிரசங்கத்தைக் கேட்டு அப்படியே அயர்ந்துநின்றான்.

இதுதான் சமயம் என்று ரவி, ''அதனாலே நீ தைரிய



மாக டாக்டராகப் போடா!'' என்று தூண்டினான்.

சாதாரணத் தைரியமே இல்லாத முத்துவுக்கு இப்போது ஓர் அசாதாரண அசட்டுத் தைரியம் பிறந்துவிட்டது!

''ஆல் ரைட், ரவி! நான் டாக்டராகப் போறேன். என்ன நடக்கிறதுன்னுதான் பார்க்கலாமே!'' என்று கூறினான் முத்து.

''வெரிகுட்! நீ ராஜரத்தினம் வீட்டுக்குப் போ. நான் சின்னதுரை வீட்டுக்குப் போறேன்!''

''ரவி! நீ அவருடைய பரம வைரி சபாபதியினுடைய மகன்தான் என்று தெரிஞ்சுக்கப் போகிறார். ஜாக்கிரதை!'' என்று எச்சரித்தான் முத்து.

''அவரோ என்னைப் பார்த்ததில்லே. என் பேர்கூடத் தெரியாது. அதனாலே எனக்குப் பயமே இல்லே. சித்ரா எனக்குத்தான்னு பிரும்மா அவ தலேயிலே எழுதியிருக்கான்டா!''

''தலையெழுத்துன்னு என்ன அர்த்தம்னு இப்பத்தான்டா எனக்குப் புரியுது'' என்று பேச்சுக்கு முற்றுப் புள்ளி வைத்து விட்டு முத்து ராஜரத்தினம் வீட்டுக்குப் புறப்படத் தயாரானான். ரவி வாங்கி வந்திருந்த ஸ்டெதாஸ்கோப், கைப் பை, இஞ்செக்ஷன் ட்யூப், தூக்க மாத்திரைகள், தெர்மாமீட்டர், பயந்த உள்ளம், குழம்பிய மூளை, இருட்டுப் பார்வை ஆகியவை சகிதம் புறப்பட்டான் முத்து. அவனை அனுப்பி விட்டு ரவியும் சின்னதுரை வீட்டுக்குப் புறப்பட்டான்.

சின்னதுரையின் வீடு அண்ணாமலைபுரத்தில் இருந்தது. சகல வசதிகளும் பெற்ற ஒரு பங்களா. சின்னதுரை எதிலுமே பகட்டை விரும்பி வாழ்ந்து வந்தார். நல்ல மனிதர்தான். ஆனால் முன் கோபி. ஒன்றும் அறியாதவர். ஆனால் பிறர் சொல்லியும் புரிந்து கொள்ள மாட்டார். இப்படிப்பட்ட ஒரு பிரகிருதியின் மனைவி பார்வதியம்மாளோ சாந்த ஸ்வரூபி. பெரிய மனிதர்கள் வீட்டுப் பெண்மணிகளெல்லாம் தங்கள் வயதையும் மறந்து நவநாகரிக நாரீமணிகளாகக் காட்சியளிக்க முயற்சி செய்யும் இந்தக் காலத்தில்கூடப் 'பதவிசாக'க் காட்சியளிக்கும் ஒருசில பெண்மணிகளில் பார்வதியம்மாளும் ஒருத்தி. இவர்களது மகள் சித்ராவோ தாயாரின் பண்பும், தந்தையின் துடுக்குத்தனமும் கலந்த ஒரு கதாபாத்திரமாகத் திகழ்ந்தாள்.

அன்று சின்னதுரை ஹாலிலே அமர்ந்து காலைப் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தார். முந்தைய நாள் பந்தயத்தில் ஜெயித்த சனீசுவரன் படத்தைப் பார்த்து அவர் அகமகிழ்ந்து கொண்டிருந்த போது தான் அவருக்கு ரவியை வீட்டுக்கு வரச் சொன்னது நினைவுக்கு வந்தது.

''பார்வதி! பார்வதி!'' என்று உடனே மனைவியை அழைத்தார்.

''என்ன கூப்பிட்டீங்களா?'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் பார்வதி. இது நமது விசித்திரப் பழக்கங்களில் ஒன்று. கூப்பிட்டது காதில் விழுந்துதான் போவோம். போனவுடன் கேட்கும் முதல் கேள்வி: ''கூப்பிட்டீங்களா?'' சினிமாத் தியேட்டரில் நண்பரைச் சந்திப்போம். அவர் சினிமா பார்ப்பதற்கல்லாமல் வேறு எதற்கும் அங்கு வந்திருக்க முடியாது. இருந்தாலும் அவரைப் பார்த்தவுடன் நாம் கேட்கும் கேள்வி: ''என்ன சினிமா பார்க்க வந்தீங்களா?'' இதே மாதிரி ஒரு ஹோட்டலில் நமக்குத் தெரிந்தவர்களைச் சந்திக்கும் போது, ''என்ன டிபன் சாப்பிட வந்தீங்களா?'' என்றுதான் கேட்கிறோம்.

ஒரு குறிப்பிட்ட நிலையில் ஒரு மனிதன் இன்ன காரியத்தைத்தான் செய்வான் என்று நன்றாக அறிந்திருந்தும், 'ஒரு வேளை செய்யாமல் இருந்தாலும் இருக்கலாமே' என்ற ஓர் அசட்டு நம்பிக்கையே இந்தப் பழக்கத்துக்குக் காரணம் என்ற மாபெரும் உண்மையை மனோதத்துவ ரீதியில் ஆராய்ந்தால் கண்டுபிடிக்கலாம்.

''பார்வதி! இன்னிக்குக் காலை டிபன் காப்பி எல்லாம் அமர்க்களமாக இருக்க வேணும்! அந்த ரவி வந்தானானால் அவன் அப்படியே அசந்து போயிடணும்'' என்றார் சின்னதுரை.

''யார் அந்த ரவி? இப்படி ராஜ மரியாதை கொடுத்துப் பிரமாதப் படுத்தறீங்க?'' என்றாள் பார்வதி.

அப்போது மாடிப் படியிலிருந்து இறங்கி வந்து கொண்டிருந்த சித்ரா, ''அப்பாவுக்குக் கிடைச்சிருக்கிற புது சிநேகிதர் அவர். நேத்து குதிரைப் பந்தயத்திலே சரியான டிப்ஸ் கொடுத்துட்டாரு. அதுதான் அப்பா இப்படி ஆடறாரு'' என்று ஆத்திரத்தோடு விளக்கம் கூறினாள்.

''ஐயோ! என்னமா டிப்ஸ் கொடுக்கிறான் பயல்! சனீசுவரன்! சனீசுவரன்!'' என்று மெய்ம்மறந்து கூறினார் சின்னதுரை.

''உங்களைப் பிடிச்ச சனீசுவரன் தான் அவர். இனி மேல் குதிரைப் பந்தயத்துக்குப் போகிற பழக்கம் உங்களுக்கு அதிகமாகப் போகிறதே ஒழியக்

# இனிமைக் காவியம்

CIBA

இதயம் திறந்த பேச்சினிலே
புத்தம் புதிய இரகசியங்கள்—
துர்க்கந்தம் அகற்றும் க்ளோரோபைல்
கொண்ட பினகா க்ரீன் துணையிருப்பின்:
பேசும் பேச்செல்லாம்
இனிமைக் காவியமே!



குறையப் போறதில்லே!'' என்று சித்ரா கூறியதைச் சின்னதுரை லட்சியமே செய்யாமல், ''அந்தப் பயல் டிப்ஸ் கொடுப்பான். நான் பணம் கட்டுவேன். குதிரை ஜெயிக்கும்'' என்றார்.

''இந்த வீடு குட்டிச்சுவராகும்'' என்று முடித்தாள் பார்வதி.

''நீ கவலைப்படாதேம்மா. அந்த ரவிக் காச்சு, எனக்காச்சு. அப்பா குதிரைப் பந்தயத்துக்குப் போறதை நிறுத்தாமல் விடறதில்லை. ஒரு கை பார்த்து விடறேன்!'' என்று சபதமிட்ட சித்ரா, திடீரென்று வாசல் பக்கம் பார்த்து விட்டு மாடிப் படியில் வேகமாக ஏறி மேலே போய் விட்டதைக் கவனித்துச் சின்னதுரை வாசல்புறம் திரும்பினார்.

ரவி வீட்டினுள் நுழைந்தான்.

''வாப்பா, ரவி, வா!'' என்று எழுந்து நின்று அவனை வரவேற்ற சின்னதுரை தம் மனைவிக்கு அவனை அறிமுகப்படுத்தி வைத்தார். தான் வந்தது பார்வதிக்குச் சற்றும் பிடிக்கவில்லை என்பதை அவள் முகத்திலிருந்தே ரவி கண்டு கொண்டான். அவள் கொஞ்சமாவது புன்சிரிப்புடன் வரவேற்க வேண்டுமே? ஆனால் 'ஹோம்' டிபார்ட்மெண்டைச் சரிப்படுத்தினால்தானே மேற்கொண்டு தன் காரியத்தைச் சாதித்துக் கொள்ளலாம்?

''வணக்கங்க! பார்த்தவுடனே மனசுலே பட்டதைச் சொல்லிடறேன். உங்க முகத்திலே அப்படியே லட்சுமிகளை தாண்டவமாடுது'' என்று பார்வதியின் தலையில் 'ஐஸ்' வைத்தான்.

முகஸ்துதிக்கு மயங்காதவர் உண்டோ? பார்வதியின் முகம் மலர்ந்தது. ''உட்காருங்களேன். நிற்கிறீங்களே!'' என்று உபசரித்தாள்.

''பரவாயில்லீங்க. வாழ்க்கை ஒரு தேர்தல் மாதிரி. நின்னுத்தான் உட்கார முடியும்!'' என்று வியாக்கியானம் செய்தான் ரவி, தன் அஸ்திரம் பலித்து விட்டதை எண்ணி.

ரவி கூறியதைக் கேட்டதும் சின்னதுரை பெருமையோடு பார்வதியைப் பார்த்து, ''எப்படிப் பேசறான், பார்த்தியா? ரவி பெரிய அறிவாளி. உன் அண்ணன் மகன் மாதிரி இல்லே'' என்றார் — ரவிதான் பார்வதியின் அண்ணன் மகன் என்பதை அறிந்து கொள்ளாமல்.

ரவி ஒன்றுமே தெரியாதவன் போல், ''யாருங்க அது, இவங்க அண்ணன் மகன்? என்ன பேரு?'' என்று மெதுவாக விசாரித்தான்.

''அவன் பேரு யாருக்குத் தெரியும்? எவனோ ஒரு உதவாக்கரை'' என்று சலிப்போடு கூறினார் சின்னதுரை.

''அப்படியெல்லாம் சொல்லாதீங்க. அம்மா மனசு கஷ்டப்படும். ஆமாம், இவங்க அண்ணன் மகன் இங்கேதான் இருக்காரா?'' என்றான் ரவி.

''இந்த வீட்டு வாசலை மிதிப்பானா அவன்? தொலைச்சப்புடுவேன், தொலைச்சு. அவன் அப்பன் ஓர் அயோக்கியன். அவன் பிள்ளை அதை விட மகா அயோக்கியன்!''

திடுக்கிட்ட ரவி, ''அவன் அப்பா அயோக்கியனாக இருக்கலாம் சார்! அதனாலே பையன் அயோக்கியனாக இருப்பானா?'' என்று சமாளித்தான்.

''நல்லாக் கேளு, தம்பி!'' என்று ஆமோதித்தாள் பார்வதி. ''என் அண்ணன் மகன் இந்த வீட்டுக்கு மாப்பிள்ளையாக வரணும். நான் பார்க்கணும்!'' என்று வேண்டிக் கொண்டாள்.

''வருவாரம்மா, கவலைப்படாதீங்க'' என்று ரவி ஆறுதல் அளித்தான், பக்தனுக்கு அருளும் பகவான்போல!

''நீயே சொல்லிட்டே தம்பி, உன் வாக்கு அப்படியே பலிக்குதுன்னு இவர் சொல்றாரு. அது போதும் எனக்கு.''

சின்னதுரை குறுக்கிட்டார்: ''இவன் சொன்னால் மாப்பிள்ளை வரமாட்டான். குதிரைதான் வரும்! சரி! சரி! பார்வதி, நீ போய் டிபன் காப்பியெல்லாம் ரவிக்குக் கொண்டா!'' என்று மனைவியை வேண்டா வெறுப்பாக உள்ளே அனுப்பி வைத்தார்.

ரவி ஆரம்பித்தான். ''சித்ரா எங்கே ஸார், காணோம்?''

''மேலே இருக்குது. அவளுக்கு உன் மேலே கோவம்!''

''ஏன்?''

''என் ரேஸ் பழக்கத்தை நீ அதிகமாக்கிடுவேன்னு சித்ரா பயப்படுறாள். இவ்வளவு 'மாடர்ன்' இருக்கிறாள். ஆனால் இந்தக் குதிரைப் பந்தயம் மட்டும் அவளுக்குப் பிடிக்கலே! இவள் ஓட்டப் பந்தயம் ஓடலாமாம். ஆனால் குதிரை ஓடக் கூடாதாம்!''

''நீங்க கவலைப்படாதீங்க சார்! நான் சித்ராவை மாத்திப்பிடறேன்!''

''அது நடக்காது. அவள் என்னையே மாத்திப்பிடறேன்னு பிடிவாதமா இருக்கிறாள்!''

''நீங்க ஒண்ணு!.....பாருங்க ஸார்! சித்ராவே வந்து இன்றைக்கு உங்களை ரேசுக்கு வாங்கன்னு கூப்பிடும்படி வைக்கிறேன்.''

''எனக்கு நம்பிக்கையில்லே.''

ரவி அவரைப் பார்த்துப் புன்னகை செய்தான். ''ஸார்! என்னைப் பத்தி உங்களுக்குத் தெரியாது. நினைச்ச காரியத்தைச் சாதிக்காமல் விடமாட்டேன்.

'எதிராஜ் நம்மிடம் டெலிபோனில் சொன்னபடி அவன் ஆட்களில் ஒருவனை டாக்டராக அனுப்பி யிருப்பானோ!' என்று நினைத்துக்கொண்டே முத்துவை நோக்கி முன்னேறினான் சிங்காரம்.

முத்துவுக்கு இப்போது சப்தநாடியும் அடங்கி விட்டது. 'குருட்டுத் தைரியத்தில் வந்து விட்டோமே. எவ்வளவு பெரிய பைத்தியக்காரத்தனம்?' என்று மனம் நொந்தான்.

'பைத்தியக்காரன் மாதிரி இருக்கிறான். இவனையா எதிராஜ் அனுப்பி யிருப்பான்?' என்று சிங்காரத்தின் மனம் நொந்தது.

'ஐயோ, இவனை ஏன் வேலைக்காரனாக வைத்தார்கள் இவர்கள்? திருடன் மாதிரி இருக்கிறானே. இவன் ஒரு அடி கொடுத்தால் நாம் எந்த மூலை?' என்று எண்ணி நடுநடுங்கிப் போனான் முத்து.

'என் கையாலே ஒரு அறை தாங்க மாட்டான்! நம்ம ஆளாக இருப்பானா இவன்?' சிங்காரம் சிந்தித்துக்கொண்டு முத்துவை நெருங்கினான்.

சிங்காரம் பக்கத்தில் வந்து நின்றதும் முத்துவின் நாக்கு அவனுடைய மேல் வாயில் ஒட்டிக் கொண்டது. 'முத்து! அவ்வளவுதான்! உன் இஷ்ட தெய்வத்தை வணங்கு! உன் ஆத்மா சாந்தியடையட்டும்!' என்று அவன் மனம் ஓலமிட்டது.

சிங்காரம் நினைத்தான்: 'இவன் சமிக்ஞை ஏதும் செய்யவில்லையே! எதிராஜ் சொன்னபடி மூன்று முறை இருமினால் அல்லவா நம் ஆள்தான் என்று தெரிந்து கொள்ளலாம். பிறகு வந்த காரியத்தைக் கவனிக்கலாம்.'— இப்படி ஓடியது அவன் மனம்.

முத்துவோ, 'வந்த காரியத்தை உண்மையாக ஒளிக்காமல் மறைக்காமல் இவனிடம் கூறிவிடலாமா? நமக்கேன் வம்பு' என்று எண்ணமிடலானான்.

முத்து மேல் வாயில் ஒட்டிக் கொண்ட நாக்கைப் பிரித்து இழுத்துப் பேச முயன்றான். முடியவில்லை. ''உக்ஹூம்! உக்ஹூம்! உக்ஹூம்!'' சினிமாவில் உயிர் துறக்கப் போகும் தந்தைமார்கள் இருமுவது போல் மூன்று முறை இருமினான் முத்து! சிங்காரத்தின் முகம் மலர்ந்தது!

''என்ன அண்ணே இது! முதல்லேயே ஜாடை காட்டியிருக்கக் கூடாது! நான் ஒரு நிமிஷம் அப்படியே 'அம்பேல்' ஆயிட்டேன்!'' என்றான் சிங்காரம் முத்துவின் தோளில் கையைப் போட்டவாறே!

முத்து விழித்தான்.

சிங்காரம் சிரித்தான். ''ஆ!.... படா கணக்கா முளிக்கிறியே. என்னையே 'டெஸ்ட்' செய்யிறியா! நான் நம்ம ஆள்தான் வாத்தியாரே! நம்மகிட்டயே டாக்டர் கணக்கா பார்க்கிறியே நீ! இல்லேடி நயினா நீ?''

''நான் ஒண்ணும் இல்லாடி இல்லே. நீதான் இல்லாடி!'' முத்து ஆத்திரத்தில் பேசியே விட்டான்.

''டமாஸ் எல்லாம் இருக்கட்டும் நயினா! வா, உனக்கு எல்லாம் சொல்றேன்!'' என்று அழைத்துப் போக ஆரம்பித்தவன் சற்று நின்று, ''ஆமாம்! உன் பேர் என்ன நயினா?' என்று கேட்டான்.

''நயினா!''

''சொல்லு, வாத்தியாரே!''

''டாக்டர் மேகநாதன்!''

''அது ஊட்டுலே இருக்கிறவங்களுக்கு! வேஷம் கட்டின பேரைக் கேக்கலே. மெய்யான பேர் என்ன?''

முத்துவுக்குத் திகைப்பு ஏற்பட்டது. 'இவனுக்கு நாம் டாக்டர் இல்லே என்பது தெரியும் போலிருக்கிறதே!' என்று நினைத்தான். சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளச் சிங்காரத்திடமே, ''உனக்கு எல்லாம் தெரியுமா?'' என்று மெதுவாகக் கேட்டான்.

''அல்லாம் தெரியும்! நம்ம வாத்தியாரு சொல்லிட்டாரு!''

''நம்ம வாத்தியாரா? யார் அது நம்ம ரெண்டு பேருக்கும் வாத்தியாரு! நானும் நீயும் எப்போ ஒரே ஸ்கூல்லே படிச்சோம்?''

சிங்காரத்துக்கு இந்தப் பேச்சை ரஸிக்க முடியவில்லை.

''யோவ்! இன்னய்யா நீ! ஸும்மா ஸதாய்க்கிறே! நெக்லெஸ் எடுக்க வந்தியா, இல்லே என் உயிரை எடுக்க வந்தியா? படா பேஜாராப் போச்சு! வாய்யா என்னோட! நானும் ஜகா வாங்கி, வாங்கிப் பார்க்கறேன். நீ, மேலே மேலே உதார் உட்டுக்கினே போறியே! இதுக்கெல்லாம் பால் மாற மாட்டேன், வா!'' என்று கூறி முத்துவின் கையைக் கரகரவென்று பிடித்து அழைத்துச் சென்றான்.

முத்து பதில் சொல்ல முடியாமல் தவித்தான். சிங்காரம் பேசியது, 'தமிழா, தெலுங்கா' என்றே அவனுக்குப் புரியவில்லை. ஒன்றும் புரியாக் குழப்பத்தில் சிங்காரத்தோடு சென்றான் முத்து.

இதே சமயத்தில், ''எப்படியாவது எல்லாரையும் சதாய்த்து ஜகா வாங்காமல் உதார் விட்டு நெக்லஸை, எடுத்துவிட வேண்டும். பால் மாறக் கூடாது'' என்று தீர்மானித்து ஹோட்டல் அறையிலிருந்து புறப்பட்டு வந்தான் எதிராஜ். **(தொடரும்)**




வெளுக்கும் துணிகளெல்லாம் வெண்மை மயம், துப்புரவான தூய்மை மயம்: வெல்வது ஸர்ப சலவையின் எல்லைமீறிய வல்லமை! கரைகடந்த நுரைவளம்! கேட்பானேன். சேலை, சிற்றுடை முதல் சிறுவரின் ஆடைவரை ... எதற்கும் நிகரிலாத வெண்மை, சிகரமான தூய்மை! கைப்பட வீட்டிலே துணி வெளுக்க ஒரே வழி கைகண்ட ஸர்ப்!

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

SU. 38-140 TAQ



# கணபதி

ரா. கணபதி



அம்பிகையும் ஈசுவரனும் மகிழ்ச்சியடைந்தால் சர்வலோகங்களும் மகிழ்ச்சி அடையும். அம்மையப்பனை ஆனந்திக்கச் செய்யும் ஆருத அன்பின் ஊற்றுதான் ஆனைமுகக் கடவுள்.

ஒருநாள் அன்னை தந்தை முன் முகத்தைத் தொங்கப் போட்டு வந்தார், கணேசன்.

''முருகன் தொல்லை தாங்க முடியலை; என் காதைச் சும்மா கிள்ளறான்'' என்றார்.

''ஏண்டா, அண்ணாவைக் கிள்ளினாய்?'' என்று கந்தனைக் கடிந்தார் ஈசுவரன்.

''அண்ணாமட்டும் என் கண்களை எண்ணலாமோ?'' என்று திருப்பிக் குற்றம் சாட்டினார் ஆறுமுகன்.

''கணபதி, நீ செய்த குறும்பை மறைத்துத் தம்பியை மட்டும் குற்றம் சொன்னாயே, நியாயமா?'' என்று வினவினார் ஈசன்.

''நான் ஒன்றும் முதலில் அவன் கண்ணை எண்ணவில்லை. அவன் என் துதிக்கையின் நீளத்தை அளந்து முழம் போட்டான். பின்தான்....''

ஈசுவரன் சிரித்துவிட்டார். மகிழ்ச்சியில் திளைத்த தேவியைப் பார்த்து, ''பார், உன் அருமைக் குழந்தைகளை'' என்றார்.

தேவி விக்நேசுவரனை வாரி அணைத்துக் கொண்டாள். அவள்தான் உலகில் புது மணம் செய்துகொண்டுள்ள தம்பதியருக்கெல்லாம் இன்பமான இல்லறத்தை வழங்க வேண்டும் என்று பாடி இருக்கிறார் சிவப்பிரகாச சுவாமிகள்.

அரவணிந்திடே ஐங்கரன் வந்துதான்
 ஐயனே செவியை மிகவும்
அறுமுகன் கிள்ளினான் என்றே செப்பிடவும்
 அத்தனே ஸ்வாமி நோக்கி
விரைவுடன் வினவவே அண்ணன்என் சென்னியில்
 விளக்குகண் எண்ணினான்என
வெம்பிடும் பிள்ளையைப் பார்த்துநீ அப்படி
 விடமேன் செய்தாய்என
மருவும்என் கைந்நீள முழமளந் தான்என்ன
 மயிலவன் நகைத்து நிற்க
மலைவரைன் உதவவரும் உமையவளை நோக்கிநின்
 மைந்தரைப் பாராய்எனக்
கருதரிய கடலுடை உலகுபல அண்டம்
 கருப்பமாய்ப் பெற்ற கன்னி
கணபதியை அருகணைந்(து) அகமகிழ்வு
 களிப்புடன் உமைகாக்கவே. (கொண்டனள்)

அகிலாண்ட கோடிகளைப் பெற்றவள்தான் கணேசனையும் பெற்றவள். அகிலாண்டமுமே அவரது உதரமாக உருண்டு திரண்டிருக்கிறது. அவரைத் தேவி அணைத்தால், அவர் மூலமாக அவளது காப்பு உலகுக்குப் பாயும்.

''விகடமேன் செய்தாய்?'' என்று விநாயகரைச் சிவபெருமான் கேட்டதாகக் கவிதை கூறுகிறது. விநாயகன் பெயரே விகடன். அவர் எப்படி விகடம் செய்யாதிருப்பார்? ஸுமுகன் என்றும் பிரசன்ன வதனன் என்றும் தனிப் பெயர் பெற்ற கஜமுகன், பிறர் முகத்திலும் அகத்திலும் மலர்ச்சியை உண்டு பண்ணுவதே முதல் தொழிலாகக் கொண்டவர். சிரிப்பில் பிறந்த அவர் எங்கும் சிரிப்பை வளர்த்து ஆனந்தம் பரப்புவர்.

சிரிப்பில் பிறந்தவர்தான் அவர். ஈசனும் அம்பாளும் ஒருவரையொருவர் நோக்கி மென்னகை புரிந்து கொண்டனர். அந்த மந்தஸ்மிதத்தில் உருவானவர் விநாயகன்.

தந்தை தாயிடமே விகடம் செய்து அவர்கள் பிணங்கும்போது சேர்த்து வைத்திருக்கிறார் அவர்.

ஒருமுறை தேவி ஐயனிடம் ஊடியிருந்தாள். அப்போது கணநாதன் ஏதோ வேடிக்கை செய்ய, அன்னை தந்தை இருவருமே அவனிடம் வந்து முத்தமிட்டனர். சரேலென கஜானனன் தனது ஆனைத் தலையை விலக்கிக் கொள்ள பெருமானும் அன்னையுமே பரஸ்பரம் தீண்டிக் கொண்டுவிட்டனர். இந்த இரகசியத்தை ஒரு சம்ஸ்கிருதக் கவி அம்பலப்படுத்தியிருக்கிறார்.

இன்னொரு சம்ஸ்கிருதக் கவி இதேபோல் இன்னொரு குடும்ப சமாசாரத்தைப் போட்டு உடைத்திருக்கிறார்.

ஸ்வாமியிடம் தேவி பரிகோபமாயிருந்தாள். வெளியுலகத்துக்குத் தெரியாது என்று நினைத்துச் சிவனார் தேவிக்கு நமஸ்காரமே செய்துவிட்டார். அப்போதும் அம்பாளின் பிகு தணியவில்லை. பிள்ளை பார்த்தது. தாமரைக் கிழங்கு என்றால் ஆனைக்கு மிகவும் விருப்பம். சிவபெருமான் தலையில் முளைத்திருந்த நிலாக் கீற்றைப் பார்த்தால் தாமரைக் கிழங்கைப் போலிருந்தது. உடனே தும்பிக்கையை வளைத்து நிலாவைச் சடை முடியிலிருந்து இழுக்கத் தொடங்கிவிட்டார் ஐங்கரன். சிவனார் படும்பாட்டைக் கண்டு தேவி சிரித்தேவிட்டாள்; மனமும் இரங்கிவிட்டாள்.





பிரம்மசரியத்துக்கு எவ்வளவு கனம் உண்டு என்பதைக் காட்டத்தான் ஸ்தூலகாயராக இருக்கிறார் கணபதி. காமமே எழாத குழந்தை அவர். லோக பிதாவான அவரை அதனால்தான் பிள்ளை, பிள்ளையார் என்றே சொல்கிறோம். கட்டைப் பிரம்மசாரியான போதிலும் தம்பதிகளின் பிணக்குகளை அவர் எப்படித் தீர்த்து வைக்கிறார் பாருங்கள்! அப்படி ஒரு நல்ல உள்ளம் விநாயகனுடையது. தமது வழி ஒன்றாக இருந்தாலும் வேறு வழிக்காரர்களிடமும் அநுதாபம் அவருக்கு உண்டு. முருகப்பெருமானுக்கு வள்ளியம்மை இடமே கொடுக்காதபோது, மத்தகஜமாக ஓடிவந்து அவளைப் பயமுறுத்தித் 'தம்பியின் தோளிலே சேர்த்தவரல்லவா?

திருமாலுக்கும் விநாயகருக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இது உமையின் சோதரர் திருமால் என்பதோடு நின்றுவிடவில்லை. விநாயகரது சக்திகளான சித்திக்கும் புத்திக்கும் திருமால்தான் பாட்டனார். சித்தியும் புத்தியும் — அதாவது ஆற்றலும் அறிவும்— ஞானத்தோடு சேருவதே இத் திருமணம். இதனால் ஆன்ம லாபமும் ஆன்ம க்ஷேமமும் உண்டாகும். இதையே புராணங்கள் கூறுகையில் விநாயகருக்கு லாபம் என்றும் க்ஷேமம் என்றும் புத்திரர்களிருப்பதாகக் கூறும். ஆற்றல்களின் உறைவிடம் விநாயகர் என்பதால் அவரை வல்லபை நாயகனாகவும் சொல்லுவார்கள்.



விஷ்ணுவிடம் உள்ள தொடர்பை விட்டுவிட்டோமே! விநாயகப் பெருமானின் பிறந்தநாளை அம்பாள் ஆண்டுதோறும் கொண்டாடி மகிழ்வாள். அப்போது விஷ்ணுவைப் போலவே சியாமள நிறமும் பீதாம்பரமுமாக விகடவேதவன் என்கிற பக்தன் வருகிறான். தேவி அவனையும் விருந்துக்கு அழைக்கிறாள். விஷ்ணு தரிசனம் இல்லாமல் உண்ணமாட்டேன் என்கிறான் விகடவேதவன். அப்போது விநாயகனே அவனுக்கு விஷ்ணுவாகத் தரிசனம் தருகிறார். அவனது பேத புத்தி நீங்குகிறது.

எல்லோரிடமும் விகடம் செய்யும் விநாயகர் விஷ்ணுவை விகடம் செய்ய வைத்ததும் உண்டு.

சகோதரியின் வீடான கயிலைக்கு வந்திருந்தார் கமலக்கண்ணன். ''மாமா, என்ன கொண்டுவந்தாய்?'' என்று கேட்டார் பிள்ளையார்.

விஷ்ணுவுக்கு வெட்கமாகி விட்டது. ''மறந்தேன் கண்ணே, வெறுங் கையோடு வந்துவிட்டேன்'' என்றார் நாராயணன்.

''வெறுங்கையா? சக்கரம்தான் இருக்கே!'' என்று கூறிச் சக்கரத்தை எடுத்து வாயில் போட்டுக் கொண்டு விட்டார் விக்நேசுவரர்.

''ஐயோ, குழந்தை! சக்கரத்தைத் தின்று விடாதே! அது வாயை அறுத்து விடும்'' என்று விஷ்ணு அலறினார். அம்பாளும் அலறினாள். ''சரி, சக்கரத்தை உண்பதில்லை. வாயில் வெறுமே அடக்கிக் கொண்டிருக்கேன்'' என்றார் கணபதி. விஷ்ணு முகத்தில் ஈயாடவில்லை.

''எனக்கு வாய் அறுந்துபோகும் என்பதற்காக மாமா அலறவில்லை. சக்கரம் இல்லாமல் தம் சக்தி போய்விடுமே என்று தான் அலறுகிறார். நான் சக்கரத்தை உமிழ மாட்டேன்'' என்று விடாப்பிடியாகக் கூறிவிட்டார் விநாயகர்.

இந்தப் பிள்ளையை அதட்டி உருட்டிப் பண்டத்தை வாங்க முடியாது என்று மாதவனுக்குத் தெரியும். யுக்தி செய்தார். தமது நான்கு கரங்களாலும் காதுகளைப் பிடித்துக் கொண்டு ஆடினார். விநாயகர் மலைபோன்ற தேகம் குலுங்கச் சிரித்தார். வாயிலிருந்து சக்கரம் கீழே விழுந்தது.

விஷ்ணு செய்த விளையாட்டிலிருந்துதான் தோப்புக்கரணம் போடும் பழக்கம் தோன்றியது. 'தோர்பி:' என்றால் 'கைகளால்' என்று பொருள். 'கர்ணம்' என்றால் காது. கைகளால் காதைப் பிடிப்பது 'தோர்பி: கர்ணம்' —அதுவே தோப்புக்கரணமாக மருவி விட்டது. விஷ்ணுவின் பாரிஷதரான விஷ்வக்ஸேனர் இவ்வாறு தோப்புக்கரணம் போட்டதாகவும் கதை உண்டு. விகடம் செய்த பின் சக்கரத்தைத் தந்த விநாயகர் காஞ்சி குமரக் கோட்டத்தில் குடிகொண்டிருக்கிறார். 'விகடச் சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்' என்று இவரைக் கச்சியப்பர் கந்தபுராணத்தில் துதிக்கிறார்.

விஷ்வக்ஸேனரே வைஷ்ணவ விநாயகர்தான் எனலாம். விஷ்ணு கணங்களின் அதிபதியான விஷ்வக்ஸேனரும் 'கணபதி' தானே? அவருக்கும் தும்பிக்கை உண்டு. ஸ்ரீரங்கத்தில் 'தும்பிக்கை ஆழ்வான்' என்றே அவரைக் கோயில் எடுத்துக் கும்பிடுகிறார்கள்.

ஸ்ரீ ரங்கநாதன் ஸ்ரீரங்கத்தில் இடம் கொள்ளவும் விநாயகர்தான் காரண புருஷர்.



ஸ்ரீ ராமனிடமிருந்து ரங்கநாத விக்கிரகத்தைப் பெற்றுக் கொண்டு விபீஷணன் இலங்கை திரும்பிக் கொண்டிருந்தான்.

'பூமியில் எங்கு வைத்தாலும் அங்கு அவ்விக்கிரகம் நிலைத்து



நீண்டுவிடும்' என்று விபீஷணனிடம் ராமன் சொல்லியிருந்தார்.

விநாயகருக்கு ரங்கநாத விக்கிரகம் இந்தியாவை விட்டு இலங்கை செல்வது பிடிக்கவில்லை. ஆனால் மன்னன் ராமன் உத்தரவுக்கு மாறாத அவரால் எதிர்த்துத் தடை செய்ய முடியாதே! அதனால் ஒரு தந்திரம் செய்தார். பிரம்மசாரிச் சிறுவனாக விபீஷணன் முன் தோன்றி, 'நாராயணப் பிரதிமையை நான் தூக்கி வருகிறேன்' என்றார். ''அப்படியே செய், விக்ரகத்தை ஒருபோதும் கீழே மட்டும் வைத்து விடாதே'' என்றான். ''அப்படியே. ஆனால் எனக்குக் கை இற்றுப்போய்விட்டால் உங்களை மூன்று முறை கூப்பிடுவேன். நீங்கள் அதற்குள் வந்து வாங்கிக்கொள்ளாவிட்டால் விக்கிரகத்தைக் கீழே வைத்துவிடுவேன்'' என்றார் பிள்ளையார். விடணன் ஒப்புக் கொண்டான்.

அகண்ட காவேரியின் மத்தி வந்ததும் விபீஷணன் அநுஷ்டானத்துக்கு அமர்ந்தான். ''சரியான சமயம்'' என்று குதூகலித்த விநாயகர், ''மகாராஜா, கைபோச்சு, விக்கிரகத்தைச் சட்டென்று வாங்கிக்கொள்ளுங்கள், மகாராஜா, மகாராஜா!'' என்று மூன்று முறை குரல் கொடுத்துவிட்டு, விபீஷணன் ஆசமனம் செய்து எழுந்து வருவதற்குள் விக்கிரகத்தைக் கீழே வைத்துவிட்டார். ஸ்ரீரங்கநாதர் நீண்டு வளர்ந்தார். அவ்விடமே அவருக்கு இருக்கையாகிவிட்டது.

விபீஷணன் விநாயகரைப் பிடிப்பதற்காகத் துரத்தினான். விநாயகர் மலைக்கோட்டை உச்சியில் ஏறி உச்சிப் பிள்ளையாராக உட்கார்ந்துவிட்டார். அப்போது விபீஷணன் குட்டியதால் உண்டான வடு இன்னும் உச்சிப்பிள்ளையார் தலையில் இருக்கிறது.

அதற்குப் பரிகாரமாகத்தான் இன்றும் நாம் விநாயகரைக் கண்டவுடன் குட்டிக்கொள்கிறோம்.

தத்துவம் அறிந்தவர்களோ, சிரஸில் உள்ள சகஸ்ரார கமலத்தில் ததும்பும் ஆனந்தத் தேனை நம் நாடிகளில் பாய்ச்சிக் கொள்வதற்குத்தான் அக்கமலத்தை ஆட்டுமுகமாகப் பொட்டுக்களில் குட்டிக் கொள்கிறோம் என்பார்கள்.

சிரஸின் உச்சியில் உள்ள ஆத்ம ஸ்வரூபமே தாம் என்று உணர்த்தத்தான் உச்சிப் பிள்ளையாராக அவர் அமர்ந்திருக்கிறார். ஆத்ம ஸ்வரூபம் ஜீவர்களைத் தோற்றுவிக்கும் ஆதாரமும் அவரே. அப்போது அவரை மூலாதார கணபதி என்கிறோம். திருவாரூரில் அகஸ்தியருக்கு அருள் புரிந்த வாதாபி கணபதியை 'மூலாதார க்ஷேத்ர ஸ்திதம்' என்று தீக்ஷிதர் அவர்கள் பாடுகிறார்.

சிறந்த விநாயக பக்தனான காசி ராஜனின் அரண்மனைக்குக் குழந்தை விநாயகர் செல்லுகிறார். அவரைத் தடுமாறி விழச் செய்யும் நோக்கத்துடன், அசுரன் ஒருவன் அரண்மனை வாயிற்படிக் கல்லுக்குள் ஒளிந்து கொண்டிருந்தான்.

அதனருகே வந்ததும் குழந்தை நின்றது. காசி மன்னனுக்கும் காசினி மன்னனான பெருமாளுக்கும் பலர் பூரண கும்பம் கொண்டு வந்திருந்தனர்.

''அந்தத் தேங்காய்களை யெல்லாம் இந்தப் படிக்கல்லில் உடையுங்கள்'' என்றார் பிள்ளைப் பெருமான்.

அப்படியே உடைத்தார்கள். தேங்காய் உடைந்தது; கல்லும் உடைந்தது. அசுரன் மாண்டான்.

சிதறு தேங்காய் உடைக்கும் வழக்கம் இப்படி ஏற்பட்டது. இன்னொரு வரலாறு:

''அப்பா, உன்னைத் தியாகராஜன் என்கிறார்களே! நீ எதையும் தியாகம் செய்வாயா?'' என்று பரமேசுவரனைக் கேட்டார் பாலவிநாயகர்.

''செய்கிறேன் செல்வமே!'' என்றார் சிவபெருமான்.

''எனக்கு யானைத் தலையாக இருக்கே! உன் தலையை எனக்காகத் தியாகம் செய்வேன்'' என்றார் குமாரர்.

ஈசுவரன் தயங்கவில்லை. அப்படியே தம் தலையைப் பனி தந்துவிட்டார்.

கணபதி மீண்டும் அதனைத் தந்தைக்கே தந்துவிட்டார். ''இந்த என் முகத்தைவிட உன் ஆனை முகம்தான் வஞ்சனையில்லாத அழகடா கண்மணி'' என்று பரமனும் பரிந்து கூறினார்.



முக்கண் உள்ள தேங்காய் முக்கண்ணனுக்கு ஓர் அடையாளம். எல்லா ஐசுவரியங்களையும் விநாயகருக்காகத் தியாகம் செய்ய வேண்டும் என்ற தாத்பர்யத்தில் பரமேசுவர ரூபமான தேங்காயை



"தமிழ்ப்பாட்டிக்குக் கைலாகு கொடுத்துக் கைலாசம் அனுப்பிய பிரபுவும் கணநாதனே அல்லவா?

அவர் முன் உடைக்கிறோம். தேங்காய் அகங்காரத்தைக் குறிக்கும். கெட்டியான ஓட்டைப் பார்த்தால் தெரியவில்லையா? நம் உள்ளே உள்ள ஆனந்த இள நீரை மறைப்பது ஆணவ ஓடுதானே? ஆணவத்தை உடைத்தெறிவதற்கு அடையாளமாகத் தேங்காயை உடைக்கிறோம். அகங்காரம் அகன்றால் ஓங்கார கணபதி தோன்றுவார்.

தந்தையைத் தியாகம் செய்ய வைத்த கணநாதன் தானுமே ஒரு தியாகி. இந்தத் தியாகத்தை ஸ்ரீ காமகோடி பெரியவாளின் வாக்கில் கேட்போம்:

"ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொன்றிலே அதிக கௌரவம் இருக்கும். சவரி மானின் கௌரவம் அதன் வாலில். மயில் என்றால் அதற்குத் தோகை விசேஷம். இதேபோல் யானைக்குத் தந்தத்தில் கௌரவம். ஆனால் இந்த யானை (விநாயகர்) என்ன பண்ணிற்று என்றால் அந்தக் கொம்பில் ஒன்றையே ஒடித்து மகாபாரதத்தை எழுதிற்று. தன் அழகு, கௌரவம், கர்வம் எல்லாவற்றுக்கும் காரணமாக இருக்கிற ஒன்றைக் காட்டிலும் தர்மத்தைச் சொல்கிற ஒன்றுதான் பெரிது என்பதை இந்த யானை காட்டுகிறது. தருமத்துக்காக, வித்யைக்காக எதையும் தியாகம் பண்ண வேண்டும் என்பதை இந்த யானை தியாகம் பண்ணிக் காட்டியிருக்கிறது" என்று தியாகியைப் போற்றுகிறார் யோகி.

வியாசர் சொல்லச் சொல்ல பாரதம் எழுதியது மட்டுமின்றி, அகத்தியர் சொல்லத் தமிழிலக்கணத்தையும் விக்நேசுவரன் மேரு மலையில் எழுதினாராம். இந்தச் செய்தியைத் திருப்புகழ் தெரிவிக்கிறது.

முத்தமிழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே

இதிலிருந்து விநாயகர் தமிழுக்கு மிகவும் வேண்டியவர் என்று தெரிகிறதல்லவா? 'சங்கத் தமிழ் மூன்றும் தா' என்று அவ்வை வேண்டிய தெய்வமாச்சே!

தமிழ் மறையான தேவாரம் நமக்குக் கிடைத்ததற்குக் காரணமே அவர்தான்.

திருநாரையூரைச் சேர்ந்த நம்பி தனது தந்தை வெளியூர் சென்றிருக்கையில் தானே பிள்ளையார் பூஜை செய்தான். நிவேதனத்தைப் பிள்ளையார் உண்டுதான் ஆகவேண்டும் என்று நிர்ப்பந்தம் செய்தான். கல் கடவுளாயிற்று. கஜானனன் குழந்தை தந்த நிவேதனத்தை ஏற்றுத் தமிழ் தனத்தை அவனுக்கு அளித்தார். தேவாரங்கள் தில்லை ஆலயத்தில் மறைந்திருப்பதை அவனுக்கு உணர்த்தி, அவை வெளி உலகுக்கு வர வழி செய்தார். தமிழிடம் அவருக்குள்ள அன்பு எத்தகையது பார்த்தீர்களா?

தமிழ்க் கடவுளாம் முருகனுக்கு வள்ளியுடன் மணம் முடித்த விநாயகர் அவருக்கு ஞானோபதேசமும் செய்ததுண்டு என்பதை ஒரு சம்ஸ்கிருதக் கவிதை தெரிவிக்கிறது.

"ஐங்கரா, ஓர் ஐயம்" என்றார் பால ஸ்கந்தர். "அப்பாவும் அம்மாவும் அர்த்த நாரியாக ஒன்றுருப்போது, அப்பாவின் ஒரு பாதியும் அம்மாவின் ஒரு பாதியும் என்னவாகின்றன?" என்று கேட்டார்.

"அப்பாவின் அந்தப் பாதிதான் எல்லா ஆண்களும் ஆகிறது; அம்மாவின் அந்தப் பாதிதான் எல்லாப் பெண்களும் ஆகிறது" என்று விடை சொன்னார் வேழமுக ஞானதீபம்.

'ஓம் ஞானதீபாய நம:' என்பது பிள்ளையாருக்கு ஓர் அர்ச்சனை. 'ஞானக் கொழுந்து' என்றே திருமூலரும் சொல்வார்.

உபதேசம் தந்த பிள்ளையாரே தம்பிக்கு ஊர்தியும் தந்திருக்கிறார். ஆம், ஸ்கந்தனுடைய மயில் ஆரம்பத்தில் விநாயகரிடம்தான் இருந்தது. நாலு யுகங்களிலும் நாலு விதத் தோற்றத்துடனும், நாலுவித ஊர்திகளுடனும் விளங்குவார் கணபதி.

கிருதயுகத்தில் அக்கினியின் மஞ்சள் நிறத்தவராய், பத்துக் கைகளுடன், சிம்ம வாகனத்தின் மீது விநாயகர் என்ற பெயரில் விளங்குவார். திரேதா யுகத்தில் வெண் நிறத்தராய், ஆறு கைகளுடன் மயில் வாகனத்தின் மீது மயூரேசர் என்ற பெயரில் திகழ்வார். துவாபர யுகத்தில் சிவப்பு வண்ணராக, நான்கு கரங்களுடன், மூஷிக வாகனத்தின் மீது கஜானனன் என்ற நாமம் தரித்துப் பொலிவார். கலியுகத்தில் சியாமள வர்ணராக, இரு கரம் தாங்கி, குதிரை மீதமர்ந்து தூம்ரகேது என்ற பெயரில் அருள் பாலிப்பார்.

இவர்களில் மயூரேசர்தான் மயில்வாகனர். 'சசிவர்ணம்' என்ற அடைமொழி கொடுத்துப் பரமசீதளராக, பரம பாவனராகப் போற்றப்படுபவர் இவர். இவரைத்தான் சிவகணங்கள்



தமக்கு அதிபதியாக்கி, கணபதி என்ற விருதை அளித்தனர். ஸிந்து என்ற அரக்கனைக் கொன்று அமரேசனைச் சிறைமீட்ட பின் ஸித்தி – புத்தியை மணந்தவரும் இவரே. திருமணத்துக்குப் பின் தமது லோகமான ஆனந்த புவனத்துக்குச் செல்கையில் மயூரத்தைத் தம்பிக்குப் பரிசளித்துவிட்டார். பழத்தைத் தம்பி பெற முடியாமல் முன்பு பறித்துக் கொண்டு அவரைப் பழனியாண்டியாக்கியதற்கு ஈடாக, இப்போது அவரை நீல மயிலேறும் கோலக் குமரனாக்கி விட்டார்.

மூஷிகத்தை விநாயகர் வாகனமாக்கிக் கொண்ட கதை அனைவர்க்கும் தெரியும். தம்மை எதிர்த்த அசுரனையே மூஷிக வடிவில் தமது திருமேனியைத் தாங்கும் பாக்கியசாலியாக்கி விட்டார் அவர். இதனில் பொதிந்துள்ள ஓர் உண்மையை அற்புதமாகச் சொல்கிறார் ஸ்ரீ காமகோடி பெரியவாள்:



“இவரோ யானை மாதிரி இருக்கிறார். அதற்கு நேர் விரோதமான ஆகிருதி உடையது மூஞ்சூறு. தாம் எத்தனைக்கு எத்தனை பெரிய ஸ்வாமியாக இருக்கிறாரோ அத்தனைக்கு அத்தனை சின்ன வாகனமாக வைத்துக் கொண்டிருக்கிறார். வாகனத்துக்குக் கௌரவம் கொடுக்க, அதனுடைய சக்திக்கு ஏற்றபடி அதற்குச் சிரமம் இல்லாமல் நெட்டிப் பிள்ளையார் மாதிரி கனம் இல்லாமல் இருக்கிறார். மற்றவர்களை உபகரணமாக வைத்துக் கொண்டு அவர்களுக்கு அந்தஸ்தை உண்டாக்கித் தரும்போதே, தாம் அவர்களுக்குப் பாரமாக இல்லாமல் இருக்கிறார்.”

அத்வைத கனத்தைத் தாங்கியபடியே பாமர மக்களுக்கு இலேசாக அருள் சுரக்கும் பெரியவாள் தவிர யார் இப்படிச் சொல்ல முடியும் ?

ஒரு விரோதியை வாகனமாக்கிக் கொண்டது போலவே இன்னொரு விரோதியான கஜமுகாசுரனின் ஆனைத் தலையை ஆண்டவன் தரிப்பதும் அவரது இதய விசாலத்துக்குச் சான்றாகும்.

விநாயகரின் வாசஸ்தானமான ஆனந்த புவனத்தைச் சிறிது பார்ப்போம். அதன் பெயரே, அது சச்சிதானந்தம் வழங்கும் பரம பதம் என்பதை உணர்த்துகிறதல்லவா? ஆனந்த பூரணத்துக்கு மறுபெயரே அன்றோ மகாகணேசர்? ஆனந்தம்தானே மோதகம் ? ஆன்ம நிறைவுதானே அதனுள் உள்ள பூரணம்? கருப்பஞ்சாற்றுக் கடலுக்கிடையேயுள்ள அமுதத் தீவு ஆனந்த புவனம். அங்கு பொதுவாக, கணபதியை மகாகணபதியாகவே தியானிப்பது வழக்கம். மகாகணபதியின் பீஜாக்ஷரங்களையும், அவர் தாங்கும் ஆயுதங்களையும் கண்டாலே அவரில் சகல தேவதைகளும் அடக்கம் என்று புரியும். லக்ஷ்மி, அம்பிகை, மன்மதன், பூதேவி, கஜானனன் ஆகிய ஐவரது பீஜாக்ஷரங்களும் அவரது மந்திரத்தில் அடங்குவதிலிருந்து அவர் செல்வம், ஞானம், அன்பு, பொறுமை, புலனடக்கம் அனைத்தும் அருள்வார் என்றாகிறது. அவரது பீஜாக்ஷரம் 'கம்' என்பது. 'கம்'மென்று நறுமணம் வீசுவதாகச் சொல்கிறோம். அவர் சுகந்தர். பேசாமலிருப்பதத்துக் 'கம்'மென்று இருப்பதாகச் சொல்கிறோம். அவர் மௌன நாதன். 'கம்' என்றால் உள்ளுக்குள் ஒரு கனம் ஏற்படும். அவர் ஆனந்த கனம். மகா கணபதியின் வலப்புறத்துக் கரங்கள் யாவும் பெண் தெய்வங்களின் ஆயுதங்களைத் தாங்குவன. சிவபெருமான் இடப் பகுதியைப் பெண்ணுக்குத் தந்தது போல் இவர் வலப்புறத்தில் தாயாகத் திகழ்பவர். இவர் ஆண் பெண் இரண்டுமே என்பதைக் குறிக்கத்தான் இடப்புறம் ஆண் யானை போல் கொம்புடனும், வலப்புறம் பெண் யானை போல் கொம்பின்றியும் திகழ்கிறார். முழுக்கப் பெண் உருவில் 'கணேசானி' என்ற பெயரிலும் அவருக்குச் சிற்பங்கள் உண்டு.

இதே போல் மனித இனம் விலங்கினம் இரண்டும் கலந்து, மனித உடலுடனும் யானை முகத்துடனும் விளங்கும் கணேசனை மனித முகமே கொண்ட நரமுக கணபதியாகவும் சிற்பிகள் வடித்துள்ளனர்.

திவ்விய தேஜோரூபியான கணநாதன் தலையில் பிறைமதி மிளிர, முக்கண்ணராக விளங்குவார். அவரது கன்னத்தில் வழியும் மதநீரை வண்டினங்கள் மொய்க்கவரும். அதற்காகத் தமது நீண்ட செவிகளை ஆட்டிக் கொண்டிருப்பார். இத் திருக்கோலத்தில் அவரைத் தியானிப்பதற்கு மேல் சௌந்தரியம் உண்டோ ?

விநாயகனின் சௌந்தரியம் மண்டிக் கிடப்பது அவரது பேழை வயிற்றில்தான். திருப்தியின் உருவம் அந்தத் தொந்தி. அதில் ஆதிசேஷனையே அரைஞாணாகக் கட்டியிருப்பார். குண்டலினியைக் கட்டிப் போட்ட பிரம்மச்சாரி என்பது இதற்குத் தாத்பரியமாயினும், புராணக் கதையும் உண்டு.

கணேசனாக மட்டுமின்றி நற்குணங்கள் யாவும் அமைந்த குணேசனாகவும் விநாயகர் ஒரு முறை அவதரித்தார். அப்போது பாதாள லோகம் சென்று வாசுகியையும் ஆதிசேஷனையும் வென்றார். வாசுகியைக் கழுத்தில் மாலையாக இட்டுக் கொண்டார். (பூணூலாகப்

போட்டுக் கொண்டதாகவும் கருதி, பல ஆலயங்களில் நாகயக்ஞோபவீத கணபதியின் சிலை அமைத்துள்ளனர்.) ஆதிசேஷனை இடையில் கட்டிக் கொண்டார்.

குணேசனைப்போல் பல அவதாரம் செய்தவர் விநாயகர். பிறப்பில்லாத ஆதி கணபதியின் பிரதிமையை அம்பாள் வழிபட்டு, ''எனக்குப் பிள்ளையாகப் பிற'' என வேண்டினள். புரட்டாசி, சுக்லபட்ச சதுர்த்தியில், திங்கட்கிழமையன்று, சுவாதி நட்சத்திரமும் சிம்ம லக்னமும் கூடிய திவ்விய நாளில் பிரதிமை பிள்ளையாராக உயிர் பெற்றது. அவரே குணேசன்.

வயிறு குலுங்க ஆனந்த நிர்த்தமிடுவார் அவர். தமது பன்னிரண்டாவது மாதத்தில், கூத்தப் பிரானுடன் நாட்டியத்தில் போட்டியிட்டவர் இவர். அப்பனுடையது தனி நடனம்; பிள்ளையுடையது கம்பீர நாட்டியம்.

சீதக்களபச் செந்தாமரைப் பூம்
பாதச் சிலம்பு பலஇசை பாட

என்று இந்த நடனத்தில்தான் தமிழ்ப் பாட்டி தனது அகவலைத் தொடங்குகிறாள். 'கனதரம்புகுறு மகிமை பதமுறு கல்லுகல்லன நுகரி' என்று தியாகையர்வாளும் இந்த ஆனந்தச் சுவையின் அழுத்தமான நடனத்தையே அழகுற வர்ணிக்கிறார்.

பார்வதி தேவியின் அழுக்கிலிருந்து விநாயகர் தோன்றியதாகவும் கதை உண்டு. 'இது என்ன ஆபாசம்! தேவியின் உடலிலும் அழுக்கா?' என்று முதலில் அருவருக்கத்தான் தோன்றும். யோசித்தால் அதிலும் தத்துவம் மிளிரும். உலகில் அழகு மட்டும்தான் உள்ளதா, அழுக்கும்தானே உள்ளது? அவையனைத்துக்கும் தேவி பராசக்திதானே பிறப்பிடம்? நம் அனைவருடைய பிறப்புங்கூட அழுக்குடன் தொடர்புள்ளதுதானே? கணேசனும் நம்மில் ஒருவனாகவே தோன்றப் பிரியப்பட்டிருப்பாரோ என்னவோ? தோற்றம் எங்கிருந்தாலும் ஆற்றலால் ஆண்டவனாகலாம் என்பதை மெய்ப்பிக்கிறாரோ?,

கணேச ஆவிர்பாவம் பற்றி இன்னொரு கதை: தேவியும் மகாதேவனும் கைலாசத்திலுள்ள சித்திர மண்டபத்துக்குச் சென்றனர். அங்கு ஏழு கோடி மூலமந்திரங்களும் எழுதப்பட்டிருந்தன. அவற்றில் நடுநாயகமாக, சகல மந்திர ஸ்வரூபமான பிரணவம் அதன் சமஷ்டி வியஷ்டி உருவங்களில் பொறிக்கப்பட்டிருந்தது. சமஷ்டிப் பிரணவத்தைப் பரமன் பார்த்தார். அதிலிருந்து ஓர் ஆண் யானை வெளிப்பட்டது. அதே போதில் வியஷ்டிப் பிரணவத்தை தேவி நோக்கினாள். அதினின்று பெண் யானை வெளிப்பட்டது. இரு யானைகளும் கலந்து விக்நேசுவரன் தோன்றினார்.

சிவசக்தியின் புன்முறுவல்கள் லயிக்கத் தோன்றியவரே பிள்ளையார் என்பதுமுண்டு.

இது தவிர காசிபருக்கும் அதிதிக்கும் மதோத்கடன் என்ற பெயரில் விநாயகர் திரு அவதாரம் செய்து அற்புத லீலைகள் செய்ததும் உண்டு.

விநாயகருக்கு எவ்வளவு உருவ பேதங்கள் உண்டு என்று சொல்ல முடியாது. ஐம்பத்தொரு சக்திகளுக்குச் சரியாக ஐம்பத்தொரு விநாயக மூர்த்தங்கள் உண்டு என்பர். ஷோடச கணபதி என்று பதினாறு ரூபங்களைக் கொண்டாடுவர். மஹாகணபதி, உச்சிஷ்ட கணபதி என்ற இருவரே முக்கியமாக உபாஸிக்கப்படுபவர்கள்.

எதிலும் இருக்கும் அவருக்கு எத்தனை ரூபமுண்டு என யார் கணக்கெடுக்க முடியும்? அவர் எதிலும் இருப்பவர் என்பதால்தான் களிமண்ணிலும், மஞ்சளிலும், சாணியிலும் கூட அவரைப் பூஜிக்கிறோம்.

அவரது உருவங்களில் சிறந்தது பிள்ளையார் சுழியே என்பார்கள். பிரணவாகாரமான யானை முகத்தை 'ஓம்' குறிக்கிறது எனில், காரணமான பிரணவத்தோடு காரியமான உலகையும் சேர்த்துக் குறிப்பது பிள்ளையார் சுழி என்பார்கள்.

பிள்ளையார் சுழி போடாத காரியம் ஜெயிக்காது என்பது நம்மவர் நம்பிக்கை. பிள்ளையாரை நினைத்தபின்தான் லலிதா தேவி பண்டனைக் கொன்றாள். பிள்ளையாரைப் பூஜித்தபின்தான் ஈசன் திரிபுரரை சம்ஹரித்தான். அவரைப் பூஜிப்பது வெகு எளிது. அருகம்புல்லையும் எருக்கம்பூவையும் போட்டு அவரை நம் வசமாக்கிக் கொண்டு விடலாம்.

பல்லவசேநாபதி பரஞ்சோதி வாதாபியை வென்று அங்குள்ள விநாயகனைத் திருச்செங்காட்டங்குடிக்குக் கொண்டு வந்தபின்தான் தமிழகத்தில் கணபதி வழிபாடு பரவிற்று என ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள். அதெப்படியாயினும் இன்று தமிழகத்தின் சந்து பொந்துகளிலெல்லாம், அரசமரத்தடிகளிலெல்லாம் அரசு செலுத்துபவர் விநாயகஸ்வாமியே. பிள்ளையார் பட்டி, திருவலஞ்சுழி ஆகிய தலங்களில் அவரே முக்கியஸ்தர். மதுரையிலும் சிதம்பரத்திலும் முக்குறுணி அரிசிப் பிள்ளையாராகப் பிரம்மாண்ட வடிவில் திகழ்கிறார்.

உலகெங்கிலும் வணங்கப்படுபவர் அவர். ஒருவரையொருவர் தழுவும் இரட்டைப்பிள்ளையாக அவரை ஜப்பானில் வழிபடுகிறார்கள். ஜைனர்களும் பௌத்தர்களும் அவரை வேறு பெயரில் வணங்குகிறார்கள். மெக்ஸிகோவில் கூட கணபதி வழிபாடு உள்ளது என்று காமகோடி பெரியவாள் கூறியிருக்கிறார்.

ஹேரம்ப உபநிஷதம், கணபதி உபநிஷதம், பார்க்கவ புராணம் முதலிய நூல்களிலிருந்து அவரையே பரப்பிரம்மமாக, பரம்பொருளாக அறிகிறோம். இவ்வாறு வழிபடுவதே ஆறு சமயங்களில் ஒன்றான காணபத்தியம். 'க' என்பது மனோ வாக்கையும், 'ண' என்பது அதற்கு மேம்பட்ட அநுபவ ஆனந்தத்தையும் குறிப்பதாகவும், 'கணபதி' என்பவர் இந்தப் பேரின்ப நாயகனே ஆன்ம ஸ்வரூபமே என்றும் கர்ணபதர் கூறுவர்.

யான் மூன்றுரைத்தேன் கோடிமுறை
இன்றும் கோடிமுறை சொல்வேன்
ஆன்மாவான கணபதியின்
அருளுண்டு அச்சம் இல்லையே,

என்று இதைத்தான் கோடிக் கோடி முறை பாரதியும் கூறியிருக்கிறார். அருளைப் பணிவோம்; அச்சம் தணிவோம்.




# கல்லுக்குள் ஈரம்

ர.சு.நல்லபெருமாள்

### அத்தியாயம் 35

## கால் தூசிக்கும் வணங்குகிறேன்

**வி**க்டோரியா டெர்மினஸ் ஸ்டேஷனுக்குள் ரங்கமணி ரயில்வே போலீஸ் உடையில் நுழைந்தபோது, அதிகாலை மூன்று மணி இருக்கும். கிட்டத்தட்ட ஸ்டேஷன் முழுதும் ஆள் நடமாட்டம் இல்லாமல் காலியாகக் கிடந்தது. அதிகாலையில் சுற்றுப்புற ஊர்களுக்குச் செல்லும் வண்டிகள் புறப்படுவதுகூட ரத்தாகி விட்டதால் கூட்டமே இல்லை. மேலும் பிளாட்பாரத்துக்குள் யாரையும் போலீஸார் அனுமதிக்கவில்லை.

ரங்கமணி பிளாட்பாரத்துக்குள் நுழையு முன்பு சிறிது தயங்கினான். அப்போது ஒரு ரயில்வே போலீஸ்காரர் அவன் பக்கத்தில் வந்து ஒரு சல்யூட் அடித்தார். ரங்கமணி பதிலுக்கு ஸல்யூட் அடித்துவிட்டுப் பரக்கப் பரக்க விழித்தான்.

''சங்கர்தேவ் அனுப்பினாரா....? தைரியமாக வாருங்கள்'' என்றார் அந்தப் போலீஸ்காரர் ஹிந்தியில். அதற்குப் பிறகுதான் ரங்கமணிக்குப் பயம் தெளிந்தது.

பிரும்மாண்டமான விக்டோரியா டெர்மினஸ், அதிகாலை வேளையில் களை இழந்து காணப்பட்டது. சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே பிளாட்பாரத்தில் இருவரும் நடந்தார்கள். பிளாட்பாரத்தை ஒட்டியவாறு ஒரு வண்டி புறப்பட ஆயத்தமாக நின்று கொண்டிருந்தது. ஆனால் வண்டி முழுதும் காலியாகக் கிடந்தது.

''இதில்தான் ஏற்றப் போகிறார்கள். நீங்கள் இந்தப் பெட்டிப் பக்கத்திலேயே நில்லுங்கள். இங்குதான் உங்கள் டியூட்டி. யாராவது போலீஸ் அதிகாரி வந்தால் மட்டும் ஸல்யூட் அடித்துக் கொள்ளுங்கள். அதோ என்னுடைய இடம் அது. நான் அங்கு நிற்கிறேன்'' என்று கூறி ரங்கமணியை ரயில் வண்டி பக்கத்தில் நிறுத்தி விட்டுச் சற்றுத் தள்ளிப் போய் விட்டார் போலீஸ்காரர்.

ரங்கமணிக்கு உள்ளுக்குள் நடுக்கம் இருந்தாலும் அந்த மாதிரியான சாகஸத்தில் ரசனையும் இருந்தது. பெரும் தலைவர்களைக் காணப் போகிறோம் என்ற பரபரப்பும் அவனிடம் குடிகொண்டிருந்தது.

அதிகாலையில் ஐந்து மணிக்கு ஸ்டேஷனில் பரபரப்பு ஏற்பட்டது. பல கார்கள் வெளியே வந்து நிற்கும் சத்தமும், போலீஸ்காரர்களின் பூட்ஸ் சத்தமும் ஸ்டேஷனில் பரபரப்பை உண்டாக்கின. ரங்கமணியின் நெஞ்சு படபடவென்று அடித்துக்கொண்டது. சிறிது நேரத்துக்குள் ராணுவத்தைச் சேர்ந்த அதிகாரிகள் சிலர், காலியாக நின்ற வண்டிக்குள் ஏறிச் சோதித்துப் பார்த்தார்கள். அதிகாரிகளைக் கண்டதும் ரங்கமணி, போலீஸ் பாணியில் ஸல்யூட் அடித்துக் கொண்டான்.

திடீரென்று பிளாட்பாரத்தில் கலகலப்புத் தோன்றியது. பல தலைவர்களைப் போலீஸ்காரர்கள் அழைத்து வந்து வண்டியில் ஏற்றினார்கள். ரங்கமணி ஆடாமல் அசையாமல் விழி பிதுங்க அனைவரையும் பார்த்துக்கொண்டு நின்றான். எங்கோ ஒரு சொப்பன உலகத்தில் இருப்பது போன்ற பிரமை தட்டியது.

சிறிது நேரத்தில் பிளாட்பாரத்தின் வாசல் வழியாக ஜவாஹர்லால் நுழைந்து உள்ளே வந்ததைக் கண்டதும் ரங்கமணிக்கு உற்சாகம் தாங்கவில்லை. நேருவை அழைத்து வந்த ஒரு ராணுவ அதிகாரி, ரங்கமணி நின்ற இடத்திலிருந்த பெட்டியைத் திறந்து நேருவை அதில் ஏற்றி விட்டார். உள்ளே நுழைந்த நேரு ஜன்னல் பக்கமாக வந்து உட்கார்ந்து கொண்டு பிளாட்பாரத்தில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்குப் பக்கத்தில் தான் அந்தப் பெட்டிக்குக் காவலாக ரங்கமணி நின்று கொண்டிருந்தான். சுற்றுமுற்றும் ஒரு முறை பார்த்துவிட்டு நேருவை வணங்கினான். நேருவும் பதிலுக்கு வணங்கினார். வண்டியை நெருங்கி நின்று கொண்டு நேருவிடம் பேச்சுக் கொடுத்தான்.

''மக்களுக்குத் தாங்கள் சொல்லக் கூடிய செய்தி ஏதாவது உண்டா?'' — ரங்கமணி மெதுவாகக் கேட்டான். நேருஜி திகைப்புடன் அவனை உற்றுப் பார்த்தார். ஒரு ரயில்வே போலீஸ்காரர் இவ்வளவு தைரியமாகத்

தம்மிடம் இப்படி ஒரு கேள்வியைக் கேட்கிறாரே என்று முதலில் வியந்தார். ஆனால் ரங்கமணியின் முகத்தை உற்றுப் பார்த்த போது எங்கோ பார்த்த ஞாபகம் வந்தது. திடீரென்று அவர் முகம் மலர்ந்தது.

''நீ..... நீ.....'' என்று இழுத்தார் நேரு.

''நேற்று காலையில் ரோஜாப் பூ கொடுத்தேனே?'' என்றான் ரங்கமணி சிரித்துக் கொண்டே.

''அட கடவுளே, என்ன துணிச்சல்!.... நீயா...? உன் சாமர்த்தியமே சாமர்த்தியம். உன்னுடைய பத்திரிகை உன்னை நிருபராகக் கொண்டதற்காகப் பெருமைப்பட வேண்டும்'' என்றார் நேரு மெதுவாக.

''மக்களுக்கு நீங்கள் தெரிவிக்கும் செய்தி ஏதாவது உண்டா ?''

''நேற்று நீ கூறியபடி தலைவர்கள் எல்லாரையும் கைது செய்துவிட்டார்கள். நீ தெரிந்துதான் சொல்லியிருக்கிறாய்!'' என்றார் ஜவாஹர்லால் நேரு.

இந்த நேரத்தில் ஒரு ராணுவ அதிகாரி, வல்லபாய் படேலை அழைத்துக்



கொண்டு அந்தப் பக்கமாக வரவே, நேரு, பேச்சை நிறுத்தி விட்டுப் படேலைக் கவனித்தார். ரங்கமணி அந்த அதிகாரிக்கு ஒரு ஸல்யூட் அடித்தான். படேலைக் கண்டதும், நேரு, உற்சாகத்துடன் வரவேற்றார். நேருவுக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு அதிகாரியைப் பின்தொடர்ந்தார் படேல். பக்கத்துப் பெட்டியில் படேலை ஏற்றிவிட்டு ராணுவ அதிகாரி சென்ற பிறகு ரங்கமணி, நேருவை நெருங்கினான்.

''நாங்கள் சிறைக்குச் செல்கிறோம். மக்கள் அதைரியமடையாமல் இருக்க வேண்டும்'' என்றார் நேரு.

''தலைவர்களை இழந்த மக்கள், மனம் கொதித்துப் போங்கி எழுந்தால்?'' என்று ரங்கமணி கேட்டான்.

''அப்படி எழுந்தால், அப்படிப் பொங்கி எழும் ஒவ்வொருவருடைய கால் தூசிக்கும் நான் தலை வணங்குகிறேன்'' என்றார் நேருஜி உணர்ச்சியுடன். அப்போது நேருவின் பார்வையில் ஏதோ படவே, அவர் கூர்ந்து வெளியே பார்த்தார்.

''ஓ... காந்திஜியும் வந்து விட்டார்'' என்றார் நேருஜி பரபரப்புடன். ரங்கமணி திரும்பிப் பார்த்தான். சற்றுத் தள்ளி ராணுவ அதிகாரிகள் சூழ்ந்து நின்றார்கள். அந்தக் கூட்டத்துக்கு மத்தியில் இருந்து மகாத்மா காந்தி, ரயில் வண்டிக்குள் ஏறினார். அவருடைய முழு உருவமும் ரங்கமணிக்குச் சரியாகத் தெரியவில்லை. அவருடைய கைத்தடியும் வழுக்குத் தலையும்தான் தெரிந்தன.

உடனே ரங்கமணிக்குத் திரிவேணியின் ஞாபகம் தான் வந்தது. ''அவளுடைய விருப்பப்படி மகாத்மாவைச் சந்தித்தாகிவிட்டது'' என்று முனகிக் கொண்டான். ரயில் வண்டியில் உள்ள அத்தனை பெட்டிகளும் வராந்தா உள்ளவை. ஆதலால் வண்டியின் ஒரு



முனையிலிருந்து மறுமுனை வரை வராந்தா வழியாகச் செல்லலாம். பக்கத்துப் பெட்டியில் ஏறியிருந்த வல்லபாய் பட்டேல், வராந்தா வழியாக நடந்து நேருவின் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டார். அதைக் கவனித்த ஓர் அதிகாரி, பரபரப்படைந்து பட்டேலைப் பின்தொடர்ந்து ஓடி வந்து அவருடைய பெட்டிக்குத் திரும்பும்படி கூறினார். ஆனால் பட்டேல் மறுத்துவிட்டு நேருவுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து விடவே, அந்த அதிகாரி வேறு வழியின்றிப் பட்டேலுக்குக் காவலாக ரங்கமணிக்குப் பக்கத்தில் வந்து நிற்க வேண்டியதாயிற்று. இதனால் ரங்கமணிக்கு நேருவிடம் பேசும் வாய்ப்பு தடைப்பட்டு விட்டது. பட்டேலைக் கண்டதும் நேரு, அவருடன் பேசத் தொடங்கி விட்டார். ஆகவே ரங்கமணி மெதுவாக வண்டியை விட்டுச் சற்று விலகி முன்போல் நின்று கொண்டான்.

பிளாட்பாரத்தில் போலீஸ் அதிகாரிகளையும், கைதாகிக் கொண்டு வரப்பட்ட காங்கிரஸ் தலைவர்களையும் தவிர வேறு கூட்டமே இல்லை. காங்கிரஸ் தலைவர்கள் எங்கோ உல்லாசப் பயணத்துக்கு வருபவர்கள்போல் வந்து கொண்டிருந்தார்கள். ஒருவர் முகத்திலாவது கைதாகிச் சிறைக்குக் கொண்டு செல்லப்படுகிறோம் என்ற வருத்தமோ மனக் கலக்

கமோ இல்லே. தலைவர்கள் ஒருவரையொருவர் சந்தித்த போது மிகுந்த உற்சாகத்துடன் பேசிக்கொண்டார்கள். ஆனால் ஜவாஹர்லாலின், நேருவின் முகத்தில் மட்டும் மலர்ச்சி இல்லை. தலைவர்கள் அனைவரையும் இப்படி இந்த மாதிரி ஒரேயடியாகக் கைது செய்து ரயில் வண்டியில் ஏற்றி விட்டார்களே, மக்கள் என்ன செய்யப் போகிறார்களோ என்ற கவலே அவர் முகத்தில் பிரதிபலித்தது. மகாத்மாவையும் சிறைப்படுத்தி ரயில் வண்டியில் ஏற்றி விட்டதை அறிந்ததும் ஜவாஹர்லால் மிகவும் குழம்பினார். அவருடைய மன உணர்ச்சிகளைப் பார்வையாலேயே அளந்துகொண்டு பிளாட்பாரத்தில் நின்றான் ரங்கமணி. பட்டேலுடைய முகத்திலும் கவலே தோய்ந்திருந்ததைக் கண்டான்.

இடதுபுறமாக அவன் தற்செயலாகத் திரும்பியபோது சற்றுத் தள்ளி ஒரு பெண் கதர் உடை அணிந்து நின்று ரயில் வண்டிக்குள் யாரிடமோ பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தான். அவள்தான் அருணா ஆசப் அலி. அவளுடைய கணவரையும் கைது செய்து விட்டார்கள். அவள் வழியனுப்ப வந்திருக்கிறாள் என்று புரிந்துகொண்டான்.

ஒரே சமயத்தில் பிளாட்பாரத்தில் அத்தனே காங்கிரஸ் தலைவர்களேயும் கண்ட உற்சாகத்தில் ரங்கமணி தன்னே மறந்து பரக்கப் பரக்கப் பார்த்துக் கொண்டு நின்றான். கொஞ்ச தூரத்தில் ஒரு போலீஸ் அதிகாரி மகாதேவ தேசாயை அழைத்துக் கொண்டு வந்தார். தேசாய் பக்கத்தில் வந்ததும், ரங்கமணி, இலேசாக அவரைப் பார்த்து மரியாதையுடன் சிரித்தான். அவனேத் தேசாய் ஒரு கணம் உற்றுப் பார்த்தார். எங்கோ பார்த்த ஞாபகம் அவருக்கு. பிறகு அவனேத் தாண்டிச் சென்றுவிட்டார். மகாத்மா காந்தி ஏறிய பெட்டியில் தேசாயை ஏற்றிவிட்டார் போலீஸ் அதிகாரி. அந்தச் சமயத்தில் அந்தப் பெட்டியிலிருந்து சரோஜினி நாயுடு, சன்னல் வழியாகத் தலேயை வெளியே நீட்டி மகாதேவ தேசாயை வரவேற்ற காட்சி ரங்கமணிக்கு நன்றாகத் தெரிந்தது.

சிறைக்குச் செல்வதை ஏதோ உல்லாசப் பயணமாக நினைத்துவிட்ட அந்தத் தியாகிகளே நினைத்து மானசீகமாக வணங்கினான் ரங்கமணி. இவர்களெல்லாம் தீவிரவாதிகளாக மாறி, நாட்டில் புரட்சித் தீயைப் பற்ற வைத்தால் எப்படி இருக்கும் என்று நினைத்துப் பார்த்தான். அந்த நினைவிலேயே அவன் உடல் சிலிர்த்தது. இத்தனே பேர்களுடைய திறமை, சக்தி, தியாகம் அனைத்தையும், அஹிம்ஸை என்ற வெள்ளம் வீணுக அடித்துச் செல்கிறதே என்று நினைத்து மனம் புழுங்கினான்.

திடீரென்று போலீஸ் விசில் சத்தம் கேட்டது. சிறிது நேரத்தில் ராணுவத்தைச் சேர்ந்த வெள்ளேக்கார அதிகாரி ஒருவன், ஒவ்வொரு பெட்டியாக ஏறி, கைதிகளே எண்ணினான். நேரு இருந்த பெட்டிக்குள் நுழைந்து உரக்கச் சத்தமிட்டு எண்ணத் தொடங்கினான். அப்போது நேரு, ''சரியாக எண்ணுங்கள், யாராகிலும் அதிகமாக வந்து உள்ளே உட்கார்ந்துவிடப் போகிறார்கள்!'' என்றார். நேரு பேசியதால் எண்ணிக்கையை மறந்துவிட்ட அதிகாரி, மீண்டும் ஒருமுறை எண்ணினார். எண்ணி முடித்ததும், ''முதலில் எண்ணும்போது ஒரு எண்ணிக்கை வந்தது. இப்போது வேறு ஒரு எண்ணிக்கையல்லவா வந்திருக்கிறது?'' என்றார் நேரு, கேலியாக. அந்த அதிகாரிக்குக் குழப்பமாகிவிட்டது. மீண்டும் ஒரு முறை எண்ணினார். பாதி எண்ணிக் கொண்டிருக்கும்போது நேரு குறுக்கே பேசினார்:

''உங்களேயும் சேர்த்து எண்ணிவிடாதீர்கள்!'' அவர் குறுக்கே பேசியதால் எண்ணிக்கை மீண்டும் குழம்பி விட்டது. ஆகவே மீண்டும் ஒரு முறை அந்த அதிகாரி எண்ணத் தொடங்கினார்.

''ஏன், ஒவ்வொரு தடவையும் ஒவ்வொரு எண்ணிக்கை வருகிறதோ?'' என்றார் பக்கத்தில் இருந்த சர்தார் வல்லபாய் பட்டேல். இதைக் கேட்டுப் பெட்டிக்குள்ளிருந்த மற்றத் தலைவர்கள் குபீரென்று சிரித்துவிட்டார்கள். பாவம், அந்த அதிகாரிக்கு அழுகைதான் வரவில்லே. கடைசியாக எண்ணி முடிந்துவிட்டுக் கீழே இறங்கிய அந்த அதிகாரியைப் பார்த்ததும் ரங்கமணிக்கும் சிரிப்பு வந்துவிட்டது. அவனேப் பார்த்துக் கோபத்துடன் முறைத்து விட்டுச் சென்றான் அந்த அதிகாரி.

சிறிது நேரத்தில் ரயில் என்ஜின் விசில் ஊதியதும், பிளாட்பாரத்தில் பரபரப்பு ஏற்பட்டது. ரயில் வண்டி மெதுவாக நகரத் தொடங்கியதும் ரங்கமணி, கைகூப்பி நேருவைப் பார்த்து வணங்கினான். நேருவும் பதிலுக்கு வணங்கி விடைபெற்றுக்கொண்டார். சற்றுத் தூரத்தில் நின்ற அருணா ஆசப் அலி வண்டிக்குள் யாரையோ பார்த்து, ''சோம்பேறியாக இருந்துவிட மாட்டேன். ஏதாவது செய்து கொண்டுதானிருப்பேன்'' என்று கூறியது ரங்கமணிக்குக் கேட்டது.

வண்டி சென்ற பிறகு, போலீஸ்காரர்களின் கூட்டம் குறையத் தொடங்கிவிட்டது. ஸ்டேஷனே விட்டு வெளியே வரும்போது இன்னும் விடியவில்லே. ஓர் இருட்டான இடத்தில் போலீஸ் உடையைக் களேந்து விட்டு வாடகைக் காரில் ஏறிக் கொண்டு ஹோட்டலுக்கு விரைந்தான்.

தாஜ்மஹால் ஹோட்டலே அடைந்த போது வாசலில் இவனுக்காகக் காத்திருந்தான் சங்கர் தேவ். அவன் கையில் ஒரு சிறு பெட்டி இருந்தது. ''யாரும் சந்தேகப்படவில்லேயே?'' என்று கேட்டான் சங்கர தேவ். ''இல்லே... உங்களுடைய நண்பர் உதவினார்'' என்றான் ரங்கமணி. தன் கையிலிருந்த பெட்டியை ரங்கமணியிடம் கொடுத்து விட்டு, ''மத்தியானம் தயாராயிருங்கள். நான் வந்து உங்களே ரயில் வண்டியில் ஏற்றிவிடுகிறேன்'' என்று கூறிவிட்டு ரங்கமணியிடமிருந்து, போலீஸ் உடையைப் பெற்றுக் கொண்டு சென்றுவிட்டான் சங்கர் தேவ்.

ரங்கமணி தன்னுடைய அறைக்குள் நுழையும்போது பில்லர் ஓடி வந்தார்.

''என்ன காயா? பழமா?'' என்று ஆவலோடு கேட்டார் பில்லர்.

''பழந்தான். எல்லாத் தலைவர்களேயும் பார்த்தேன். ஆனால் ஜவாஹர்லாலிடம் மட்டும்தான் பேசினேன்.''

சென்னை குளோப் · அகஸ்தியா (70MM)
மேகலா · நூர்ஜஹான்
மற்றும் தென்னாடெங்கும்



மக்கள் திலகம்
எம்.ஜி.ஆர். அளிக்கும்
சத்யா மூவீஸ்

# காவல்காரன்

இசை - M.S.விஸ்வநாதன்
ஒளிப்பதிவு - V.ராமமூர்த்தி



திரைக்கதை, தயாரிப்பு
R.M.வீரப்பன்

டைரக்ஷன்
ப.நீலகண்டன்

ELEGANT

# அவேதன்:
# வலிகளிலிருந்தும், நோவுகளிலிருந்தும், துரிதமாக, தீமையற்ற, நிச்சயமான நிவாரணத்தை அளிப்பது ஏன்?



**முதலியவற்றிலிருந்து உங்களுக்கு துரிதமான, தீமையற்ற, நிச்சயமான நிவாரணம் அளிப்பதற்குத்தான்!**

'எபேப்' அடங்கியிருப்பதனால், அவேதன், நோவுகளையும், வலிகளையும் உடனடியாக விரட்டியடிக்கும் விசேஷ குணத்தைப் பெற்றிருக்கிறது. அவேதனில் அடங்கியுள்ள 'எபேப்' சில நிமிடங்களில் செயல் புரிகிறது—உடனடியாக நிவாரணமளிக்கிறது! அவேதன், ஒரு விதமான தீமையுமற்ற தலைவலி மாத்திரையாகத் திகழ்வதற்குக் காரணம் 'எபேப்'தான்—இதனால் கெடுதலான விளைவுகள் எதுவும் ஏற்படுவதில்லை. துரிதமான, தீமையற்ற, நிச்சயமான நிவாரணத்திற்கு—அற்புத 'எபேப்' அடங்கிய அவேதன்!

**தலைவலி, பல்வலி, முதுகுவலி, தசை-நார்களில் வலி, ஜலதோஷம், ஃப்ளூ முதலியவற்றிலிருந்தும், இதர சாதாரண வலிகள் மற்றும் நோவுகளிலிருந்தும், பெண்களின் அசௌகரியமான தினங்களிலும், துரித நிவாரணம் பெற,**




# அவேதன்®

**சாப்பிடும்படி டாக்டர்கள் சொல்லுவதில் வியப்பென்ன!**

சாப்பிடும் அளவு: 1—2 டேப்லெட்டுகள்

* என்-அஸெடைல்-பி-அமினோஃபெனால்

SQUIBB ஸாராபாய் கெமிகல்ஸ்

® இ. ஆர். ஸ்க்விப் & ஸன்ஸ் அவர்களின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க். காம்சந்த் பிரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க லைசென்ஸ் பெற்றவர்கள்.

Shilpi SC. 44/67A Tam.

''ஆ.... அது போதும். அவர் என்ன சொன்னார்?'' என்று பரபரப்புடன் கேட்டார் மில்லர்.

விக்டோரியா டெர்மினஸில் தான் பார்த்த காட்சிகளையும், நேருவுடன் பேசியதையும் விவரித்தான். ரங்கமணியிடம் பேசிவிட்டு உடனே தந்தியடிக்க ஓடிவிட்டார் மில்லர்.

காலையில் எட்டு மணிக்கு மில்லர் பரபரப்புடன் ரங்கமணியிடம் ஓடி வந்தார். ''இன்று காலையில் ஜவாஹர்லால் கொடியேற்றுவதாக இருந்ததல்லவா? அதை மக்களே இன்று ஏற்றப் போகிறார்களாம். ஒரு பெரிய ஊர்வலம் மைதானத்தை நோக்கிப் போகிறதாம். சீக்கிரம் புறப்படுங்கள். போய்ப் பார்க்கலாம்'' என்று துரிதப்படுத்தினார். இருவரும் ஒரு காரில் ஏறிக் கொண்டு ஊர்வலம் சென்று கொண்டிருக்கும் இடத்தை அடைந்தார்கள். பிறகு காரை விட்டு இறங்கிக் கூட்டத்தை விட்டுச் சற்று விலகியே நடந்து சென்றார்கள். மைதானத்தைக் கூட்டம் நெருங்கியதும் போலீஸ் படை கூட்டத்தை மறித்தது. மைதானத்துக்குள் நுழையக் கூடாது என்று தடுத்தது. கூட்டத்தின் முன்னால் ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். பக்கத்தில் வேறு ஒரு பெண் மூவர்ணக் கொடியை ஏந்தியிருந்தாள். ரங்கமணி ஒரு மேடான இடத்தில் ஏறி நின்று பார்த்த போது கொடி ஏந்திய பெண்ணுக்குப் பக்கத்தில் அருணா ஆசப் அலி நின்றது தெரிந்தது. போலீஸின் தடையையும் மீறிக் கொண்டு அருணா ஆஸப் அலி மைதானத்துக்குள் நுழைய முயன்றாள். ஆனால் போலீஸ் அதிகாரி எச்சரித்தார். அதை அருணா கேட்காமல், ''வந்தே மாதரம், மகாத்மா காந்திக்கு ஜே'' என்று கோஷித்துக் கொண்டு போலீஸையும் விலக்கிக் கொண்டு மைதானத்துக்கு வந்துவிட்டாள். அவளுடைய துணிவையும் ஆவேசத்தையும் கண்டு ரங்கமணியும், மில்லரும் பிரமித்துப் போய் நின்றார்கள். போலீஸ் படை கூடப் பிரமித்து நின்று விட்டது.

அந்த மைதானத்தில் அன்று காலையில் நேரு கொடி ஏற்றுவதாக இருந்தது. அதற்காக மைதானத்திலிருந்த கம்பத்தில் கொடி ஏற்றப்படுவதற்காக ஆயத்தமாக இருந்தது. அதை ஏற்றவிடாமல் தடுக்கத்தான் போலீஸ் படை வந்திருந்தது. ஆனால் அருணா ஆசப் அலி போலீஸ்காரர்களையும் மீறிக்கொண்டு போய் ஒரு நொடியில் கம்பத்தில் இருந்த கொடியை ஏற்றிவிட்டாள். கொடி, கம்பத்தின் உச்சியில் ஏறிப் பறந்த மறு கணம் ''வந்தே மாதரம்'' என்ற கோஷம் பம்பாய் நகரத்தையே நடுங்க வைத்தது. கம்பத்தில் பறந்த கொடியை நோக்கித் தன்னை மறந்த நிலையில் கரம் குவித்து வணங்கினான் ரங்கமணி. திடீரென்று போலீஸ் தடியடிப் பிரயோகம் செய்யவே, கூட்டம் சிதறி ஓடத் தொடங்கியது. மில்லர் அந்தக் குழப்பத்திலும் சிதறி ஓடும் கூட்டத்தையும் போலீஸின் தடியடியையும் போட்டோ பிடித்துக்கொண்டிருந்தார். பிறகு நிலைமை கட்டுக்கடங்காமல் போகவே, போலீஸார் துப்பாக்கியால் சுடத் தொடங்கினார்கள். கூட்டத்தில் ஒரே



''அல்வாவுக்குள் தங்கம் கடத்தல்னு ஒரு சேதி வந்திருக்கே! எனக்கு அந்தத் தங்க அல்வா பத்துப் பிளேட் கொண்டா!''

குழப்பம். ரங்கமணியும் மில்லரும் ஆளுக்கொரு திசையில் ஓடினார்கள். ரங்கமணி வெகு தூரம் ஓடிவிட்டான். அதன் பிறகும் துப்பாக்கி சுடும் சத்தமும், பீதியினால் அலறும் கூட்டத்தினரின் ஓலமும் அவனுக்குக் கேட்டுக் கொண்டிருந்தன.

ரங்கமணி ஹோட்டலை அடைந்தபோது காலையில் பதினொரு மணி ஆகிவிட்டது. அவனுக்கு முன்னாலேயே மில்லர் அங்கு ஓடி வந்து சேர்ந்திருப்பதைக் கவனித்தான்.

''நல்ல வேளை! தப்பித்தேன். ஒரு குண்டு என் தலைக்கு மேல் இரைந்துகொண்டு சென்றது. அப்பப்பா என்ன பயங்கரம்! ஒருவன் குண்டடி பட்டுக் கீழே சாய்வதை அப்படியே படம் பிடித்து விட்டேன்'' என்றார் மில்லர்.

''படம் பிடிக்க இதுவா நேரம்?''

''இதுதான் அருமையான சந்தர்ப்பம்... இந்த மாதிரிப் படங்கள் அமைவதுதான் பிரமாதம். உயிருக்குப் பயந்தால் செய்தி கிடைக்குமா?'' என்றார் மில்லர் மிகுந்த உற்சாகத்துடன்.

''அப்படியானால் ஏன் ஓடி வந்தீர்கள், அங்கேயே படம் பிடிப்பதுதானே?'' என்றான் ரங்கமணி வெடுக்கென்று.

''பிடித்திருப்பேன். ஆனால் ஒரு போலீஸ்காரர் என்னைக் குறி பார்த்தார். நல்ல வேளை கவனித்தேன். தரையில் படுத்து விட்டேன். குண்டு தலைக்கு மேல் போய் விட்டது. திருடர்களைக் குறி பார்க்கும் சூரர்களை இங்குதான் பார்க்கிறேன்'' என்றார் மில்லர் வெறுப்புடன்.

''ஒருவேளை அந்தப் போலீஸ்காரர் தேசியவாதியாக இருப்பார். உங்களை ஆங்கிலேயர் என்று நினைத்துக் கொண்டு குறி பார்த்திருப்

பார்'' என்றான் ரங்கமணி சிரித்துக் கொண்டே.

''எப்படியோ, எனக்குத் தலைவி இன்று தப்ப வேண்டும் என்று இருக்கிறது. தப்[illegible]னேன்'' என்றார் மில்லர்.

இந்தச் சமயத்தில் சற்றுத் தூரத்தில் எங்கோ வெடிகுண்டு வெடிக்கும் சத்தம் கேட்டது.

''போலீஸ் இன்னும் சுடுகிறது'' என்றான் ரங்கமணி.

''இல்லை. இது துப்பாக்கிக் குண்டின் சத்தமில்லை. நாட்டு கைவெடிகுண்டு வெடிச் சத்தம் மாதிரி இருந்தது. இன்று தெருவில் நடமாட முடியாது போலிருக்கிறதே'' என்றார் மில்லர்.

அன்று மத்தியானம் ஒரு மணிக்கு சங்கர் தேவ் ஒரு காருடன் தாஜ்மஹால் ஹோட்டலுக்கு வந்து விட்டான். ரங்கமணி மில்லரிடம் விடைபெற்றுக் கொண்டு காரில் ஏறினான்.

''மிஸ்டர் ரங்கமணி! நான் அமெரிக்கா போகு முன்பு உங்களைக் கட்டாயம் வந்து சந்திக்கிறேன்'' என்று கூறினார் மில்லர். விக்டோரியா டெர்மினலை நோக்கிக் கார் விரைந்தது.

''தேவிகாவை நான் பார்க்க முடியுமா?'' என்று கேட்டான் ரங்கமணி.

''முடியாது. இரண்டு மணி நேரத்துக்கு முன் உங்களுக்கு ஒரு வெடிச் சத்தம் இந்தப் பக்கத்தில் கேட்டிருக்குமே?'' என்று கேட்டான் சங்கர் தேவ்.

''ஆமாம். சற்றுத் தூரத்தில் எங்கோ கேட்டது.''

''ஒரு வெள்ளைக்கார அதிகாரி வீட்டில் கை வெடிகுண்டு விழுந்து வீட்டின் ஒரு பக்கம் முழுதும் இடிந்துவிட்டது. அதிகாரிக்குப் பலத்த அடி... தேவிகாவின் வேலை'' என்றான் சங்கர்தேவ். இதைக் கேட்ட ரங்கமணி அதிர்ந்து விட்டான். 'தேவிகா அவ்வளவு துணிவும் ஆற்றலும் உள்ளவளா?' என்று வியந்தான். இந்தியாவில் வீரம் செத்துவிடவில்லை என்ற பூரிப்பில் ஆழ்ந்தான்.

''தப்பிவிட்டாள். அவளை இனிப் பிடிக்க முடியாது. அந்த வெள்ளைக்கார அதிகாரி இதற்குள் பிணமாகியிருப்பான்... அவனுக்கு வேண்டியதுதான். வெறிபிடித்த போலீஸ் அதிகாரி அவன்'' என்றான் சங்கர் தேவ் கோபத்துடன்.

ரங்கமணிக்கு உடனே தேவிகாவைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. ஆனால் அவள் தப்பி ஒளிந்திருக்கிறாளே, எப்படிக் காண முடியும் என்று தன்னைத் தானே சமாதானப்படுத்திக் கொண்டான்.

விக்டோரியா டெர்மினலில் ரயில் வண்டி புறப்படத் தயாரா யிருந்தது. ஸ்டேஷன் முழுவதும் போலீஸ்காரர்களின் கூட்டம் மிகுந்திருந்தது. மக்களிடையே பீதியும் பரபரப்பும் மிகுந்திருந்தன. அந்த ரயில் வண்டி உருப்படியாகப் போய்ச் சேருமா, அல்லது வழியில் புரட்சியாளர்களால் உருட்டிவிடப்படுமா என்ற சந்தேகத்தில் பிரயாணிகள் அமைதி இழந்து தவித்துக் கொண்டிருந்தார்கள்.

''வேறு வழியில்லை. இந்த ஒரு வண்டி தான் இப்போதைக்கு இருக்கிறது. இதை விட்டால் இன்னும் சங்கடந்தான். போகப் போகப் புரட்சி நெருப்பு பற்றி எரியுமே தவிர தணியாது'' என்றான் சங்கர் தேவ். அந்த வண்டியில் ஏறிக்கொண்டான் ரங்கமணி.

வண்டி அரை மணி தாமதமாகத்தான் புறப்பட்டது. வண்டிக்குள் இருந்த பிரயாணிகள் பீதியினால் முகம் வெளுத்துப் போய்ப் பார்க்கப் பரிதாபமாக இருந்தார்கள். ரங்கமணிக்குப் பயம் ஒன்றுமில்லை. அவனுடைய கவலையெல்லாம் தன்னிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கும் பெட்டியைச் சர்தாரிடம் ஒப்படைத்துவிட வேண்டும் என்பதைப் பற்றித்தான். மக்களின் பீதியைக் கண்டு அவனுக்குச் சிரிப்பாயிருந்தது.

சாக இவ்வளவு பயமா? உங்களை நம்பியா தலைவர்கள் இந்திய சுதந்திரத்துக்கு அவ்வளவு தியாகமும் செய்கிறார்கள்? புரட்சியைக் கேட்ட மாத்திரத்திலேயே இப்படித் தொடை நடுங்கும் இவர்களிடம் சுதந்திர இந்தியா என்ன பாடுபடப் போகிறதோ? பாரதத் தாயே, உன் தலைவிதி எப்படி இருக்கிறதோ?

ரங்கமணியின் மனம் மக்களின் கோழைத்தனத்தையும், சுயநலத்தையும் கண்டு கதறியது.

ஒவ்வொரு ஸ்டேஷனிலும் பரபரப்பு இருந்தது. ரயில் வண்டி சில ஸ்டேஷன்களில் நில்லாமல் விரைந்தது.

சில ஸ்டேஷன்களில் போலீஸாரின் கெடுபிடி அதிகமாக இருந்தது. எந்தச் சமயத்திலும் கூட்டத்தில் கலவரம் தோன்றிவிடும் என்ற நிலைமைதான் ஒவ்வோர் ஸ்டேஷனிலும் இருந்தது. கடைசியில் ஒரு தொந்தரவும் இல்லாமல் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனுக்குள் நுழைந்தது ரங்கமணி ஏறி வந்த வண்டி.

அன்று இரவே திருநெல்வேலிக்கு ரயில் வண்டியில் புறப்பட்டு விட்டான் ரங்கமணி. அவனுடைய எண்ணமெல்லாம் திருநெல்வேலியில் இருந்தது. எங்கு பார்த்தாலும், கொந்தளிப்பு இருக்கும்போது திருநெல்வேலி மட்டும் தூங்கிக் கொண்டா இருக்கும்? திரிவேணியின் தலைமையில் தாமிரபரணிக் கரையிலும் புரட்சித் தீ பற்றத் தொடங்கிவிடும். அவளுடைய பேச்சுக்குத்தான் எவ்வளவு சக்தி இருக்கிறது...!

பம்பாயில் அருணா ஆசப் அலி துணிவுடன் கொடி ஏற்றிய நினைவு வந்தது. தொடர்ந்து திரிவேணியின் நினைவும் போட்டியிட்டது. மதுரை ரயில் நிலையத்தில் வண்டியில் அவள் கொடி கட்டிய சம்பவம் நினைவில் புகுந்தது. பழைய நினைவுகளின் இனிமையில் மூழ்கினான். அவனுடைய சிந்தனைக்கு ஏற்பத் தாளம் போட்டபடி ரயில் வண்டியும் திருநெல்வேலியை நோக்கி ஓடிக் கொண்டிருந்தது. (தொடரும்)

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!

ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

கால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்!

நீங்கள் பற்பொடியை விரும்பினால் இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.







பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல்துலக்குங்கள்

...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டெண்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.

DC. 6. 23 TAM



# பாரசீகக் குட்டிக் கதைகள்

## எல்லாம் ஆண்டவன் மயம்!

ஒரு திருடன் ஒரு தோட்டத்துக்குள் புகுந்து அங்கிருந்த பேரீச்ச மரத்தில் ஏறிப் பழங்களை உதிர்த்துக் கொண்டிருந்தான். இதைத் தோட்டக்காரன் பார்த்துக் கொண்டான். ''யாரடா திருடன்?'' என்று அவன் கூச்சல் போட்டான்.

''நான் திருடனா? நான் ஆண்டவனின் ஊழியன். ஆண்டவனின் தோட்டத்தில் ஆண்டவன் கொடுத்த பேரீச்சம் பழங்களைச் சாப்பிட வந்திருக்கிறேன்'' என்றான் திருடன்.

''அப்படியா சமாசாரம்?'' என்று சொல்லி விட்டுத் தோட்டக்காரன் ஒரு கயிற்றை எடுத்



துக் கொண்டு வந்து திருடனை மரத்தோடு சேர்த்துக் கட்டி வைத்து அடித்தான்.

''ஆண்டவனின் ஊழியனை அடிக்கிறாயே?'' என்றான் திருடன்.

''நானும் ஆண்டவனின் ஊழியனே. இந்தத் தடியும் ஆண்டவன் கொடுத்த தடி. உன் முதுகும் ஆண்டவன் கொடுத்த முதுகு. ஆண்டவன் கட்டளைப்படியே உன்னை அடிக்கிறேன். ஏன் அடிக்கக் கூடாது?'' என்று கேட்டான் தோட்டக்காரன்.

## நாடோடியின் அழுகை

அரேபியாவைச் சேர்ந்த ஒரு நாடோடி ஒரு நாள் சாலை ஓரத்தில் உட்கார்ந்து அழுது கொண்டிருந்தான். ஒரு வழிப் போக்கன் அவனைப் பார்த்து, ''ஏனப்பா, அழுகிறாய்?'' என்று கேட்டான்.

''என் அருமையான நாய் செத்துப் போய் விட்டது. அதோ அங்கே கிடக்கிறது, பார். அது எனக்குச் செய்திருக்கும் உதவிகள் கொஞ்சநஞ்சமல்ல'' என்றான் நாடோடி.

''அது ஏன் செத்துப் போய் விட்டது?''

''பசிக் கொடுமைதான். பசி பொறுக்க மாட்டாமல் வாடி மெலிந்து செத்துப் போய் விட்டது.''

''அப்படியா? சரிதான். ஆமாம்; கையில் ஒரு பெரிய மூட்டை வைத்திருக்கிறாயே, அதில் என்ன இருக்கிறது?''

''சாப்பாடு. நேற்று இரவு நான் சாப்பிட்டது போக மிச்சம்.''

''இந்தச் சாப்பாட்டை நேற்றிரவே நீ நாய்க்குப் போட்டிருக்கலாமே! போட்டிருந்



தால் அது செத்திருக்காது அல்லவா?'' என்று கேட்டான் வழிப்போக்கன்.

''அது எப்படி முடியும்? சாப்பாடு என்ன வழியிலேயே கண்டெடுக்கக் கூடிய பொருளா? விலை கொடுத்தல்லவா அதை வாங்க வேண்டும்? அதே சமயத்தில் கண்ணீரை விலை கொடுக்காமலே கொட்டலாம். அதனால் அழுது கொண்டிருக்கிறேன்'' என்றான் நாடோடி.

## மூன்று உபதேசங்கள்

ஒரு வேட்டைக்காரன் வலை போட்டு ஒரு பறவையைப் பிடித்து விட்டான். அப்பொழுது அந்தப் பறவை அவனைப் பார்த்து, ''நீ எத்தனையோ ஆடுகளையும் மாடுகளையும் கொன்று தின்றவன். அப்படித் தின்றும் உன் பசி தீரவில்லை. இருந்திருந்து என்னைக் கொன்று சாப்பிட நினைக்கிறாயே! என் உடம்பில் உள்ள சதை உனக்கு எந்த மூலைக்கு? என்னை விட்டு விடு. நான் உனக்கு மூன்று உபதேசங்கள் செய்கிறேன். நீ அவற்றைக் கடைப்பிடித்தால் அதிர்ஷ்டம் உன்னைத் தானே தேடி வரும். முதலாவது உபதேசத்தை உன் கையில் இருந்தும், இரண்டாவது உபதேசத்தை உன் வீட்டுக் கூரையி

தொகுப்பு: கு. அழகிரிசாமி

லிருந்தும் மூன்றாவது உபதேசத்தை ஒரு மரத்திலிருந்தும் செய்கிறேன். இதோ முதல் உபதேசம்: "யார் சொன்னாலும் சரி, அபத்தத்தை நம்பாதே!" என்றது.

முதல் உபதேசத்தைச் செய்துவிட்டு அந்தப் பறவை அவன் கையிலிருந்து பறந்து போய் விட்டுக் கூரையில் உட்கார்ந்தது. உடனே இரண்டாவது உபதேசத்தைச் செய்தது.

"போனதை நினைத்து வருந்தாதே. உன் சக்திக்கு உட்படாமல் போய் விட்டதை நினைத்து அழுது என்ன பிரயோசனம்?" என்று சொன்ன பறவை, தொடர்ந்து, "என் உடம்பினுள் ஒரு முத்து இருக்கிறது. பத்துப் பலம் எடையுள்ள மிகப் பெரிய முத்து. அது மட்டும் உன்னிடம் இருந்தால் நீயும் உன் குழந்தைகளும் கோடீசுவரர்களாக வாழலாம். ஆனால் அது உனக்குக் கிடைக்கப் போவதில்லை. ஆண்டவன் உனக்கு அந்தப் பாக்கியத்தைக் கொடுக்கவில்லை" என்று கூறியது.



வேட்டைக்காரன் தன் துர்ப்பாக்கியத்தை நினைத்து அழுது புலம்பினான்.

அப்பொழுது பறவை சொன்னது: "போனதை நினைத்து வருந்தக் கூடாது என்று சொல்லியும் நீ அழுகிறாயே! என் உபதேசம் உனக்குப் புரியவில்லையா? அல்லது நீ செவிடனா? அபத்தத்தை நம்பாதே என்று முதலில் நான் சொன்னதையும் நீ மறந்து விட்டாய். என்னுடைய சின்னஞ்சிறு உடம்பினுள் பத்துப் பலம் எடையுள்ள முத்து எப்படி இருக்க முடியும்?"

அவனுக்கு அப்போதுதான் புத்தியில் தெளிவு பிறந்தது. "உன்னுடைய மூன்றாவது உபதேசம் என்ன?" என்று வேட்டைக்காரன் கேட்டான்.

"நான் செய்த இரண்டு உபதேசங்களையும் நீ சரிவரக் கடைப்பிடித்து வா. அப்புறம் உனக்கு மூன்றாவது உபதேசத்தைச் செய்கிறேன்" என்று சொல்லி விட்டுப் பறவை பறந்து போய் விட்டது.

## மோஸஸ் கேட்ட கேள்வி

"ஆண்டவனே! நீயே படைத்த மக்களை நீயே அழிக்கிறாயே, ஏன்?" என்று கடவுளைப் பார்த்துக் கேட்டார் மோஸஸ்.



இந்தக் கேள்வி கடவுளுக்கு மகிழ்ச்சியை அளித்தது. உடனே அவர் சொன்னார்: "மோஸஸ்! நீ கைநிறையத் தானிய விதைகளை எடுத்துக் கொண்டு போய் விதைத்து விட்டு வா. அப்புறம் உன்னுடைய கேள்விக்குப் பதில் சொல்கிறேன்."

மோஸஸும் அவ்வாறே தானியத்தைக் கொண்டு போய் விதைத்தார். பயிர் முளைத்தது. வளர்ந்தது; கதிரும் விட்டது. தக்க பருவத்தில் மோஸஸ் அரிவாளை எடுத்துக் கொண்டு போய் அறுவடை செய்யத் தொடங்கினார். அப்பொழுது ஓர் அசரீரி வாக்குக் கேட்டது:

"நீயே விதைத்தாய்; பயிர் பூரண வளர்ச்சி பெற்றதும் நீயே அறுக்கிறாய். ஏன்?"

இந்த அசரீரி வாக்கைக் கேட்ட மோஸஸ் "அறுவடை செய்தால்தானே, தானியத்தையும் வைக்கோலையும் வெவ்வேறாகப் பிரித்து எடுத்து ஒவ்வொன்றையும் அது அதற்கு உரிய இடத்தில் கொண்டு போய்ச் சேர்த்து வைக்க முடியும்? இரண்டையும் ஒன்றாகக் கலந்து வைப்பது விவேகம் ஆகுமா? அதனால்தான் தனித்தனியாகப் பிரித்துப் பிணையல் அடிப்பதற்காக அறுவடை செய்து கொண்டிருக்கிறேன்" என்றார்.

"பிணையல் அடித்துத் தானியத்தையும் வைக்கோலையும் வெவ்வேறாகப் பிரிக்கும் விவேகம் உனக்கு எப்படிக் கிட்டியது?" என்று கேட்டார் கடவுள்.

"சாரம் எது, சக்கை எது என்பதைக் கண்டறிந்து தனித்தனியே பிரிக்கும் விவேகத்தை எனக்கு நீதான் கொடுத்தாய்" என்றார் மோஸஸ்.

"அப்படியானால் எனக்கும் அந்த மாதிரி பிரிக்கக்கூடிய விவேகம் ஏன் இருக்கக் கூடாது?" என்று கேட்டார் கடவுள்.

## மாடியில் ஒட்டகங்களா?

இப்ராஹிம் இபுன் ஆதாம் என்ற அரசன் தெய்வ பக்தி மிகுந்தவன். ஆண்டவனை எப்படியாவது தரிசித்துவிட வேண்டும் என்று அவன் தினந்தோறும் பிரார்த்தனை செய்வான். ஒரு நாள் இரவு சிம்மாசனத்தில் இருந்தபடியே அவன் பிரார்த்தனையில் ஈடுபட்டிருந்த போது, மாடியில் 'தட தட' என்று பலமான காலடியோசை கேட்டது. 'இந்த நேரத்தில் யார் இப்படி நடக்கிறார்கள்?' என்று யோசித்த அரசன், "யார் அது?" என்று கேட்டான்.



மாடியிலிருந்து அதிசயமான தோற்றத்தோடு சிலர் இறங்கி, ஜன்னல் வழியாக அரசனுக்குத் தங்கள் தலையைக் காட்டினார்கள்.

''மாடியில் என்ன செய்தீர்கள்?'' என்று கேட்டான் அரசன்.

''ஒட்டகங்களைத் தேடிக் கொண்டிருந்தோம்'' என்று பதிலளித்தார்கள் அந்த அதிசய மனிதர்கள்.

''ஒட்டகங்களை மாடியில் யாரும் தேடுவார்களா?'' என்று அரசன் கேட்டான்.

''ஏன் தேடக் கூடாது? ஆண்டவனை நீங்கள் சிம்மாசனத்தில் இருந்து கொண்டு எப்படித் தேடுகிறீர்கள்?'' என்று அவர்கள் கேட்டார்கள். உடனே மறைந்து போய் விட்டார்கள்.

இப்ராஹிம் இபுன் ஆதாம் அந்த க்ஷணத்திலேயே அரச பதவியைத் துறந்து வெளியேறி விட்டான்.

## புதையல் எங்கே?

பாக்தாத் நகரில் ஒரு செல்வந்தனின் மகன் பூர்வீக ஆஸ்திகளையெல்லாம் வீண் விரயம் செய்து தொலைத்துவிட்டு, கடைசியில் பரம ஏழையாகிச் சாப்பாட்டுக்கே கஷ்டப்படும் நிலைக்கு வந்து விட்டான். ''ஆண்டவனே! எனக்குச் செல்வத்தைக் கொடு; இல்லையென்றால் மரணத்தைக் கொடு'' என்று சொல்லிக் கொண்டு ஒரு நாள் இரவு அவன் படுத்தான். கனவில் அவன் ஒரு குரலைக் கேட்டான்:

''நீ கெய்ரோ நகரத்துக்குப் போ. அங்கே இன்ன தெருவில், இன்ன இடத்தில் ஒரு பெரிய புதையல் இருக்கிறது. அதை எடுத்துக் கொண்டு வந்து சௌக்கியமாக இரு.''

தூங்கி எழுந்த அவன் கனவில் கேட்ட பிரகாரம் கெய்ரோ நகரத்துக்குப் பயணமானான். அங்கே போய்க் குறிப்பிட்ட தெருவைத் தேடி அலைந்தான். இருட்டி விட்டது. கையில் அரைக் காசுகூட இல்லை. பசி வாட்டி எடுத்தது. பிச்சை எடுக்க அவனுக்கு அவமானமாக இருந்தது. ஆனால் நள்ளிரவான பிறகு மனம் மாறி, 'இந்த ஊரில் நம்மை யாருக்குத் தெரியும்? அதுவும் இருட்டு நேரத்தில் ராப்பாடியைப் போல் பாடிக்கொண்டே பிச்சை எடுக்கப் போகிறோம். யாரும் உள்ளே இருந்து கொண்டுதான் நாலு காசை விட்டெறியப் போகிறார்கள். அதனால் நாம் வெட்கப்பட வேண்டியதில்லை' என்று முடிவு கட்டிக் கொண்டு அவன் பிச்சைக்குக் கிளம்பினான்.

அப்போது கெய்ரோவில் திருடர்கள் பயம் அதிகமாக இருந்ததால் ஏராளமான காவற்காரர்கள் நகரத் தெருக்களில் ரோந்து சுற்றிக் கொண்டிருந்தார்கள். ''இரவில் எவன் அகப்பட்டாலும் — அவன் என் சொந்தக்காரனாக இருந்தாலும் சரி — அவன் கையை வெட்டி விடுங்கள்'' என்று அரசனும் கட்டளையிட்டிருந்தான். இந்த நிலையில் ஒரு காவற்காரன், அந்தப் பாக்தாத் நகரத்தானைப் பிடித்துக் கொண்டான்.

''திருட்டுப் பயலே! யாரடா நீ?'' என்று காவற்காரன் கேட்டான்.

''ஐயா! நான் திருடனல்ல. பசிக் கொடுமையால் பிச்சைக்குக் கிளம்பியவன் தான். எனக்குச் சொந்த ஊர் பாக்தாத்'' என்றான் அவன்.

அவன் பேசும் தோரணையிலிருந்து அவனை நிரபராதி என்று நினைத்த காவற்காரன், ''பாக்தாத்திலிருந்து இங்கே ஏன் வந்தாய்?'' என்று கேட்டான்.

அவன் தான் கனவு கண்டதையும், புதையலைத் தேடி வந்திருப்பதையும் விவரமாகச் சொன்னான். உடனே காவற்காரன் சிரித்து, ''அட, பைத்தியக்காரா! நீ நல்லவனாக இருந்தாலும் முட்டாளாக இருக்கிறாயே! கனவை நம்பி இவ்வளவு தூரம் வந்திருக்கிறாயே! உனக்குச் சமாசாரம் தெரியுமா? பாக்தாத் நகரில் ஒரு தெருவில் ஒரு வீட்டில் புதையல் இருப்பதாக நான் கனவு கண்டிருக்கிறேன். அதற்காக உன்னைப் போல் முட்டாள்தனமாக நான் அதைத் தேடிப் புறப்பட்டு விடவில்லை'' என்று சொன்னான்.

''பாக்தாத்தில் எந்தத் தெரு? எந்தத் தெரு?'' என்று கேட்டான் அவன்.

காவற்காரன் தெருவின் பெயரையும், வீட்டின் அடையாளங்களையும் சொன்னான். அது அந்தப் பாக்தாத்காரனுடைய வீடே தான்! அவன் ஆச்சரியம் தாங்காமல், ''என் வீட்டில் புதையல் இருக்க, இங்கே வந்தேனே!'' என்று வருந்தி, காவற்காரனை வணங்கி விடைபெற்றுக் கொண்டு ஊருக்குத் திரும்பினான்.



## அத்தியாயம் 23

"அதற்கென்ன, நன்றாகச் சிரித்துக் கொள்ளுங்கள். ஆனால் ஒன்று சொல்கிறேன். 'சீதா தியாகி, சீதா தியாகி'ன்னு மட்டும் என்கிட்டே சொல்லாதீர்கள். நான் பெரியவனாக இருந்திருந்தால், என்ன செய்திருப்பேனோ, அதை அவள் எனக்கும் கமலாவுக்கும் பொறுப்பாகச் செய்தாள். அந்தப் பெருமை அவளுக்கு உண்டு. நடக்க இருந்த கலியாணம் நடக்காமல் போச்சே என்று அவள் மேலே இரக்கம் உண்டு. ஆனால் இந்த உணர்ச்சிகளுக்கு மேல் என் மனசிலே வேறு எதுவும் இல்லை, இதைப் பொறுத்தமட்டில்!" என்றான் ஜானு.

சந்தானம் வாயடைத்துப் போய் அவனையே பார்த்தான். அவனுடைய சிவப்பான முகத்தில் இரத்தம் பிறிட்டுச் செம்மையை அழகாக்கியது. அவனுடைய குவிந்த உதடுகள், ஏதோ ஒரு வெறியிலே துடிப்பதுபோல் துடித்தன.

"தியாகத்தைப் பற்றி நீ சொன்ன கருத்துக்கள் எனக்குப் புரிகின்றன, ஜானு!" என்றான் அவன்.

கடந்த *சில நாட்களாகவே சீதா தான் கொண்டுள்ள முடிவை எப்படித் தாயாரிடமும் ஜானுவிடமும் வெளியிடுவது என்று தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தாள். அம்மா முதலில் ஆட்சேபணை செய்யத்தான் செய்வாள். ஆனால் மெள்ள மெள்ள, வெல்லத்தை நீர் கரைப்பது போல் அவளைத் தன்வசம் இழுத்துக் கொண்டு விடலாம். ஜானுவைச் சீதா எப்படிச் சமாளிப்பாள்? வார்த்தைக்கு வார்த்தை ஜானு பதில் சொல்லித் திணற அடித்து விடுவானே ?

அன்று செக்ஷனில் வேலை செய்து கொண்டிருக்கையில் அவளுடைய பார்வை நடராஜன் மீது அடிக்கடி சென்றது. அவனும் அவளைப் போல் ஒரு குமாஸ்தாதான். அவனுக்கு இருபத்தொன்பது முப்பது வயதுதான் இருக்கும். பெற்றோருக்கு ஒரு பிள்ளையும், இரண்டு பெண்களும். இரண்டாவது தங்கைக்குச் சமீபத்தில்தான் கல்யாணம் ஆகியிருந்தது. இத்தனை நாட்களாக நடராஜனுடைய கல்யாணம் நடக்காமல் இருந்ததற்கே தங்கைகளின் விவாகங்களை முதலில் முடித்துவிட வேண்டும் என்று அவனுடைய தகப்பனாருடைய பிடிவாதம் தான் காரணம்.

ஒரு நாள் இன்னொரு குமாஸ்தா, "டேய், இன்னமே நீ மார்க்கெட்டுக்கு வந்தாச்சு. உன் அப்பா பச்சைக் கொடியைக் காட்டிவிட்டார்!" என்று உரக்கக் கூவியது சீதாவின் காதுகளில் விழுந்தது. அந்தக் கணமே அவளுடைய மனம் ஜானுவை அவனுடன் இணைத்துப் பார்த்தது. தாசில்தாராக இருந்து ஓய்வு பெற்றிருக்கும் நடராஜனுடைய தகப்பனாருக்கு. மேற்கு மாம்பலத்தில் ஒரு வீடு சொந்தத்தில் இருக்கிறது என்று அவளுக்குத் தெரியும். நூறோ, நூற்றிருபதோ பென்ஷன் வருகிறது. நடராஜனுடைய நூற்று எண்பது ரூபாய் வேறு. பெண்களைக் கொடுத்த பின், பாரம் தீர்ந்த பின் ஒரு சாதாரணக் குடும்பத்துக்கு இவை போதாதா?




நடராஜன் இந்தக் காலத்துப் பிள்ளைகளைப் போல, டெரிலினிலேயே திகழ்ந்தாலும், அவனிடம் எந்தவிதமான கெட்ட பழக்கங்களும் கிடையாது என்பதைச் சீதா அறிவாள். பெரியவர்களிடத்தில் மரியாதையுடன் நடந்து கொள்ளுகிறவன் என்பதையும் அலுவலகத்திலேயே அநுபவரீதியாகக் கண்டிருக்கிறாள். விவசாய வருமான வரி சம்பந்தமாக வெளியூர்க்காரர்கள்

எத்தனையோ பேர்கள் என்னென்னவோ குறைகளை யெல்லாம் தீர்த்துக் கொள்ள வந்து நிற்பார்கள். ஒருவரிடமும் அவன் பண்புக் குறைவாகப் பேசியதில்லை.

மொத்தத்தில் நடராஜன் எல்லா விதங்களிலும் ஜானுவுக்கு ஏற்றவன் என்று சீதா நினைத்தாள். ஜானுவைப் போன்ற சிவப்பு நிறம். புன்னகை மாறாத முகம். எடுப்பான கண்களும் மூக்கும். இளமை குலையாத உடற்கட்டு. நல்ல குணம். இதையெல்லாம் விட என்ன வேண்டியிருக்கிறது? கல்யாணம் செய்து கொண்டால் மனைவியை நன்றாக வைத்துக் கொள்ளக்கூடிய குடும்பத்தைச் சார்ந்தவன் அவன்.

நினைக்க நினைக்க மனம் இடமாக நடராஜன்தான் ஜானுவுக்கு வர வேண்டும் என்ற எண்ணமே நிலைத்தது. நடராஜன் கல்யாணம் பண்ணிக் கொள்ள மாட்டேன் என்று திமிர்ப் பிடிவாதம் செய்யாதவன் என்பதும், இரண்டு நாட்களுக்கு முன்னால் ஒரு பெண்ணைப் பார்த்து வந்ததிலிருந்து தெரிந்தது. அந்தப் பெண் இன்னும் இரண்டு அங்குலமாவது உயரமாக இருந்திருந்தால் ஏற்றுக் கொண்டிருப்பான் என்ற தகவலையும் அவள் அறிந்திருந்தாள்.

அன்று செக்ஷனில் சூப்பரின்டென்டெண்டையும், இன்னும் ஓரிரண்டு குமாஸ்தாக்களையும் தவிர வேறு யாரும் இல்லை. சீதா மெதுவாக எழுந்து சென்று நடராஜன் இருக்குமிடத்தை அடைந்தாள். அருகே காலியாகக் கிடந்த நாற்காலியையும் இழுத்துப் போட்டுக் கொண்டாள்.

ஏதோ ஆபீஸ் சம்பந்தமாகக் கேட்கத்தான் சீதா வந்திருக்கிறாள் என்று நினைத்த நடராஜன், ''என்ன சீதா வேணும்?'' என்று கேட்டான்.

அவனுடைய குரலில் தோய்ந்த பவ்யத்தை ரசித்துக் கொண்டே சீதா, ''சொந்த விஷயமாக வந்தேன்!'' என்றாள்.

''சொல்லுங்கள்!''

''உங்க வீட்டு விலாசம் வேணும். உங்களுடைய தாயார் தகப்பனாரைப் பார்க்க வரணும்.....!''

நடராஜனுடைய ஆச்சரியத்தை அவனுடைய கண்களே காட்டிக் கொடுத்து விட்டன.

''விலாசம் தரேன்.... ஆனால் எதுக்குன்னு எனக்குத் தெரியலாமா?''

''உங்களுக்குத்தான் பச்சைக் கொடி காட்டியாச்சுன்னு செக்ஷன் முழுதும் பேசிக் கொள்கிறார்களே!''

''ஓ....! அது விஷயமாகவா? நீங்க வேறு எனக்குப் பெண் பார்க்கிறீர்களா?'' சொன்ன அதே கணத்தில், சீதா சமீபத்தில் அநுபவித்த மன வேதனை அவன் நினைவுக்கு வந்தது.

''எனக்கு ஒரு தங்கை இருக்கிறாள்.''

''இரண்டு பேர்னு எப்போதோ சொன்னதாக ஞாபகம்....!''

''இரண்டு பேர்தான். ஆனால் ஒருத்தி சம்பந்தமாகத்தான் வரலாம்னு இருக்கேன்.... இருபத்துமூணு வயசு ஆறது.... போஸ்டல் டிபார்ட்மெண்டிலே இருக்கிறா.....!''

''அவளுக்குப் பார்க்கப் போகிறீர்களா?'' என்று இயந்திரமாகக் கேட்ட அவன், அர்த்தபுஷ்டியுடன் சீதாவைப் பார்த்தான்.

''எனக்கு ஆகாமல் என் தங்கைக்குக் கல்யாணமான்னுதானே உங்க மனசு கேட்கிறது?'' என்றாள் சீதா; அவனைப் புரிந்து கொண்டவளாய்.

''ஆமாம்.....''

''எனக்கும் கல்யாணத்துக்கும் ராசியில்லே. இனிமேல் அது வேண்டாம்



என்கிற ஒரு முடிவுக்கும் நான் வந்து விட்டேன்.''

''இதை உங்க அம்மா ஒப்புக் கொண்டிருக்க மாட்டாளே!''

''ஆனால் என் நிலைமை நன்னுத் தெரிஞ்சுண்டவா புரிஞ்சு கொள்ளுவா. என் அம்மாவுக்கும் புரிய வைத்துக் கொள்ளுகிறேன். எனக்கு இப்படி வயசான மாதிரி, என் தங்கைகளுக் கும் வயசாகிவிடப்படாது என்கிற ஒரு எண்ணம்தான் இப்போ என்னை ஆட்டி வைக்கிறது.....!''

நடராஜன் பதில் ஏதும் பேசாமல், தான் அவள் வரும் வரையில் எழுதிக் கொண்டிருந்த பேனுவால் ஏதோ கிறுக்கிக் கொண்டிருந்தான்.

சீதா மேலே தொடர்ந்தாள்:

''என் தங்கையைப் பற்றி நான் சொல்லக் கூடாது. எனக்கும் அவ ளுக்கும் எந்தவிதப் பொருத்தமும் கிடை யாது. அவள் நல்ல நிறம். ரொம்ப வும் அழகாக இருப்பாள். எஸ். எஸ். எல். ஸி. வரையிலே படிச்சிருக்கா. கொஞ்சம் கலகலப்பாகப் பேசுவாள். ஆனல் ஒருத்தனுக்குப் பெண்டாட்டி யாகி விட்டால், இப்போ அலங்காரத் திலே இருக்கிற மோகமும் குறைஞ்சு போய் விடும்.....''

''நிறைவையும் குறையையும் ஒளிக் காம சொல்லுகிறீர்கள்....''

''உண்மை முக்கியமில்லையா? பெண் ணைப் பார்த்தால் பிடிக்காமல் இருக் காது. ஆனல் நானே நேரடியா உங்க கிட்டே சொல்றது கொஞ்சம் அநாக ரிகம்தான்.... வேறு எப்படி என்ஞல் செய்ய முடியும்? வீட்டுக்கு மூத்தவ ளாய்ப் போய்விட்ட காரணத்தாலே சில கஷ்டங்கள் இருக்கும்....''

''நீங்கள் என் வீட்டுக்கு வாருங்கள்.''

''என் நிலைமை உங்களுக்குத் தெரி யும். உங்கள் தாயார் தகப்பனுருக்



# E.I.D.-PARRY AND EXPORTS

*The E.I.D.—Parry Group has always been export-oriented and among the first exports—at the end of the 18th century—were piece-goods, cotton stuffs, paintings, saltpetre, vegetable oils, animal horns, redwood, indigo and sugar.*

*The E.I.D.—Parry Group is constantly in search of new export items and markets and today exports its popular confectionery and Parryware (sanitaryware) to the Middle East and Malaysia. Items like handloom goods, canned prawns and cashew are exported to Europe and America. The Group is also entering the vast markets of resurgent Africa.*

*Apart from earning foreign exchange by export, the Group has consistently sought to check the outflow of exchange for imports by setting up manufacturing units in the country. It leads in the manufacture and sale of sugar, confectionery, fertilisers & sanitaryware and in the formulation of plant protection products.*

*The E.I.D.—Parry Group, fondly known as "Parrys", is one of the larger companies in India consisting of 9 subsidiary and associated concerns providing employment for more than 10,000 people.*

E.I.D.—PARRY LTD. *179 years young and still growing*

**E.I.D.—PARRY LIMITED, Dare House, Madras 1.**
SUGAR ● CONFECTIONERY ● FERTILISERS ● PESTICIDES
POTTERY ● SANITARYWARE ● AGENCIES



கும் நீங்கள் தெரியப்படுத்தி வைக்க வேண்டும்....''

''கண்டிப்பாகச் சொல்கிறேன். ஜாதகமும் தரச் சொல்கிறேன், போதுமா?''

''ரொம்ப தாங்க்ஸ்! நாம் ஆரம்பிக்கிறோம். அப்புறம் பகவான் சித்தப்படி.''

நடராஜன் புன்னகை புரிந்தான்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு மேற்கு மாம்பலத்தில் சுப்பையா நாயுடுத் தெருவுக்கு அவள் சென்றாள்.

நடராஜனுடைய தாயார், சீதாவின் குடும்பத்தைப் பற்றி ஏற்கனவே பிள்ளை மூலம் அறிந்திருந்தாளாயினும் அவளிடமும் நேரடியாக விசாரித்தாள். அவளுடைய பண்பு, அந்த அம்மாளைக் கவர்ந்தது. காப்பி, பலகாரமெல்லாம் கொடுத்து விட்டு, ஜாதகத்தையும் தந்தாள். ஜாதகம் சேர்ந்து, பிள்ளைக்கும் பெண்ணுக்கும் பரஸ்பரப் பிடித்தம் இருந்தால், சீதா வரதட்சிணையைப் பற்றியோ, சீர் வரிசைகளைப் பற்றியோ கவலைப்பட வேண்டாம் என்றும் தைரியம் அளித்தாள்.

இதுவரையில் யாருக்குமே தெரியாமல் எல்லா நடவடிக்கைகளையும் எடுத்த சீதா, மயிலாப்பூர் ஜோசியர் ஜாதகப் பொருத்தம் அபாரமாக இருக்கிறது என்று சொல்லவே, மேற்கொண்டு என்ன செய்வது என்று புரியாமல் விழித்தாள். அம்மா என்ன சொல்வாளோ என்ற பயமும், ஜானு எப்படி இந்தப் பிரேரணையை வரவேற்பாள் என்ற திகிலும் அவளை வாட்டின. இரண்டு நாட்கள் மனப் போராட்டத்தில் அவள் தவித்த பிறகு, மூன்றும் நாள் ஒரு முடிவு கண்டு விடுவது என்ற சங்கற்பம் அவளுள் உண்டாயிற்று.

அன்று அரை நாள் 'லீவு' எடுத்துக் கொண்டு வீட்டுக்கு வந்தாள். ஆபீஸை விட்டுப் புறப்படுமுன் நடராஜனைப் பார்த்தாள். அவன் என்றும் போல் முறுவலித்து விட்டுத் தன் வேலையில் ஈடுபட்டான். ஜாதகங்கள் சேர்ந்திருக்கின்றனவா என்று அவளுக்கக் கேட்க மாட்டான்; நாமாகச் சொன்னால் என்ன என்ற எண்ணம் சீதாவுக்கு ஏற்பட்டது. ஆனால் அடுத்த கணமே அந்த எண்ணத்தை மறந்தாள். ஒரு வேளை அம்மா முரட்டுப் பிடிவாதம் பிடித்தால்? ஜானு தன் சொரூபத்தைக் காட்டி விட்டால்? இவனிடம் ஜாதகப் பொருத்தத்தைச் சொன்னது மட்டும்தான் மிச்சமாகும்! அதன் பிறகு மேலே நடவடிக்கைகள் இல்லாமல் போகும்; நடராஜன் தன்னைப் பெண் வீட்டாருக்குப் பிடிக்கவில்லை என்று எண்ணிக் கொள்ளுவான்!

அவள் வீட்டை அடைந்த போது, நல்ல வேளையாகக் கமலாவும் வீட்டில் இல்லை. யாரோ ஒரு சிநேகிதியுடன் சினிமாவுக்குச் சென்றிருந்தாள்.

''என்னடீ, இன்னிக்கு இவ்வளவு சீக்கிரமா வந்துட்டே?'' என்றாள் அரிசியில் கல் பொறுக்கிக் கொண்டிருந்த பாகீரதி.

''காரியமாகத்தான்!'' என்ற சீதா குடையையும், பர்ஸையும் ரேடியோ அருகே மேஜையின் மீது வைத்துவிட்டு அம்மாவுக்கு முன்னால் வந்து உட்கார்ந்து கொண்டாள்.

''கொஞ்சம் தள்ளி உட்காரு, சீதா! வெளிச்சம் மறைக்கிறது....''

தான் இருந்த இடத்திலிருந்து சிறிது தள்ளி, சீதா முற்றத்துத் தூணின் மேல் சாய்ந்து உட்கார்ந்தாள். ஒரு நிமிஷம் மனத்தினுள் பேச வேண்டிய வார்த்தைகளைத் தயார் செய்து கொண்டு நிதானமாக —

''அம்மா! இப்போ நான் சொல்லப் போகிறதைக் கேட்டால் நீ திடுக்கிட்டுப் போனாலும் போய் விடுவே. ஒருவேளை ஆத்திரமும் கோபமும்கூட வரும்.''

''என்ன பெரிசாப் பீடிகை போடறே? என்ன நடந்தது?''

''ஒண்ணும் நடக்கலே, எனக்குக் கல்யாணம் வேண்டாம்னு நானே தீர்மானிச்சுட்டேன்....''

''இதைச் சொல்றதுக்குத்தானா லீவு போட்டுட்டு வந்தே.....?''

''கொஞ்சம் பொறுமையாக் கேளு அம்மா! எனக்கும் கல்யாணத்துக்கும் ராசியே இல்லேன்னு எனக்கே நிச்சயமாப் பட்டுடுத்து. விதி இரண்டு தரம் ஏமாத்தினப்புறம், என்னதான் பிறத்தியார் இரண்டாம் தடவை முறிஞ்சு போனது என்னுடைய நல்ல காலம்னு தேற்றினாலும், எனக்கென்னவோ மனசு சமாதானமே இல்லாமல் போய்விட்டது. இனிமேல் விதியாகப் பார்த்து எனக்கு ஒரு புருஷனைத் தேடி இழுத்துக் கொண்டு வருகிற வரைக்கும் நான் அதிலே ஓர் ஆசையோ ஆத்திரமோ படுவேன்னு எனக்குத் தோணலே. அதனாலே....'' சீதா நிறுத்தினாள்.

''அதனாலே.....?''

''அதனாலே என்னுடைய கல்யாணம் நடந்தப்புறம்தான் தங்கைகளுக்கும் பார்க்கலாம்னு ஒத்திப் போடறது சரியாக இருக்காதுன்னு தோணறது. ஒரு மாசமாகவே இப்படி ஒரு நினைப்பு என் மனசிலே பதிஞ்சு போய்விட்டது.




**''ஆமாம், நாளைக் காலையில் சரியாக ஒன்பது மணிக்கு நான் காங்கிரஸிலிருந்து இடதுசாரி கம்யூனிஸ்ட் கட்சிக்கு மாறுகிறேன்; 10-30 மணிக்குப் பிரஜா சோஷலிஸ்ட் கட்சியில் சேருகிறேன்; 11 மணிக்கு சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சிக்காரனாகப் போகிறேன்; 12-30க்கு வலதுசாரிக் கம்யூனிஸ்டாக மாறுகிறேன்; 1-30க்கு மீண்டும் காங்கிரஸிலேயே சேர்ந்துவிடப் போகிறேன்!''**

---

சமயம் வர்ற போது உன்கிட்டே சொல்லலாம்னு இருந்தேன்....''

''இப்போ அந்தச் சமயம் வந்துடுத்தா ?''

''ஆமாம், அம்மா! என்னுடைய ஆபீஸிலேயே என் ஸெக்‌ஷனிலேயே நடராஜன்னு ஒரு பிள்ளை இருக்கான். நல்ல குடும்பம். அப்பா, தாசில்தாராக இருந்து இப்போ பென்ஷன் வாங்கிண்டு இருக்கார். மாம்பலத்திலே ஒரு சின்ன வீடு இருக்கு. பிள்ளையை எனக்கு ஏழெட்டு வருஷங்களாகத் தெரியும். ஜானு வுக்குச் சரியான ஜோடி. நல்ல சிவப்பு. மூக்கும் முழியுமா கண்ணுக்கு லட்சணமாக இருப்பான்...''

''எல்லாம் சரிதானடீ. இந்த வரன் நம்ம ஜானு வுக்கு வேண்டாம்னு நான் சொல்லலே. ஆனால் உனக்கு முன்னாலே அவனுக்குக் கலியாணமா?'' என்று சொன்ன பாகீரதி, மறுகணமே, ''ஆனால், நீதான் 'எனக்குக் கலியாணமே வேண்டாம்' என் கிறாயே?'' என்றாள்.

''எனக்கு முன்னாடி அவனுக்குக் கல்யாணம் பண்ணறதிலே உனக்குப் பரிபூரண இஷ்டம் இருக்காதுன்னு எனக்குத் தெரியும். ஆனால் நீ எல்லாத்தை யும் உலகப் போக்கைத் தெரிஞ்சுண்டு பேசணும். பன்னிரண்டு வயசிலேயும் பதிமூணு வயசிலேயும் உங்களுக்கெல்லாம் அந்தக் காலத்திலே கலியாண மாச்சே, அந்தக் காலம் இல்லே இது. இப்போ நாம வாழற யுகமே வேறு. சௌகரியத்தையும் அனு கூல, பிரதிகூலங்களையும் பார்த்து நடத்திக் கொள் கிற காலம். எதிர் வீட்டுக் கற்பகத்தைப் பாரேன். வயசு முப்பத்திநாலு ஆகிறது. மூணு தங்கைகளும் மாத்தி மாத்திப் பிரசவத் துக்கு வந்துபோறா. அந்தக் குழந்தைகளுக்கெல்லாம் கற்பகம் பெரியம்மா. ஆனால் அவளை எந்தக் குழந்தை அம்மா அம் மான்னு கூப்பிடும்....? 'எம்.ஏ.' படிச்சிருக்காள். முந்நூறு ரூபாய் சம்பளம் வாங்கறா. ஆறு கலியா ணம் ? அன்னிக்கு அவள் வேண்டாம்னு சொல் லிட்டா. அதனாலே அவள் அப்பா அம்மா பேசாமல் இருக்கல்லியே. மத்த மூணு பெண்களுக்கும் கலியா ணத்தை நடத்தலியா....? இது ஓர் உதாரணத்துக்குச் சொன்னேன். இது மாதிரி எத்தனையோ குடும்பங்கள் இருக்கு....''

''நீ சொல்றதெல்லாம் எனக்குப் புரியல்லேன்னு நெனைச்சுண்டு இதையெல் லாம் என்கிட்டே விஸ்தரிக் கிறியா? எல்லாம் நன்னாப் புரியறதுடீ. உன் வயசிலே நான் மூன்று பேர்களையும் பெத்து, பிரசவத்தையும் நிறுத்தியாச்சு. நீ சொல்ற மாதிரி அது அந்தக் காலம். பெண்ணைப் பெத்துட்டால் அம்மா வயத்திலே நெருப் பைக் கட்டிண்டுடுவாள். இப்போ? கலியாணமாகா விட்டால் என்ன, சம்பா திக்கப் போயிடலாம் என் கிற தைரியம் வந்துடுத்து. இது இப்போதைய நாக ரிகம். ஆனால் நம்ம வீட்டி லேயும், கற்பகம் கேஸ் மாதிரி இருக்கணுமா ?''

மெள்ள மெள்ள அம்மா தன் வழியிலே வந்துகொண் டிருக்கிறாள், அவனுடைய மனத்துக்கு உகந்ததாக, தைரியமூட்டும் வகையில் இப்போது சமாதானப் படுத்தி விட்டால் அவள் கண்டிப்பாக ஒப்புக் கொண்டு விடுவாள் என்று சீதாவுக்குத் தோன்றியது.

'' நாம் இவ்வளவெல் லாம் சொல்கிறோமே? இந்த வருஷம் . ஜானுவுக்கும்,

உங்களை நாள் முழுவதும் மனோ உல்லாசத்துடன்
வைக்கக்கூடிய பவுடர்...

# பாண்ட்ஸ்
# ட்ரீம்ஃப்ளவர்
# டால்க்

எல்லா காலநிலைகளிலும், நீங்களும் உங்கள் குடும்பத்தில் அனைவரும் தினமும் உபயோகிக்கச் சிறந்தது பாண்ட்ஸ ட்ரீம்ஃப்ளவர் டால்க். அதை உடம்பில் தூவிக் கொண்டால் அனுபவமாகும் ஆனந்தமே அலாதி. அதன் உள்ளம் கவரும் நறுமணம் உங்களையும், உங்களைச் சூழ்ந்துள்ளவர்களையும் மகிழவைக்கும். வியர்வையை விரைவில் உறிஞ்சும் தன்மை உள்ளதால் வியர்த்துக் கொட்டும் கோடையில் உபயோகிக்க அது விசேஷமானது பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்கை உடம்பில் தூவிக்கொண்டு நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடனும், மனோ உல்லாசத்துடனும் இருங்கள்... உடலைத் தழுவி நிற்கும் நறுமணத்துடன் திகழுங்கள்!




யாவரும் வாங்கக்கூடிய விலையில்
நறுமணம் கமழும்,
உயர்ரக டால்கம் பவுடர்

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

P-5603

அடுத்த வருஷமே கமலாவுக்கும் கலியாணமாகி விட்டால் அப்புறம் எனக்கு என்ன வயசு? இருபத்தெட்டு முடிஞ்சு இருபத்தொன்பது ஆகும். முப்பதுகூட இல்லே. எனக்குத் தெரிஞ்சு முப்பது வயசிலே எத்தனை பெண்களுக்குக் கல்யாணம் ஆகியிருக்கிறது. உனக்குத்தான் தெரியுமே, நீ கூடப் போயிருந்தாயே அந்த ருக்மிணியின் கல்யாணத்துக்கு? எந்த வயசிலே கலியாணம் நடந்ததுன்னு நினைக்கிறே? முப்பத்திரண்டு! அதனாலே என்ன சொல்றேன்னா, எனக்கும் ஒரு வேளை, இந்தத் துரதிர்ஷ்டம் தொலைந்து கல்யாணம் ஆனாலும் ஆகும். நீ அதைப் பத்திக் கவலையே படக்கூடாது.''

சீதாவின் நீண்ட பேச்சு, தாயாரை ஆட்டி வைத்திருக்க வேண்டும். அவள் வெகுநேரம் பேசாமல் அரிசியிலிருந்து கற்களைப் பொறுக்கிக் கொண்டிருந்தாள். அம்மா எத்தனை நேரம் வேண்டுமானாலும் யோசனை செய்யட்டும் என்று சீதாவும் காத்திருந்தாள். அம்மா எதிர்வாதம் செய்ய முடியாத அளவுக்குத்தான் சாங்கோபாங்கமாகச் சொல்லி விட்டதான திருப்தியும் சந்தோஷமும் அவளுக்கு உண்டாயின. அதுவே அவளுக்கு நம்பிக்கையையும் அளித்தது.

திடீரென்று கூறுக வைத்திருந்த கற்களை ஒரு கையால் அள்ளி ஒதுக்கிக் கொண்டே பாகீரதி அம்மாள், ''சீதா!'' என்றாள்.

பிறகு, ''நீ சொல்கிறதிலே ஒரு தப்பும் இருக்கிறதாக எனக்குப் படல்லே. இருந்தாலும் ஊரும் உலகமும் ஒப்புக் கொள்ளாத வகையிலே நாம ஒரு காரியம் செய்யறதுக்கு என் மனசு ஒப்ப மாட்டேன் என்கிறது. இந்த வரன் இப்படியே இருக்கட்டும். கூடிய சீக்கிரத்திலே, உனக்கு ஒரு நல்ல வரனைப் பார்த்து முடிப்போம்...'' என்றாள்.

''நீ போகாத ஊருக்கு வழி தேடறாய், அம்மா!'' இப்போது சீதா அலுத்துக் கொண்டாள். அவளுடைய நம்பிக்கை தளர்ந்தது.

''இல்லேடி. ரெண்டு தவறினால், மூணாவது நிச்சயமாகத் தக்கும். வீட்டுக்கு மூத்தவளாய்ப் பொறந்தவ தான் மொதல்லே விளக்கேத்தணும். வயத்தைத் திறந்து பெத்துட்டேன். நீ என்னன்னிக்கும் கலியாணம் ஆகாமல் நிக்கிறதை என்னாலே பார்த்துச் சகிக்க முடியாது.....''

''அம்மா....!'' என்ன பேசுவது என்று சீதாவுக்குப் புரியவில்லை.

''சந்தானத்திடம் சொல்லி வைக்கிறேன். நல்ல வரனா அவனே கொண்டு வரட்டும். ரெண்டு பெண் கலியாணத்தையும் ஒரே பந்தலில் முடிக்கலாம். செலவும் குறையும்.''

''கற்பகம் மாதிரி, நானும் கல்யாணமே செய்து கொள்ள மாட்டேன்னு சத்தியம் பண்ணி, சபதம் செய்தால்தான் நீ வழிக்கு வருவாயா அம்மா?'' இப்போது சீதாவுக்கு ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு வந்தது. உணர்ச்சிக் கொந்தளிப்பில் கண்ணீர்கூடக் கண்களில் கட்டி நின்றது.

''உன் யோசனையை நான் கேட்கணும்னு நீ எதிர் பார்க்கிறது மாதிரி, என் யோசனையை நீ கேட்கணும்னு நான் எதிர்பார்க்கிறது தப்பா, சீதா......!''

''உன் யோசனை நடைமுறைக்கு ஏத்தபடியாக இல்லே!''

''அதையும் பார்ப்போமே....!''

''நடராஜன் மாதிரி ஒரு பிள்ளை கிடைக்கிறது அபூர்வம், அம்மா. நல்ல பிள்ளை, நல்ல குடும்பம்....''

''ஒவ்வொரு ஜாதகம் வர்றபோதும் அப்படித்தானடி மனசு நெனைக்கும். நாளைக்கே இதைவிட ஓசத்தியா கிடைக்கும். ஆனால் நான் நடராஜன் வேண்டாம்னு சொல்லலியே?''

பொறுக்கி வைத்த கல்லை அம்மா கையில் அள்ளிக் கொண்டு தெருவில் எறிய வாசற் பக்கம் சென்றாள். தன்னுடைய பிரேரணையையே அவள் குப்பைத் தொட்டியில் போட்டு விட்டதாகத் தோன்றியது சீதாவுக்கு.

ஆனாலும் அவள் ஒரேயடியாக மனம் உடைந்து போய்விடவில்லை. இன்னும் ஓர் அஸ்திரம் அவளிடம் தயாராக இருந்தது.

''அம்மா!'' என்றாள் அவள், பாகீரதி திரும்பிக் கூடத்துக்கு வந்ததும்.

''சொல்லு, இன்னும் ஏதாவது பாக்கியிருந்தால் கேட்டுடறேன்!''

''நடராஜனை ஜானுவுக்குப் பிடிச்சிருந்தால், அவளும் சம்மதிச்சுட்டா அப்புறம் நீ ஆட்சேபிக்க ஒண்ணுமிருக்காதே ?''

''ஏண்டி, நான் இத்தனை நேரம் சொன்னதன் தாத்பர்யமே உனக்குப் புரியலையா? அவளுக்கு அவனைப் பார்த்துப் பிடிக்கணுமானால், அவன் பெண் பார்க்க வரவேண்டாமா? அப்படி வாறதன்னு, நானும் இதுக்கு ஒத்துக் கொள்கிற மாதிரிதானேடி? உன் கல்யாணம் என்னிக்கு நிச்சயமாகிறதோ அப்புறம் தான், ஜானுவின் வரனைப் பத்திய பேச்சே இருக்கும் என்கிட்டே....'' என்றாள் பாகீரதி தீர்மானமாக. (தொடரும்)

நாடக மேதை தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகளின் நூற்றாண்டு விழா ஆவணி மாதம் 22-ம் நாள் நிகழுகிறது. இதையொட்டி செப்டம்பர் 7ந் தேதி புதுவையிலும், 9, 10 தேதிகளில் சென்னையிலும் விழாக்கள் நடைபெறுகின்றன. சுவாமிகளை ஆசானாகக் கொண்ட நிகழ்கால நாடக மேதை திரு டி. கே. ஷண்முகம் அவர்கள் எழுதிய "தமிழ் நாடகத் தலைமையாசிரியர்" என்ற நூலிலிருந்து சில பகுதிகளை இங்கு அளித்துச் சுவாமிகளின் நினைவுக்கு வணக்கம் செலுத்துகிறோம்.

# தமிழ் நாடகத் தலைமை ஆசிரியர்

## டி. கே. ஷண்முகம்

நாடகத் தமிழை வளர்த்த தந்தை அவர்; நாடகாசிரியர்கள் பலருக்குப் பேராசிரியர் அவர். சென்ற ஐம்பது ஆண்டுகளுக்கிடையே அவரது பாடல்களையோ வசனங்களையோ உபயோகிக்காத நடிக, நடிகையர் தமிழ் நாடக உலகில் இல்லையென்றே சொல்லி விடலாம்.

முழுப் பெயரையும் சொல்ல வேண்டியதில்லை. சுவாமிகள் என்றாலே போதும். தமிழ் நாடக உலகில் அது சங்கரதாஸ் சுவாமிகள் ஒருவரைத்தான் குறிக்கும்.

1867ஆம் ஆண்டில் ஆவணித் திங்கள் 22ஆம் நாள் தமிழ் மாநிலம் சுவாமிகளைத் தாங்கும் பேறு பெற்றது.

தென்பாண்டி நாட்டின் துறைமுக நகரங்களில் ஒன்றான தூத்துக்குடியிலே, வெள்ளையரை விரட்டி அடித்த 'வெள்ளையத் தேவன்' பரம்பரையிலே போரில் புறமுதுகு காட்டாத 'வீர மறக்குடியிலே தாமோதரக் கணக்கப் பிள்ளை என்பாரின் செல்வத் திருமகனாகப் பிறந்தார் சங்கரதாஸ் சுவாமிகள்.

தமிழ் மறையை நன்கறிந்த தாமோதரத் தேவர் தமது புதல்வனுக்குத் தாமே தமிழ்க் கல்வி புகட்டினார்.

அக்காலத்தில் 'புலவரேறு' என்று அறிஞர்களால் போற்றப்பட்ட பழனி தண்டபாணி சுவாமிகளிடம் நமது சுவாமிகள் பாடம் கேட்டுத் தமது தமிழறிவை வளர்த்துக் கொண்டார்.

தூத்துக்குடி உப்புப் பண்டகசாலையிலே சுவாமிகள் சில காலம் கணக்கராக வேலை செய்தார். தமது பதினாறாவது வயதிலேயே சுவாமிகள் வெண்பா, கலித்துறை, இசைப் பாடல்கள் முதலியனவற்றை எழுதத் தொடங்கினார். கவிதைப் புலமைக்கும் கணக்கு வேலைக்கும் போட்டி ஏற்படவே, சில ஆண்டுகளுக்குப் பின் சுவாமிகள் தமது இருபத்துநான்காவது வயதில் நாடகத் துறையில் பிரவேசித்தார்.

முதன் முதலாகச் சுவாமிகளின் புலமையை அறிந்து பயன்படுத்திக் கொண்டது திருவாளர்கள் ராமுடு ஐயர், கல்யாணராமையர் ஆகிய பழம் பெரும் நடிகர்களின் நாடக சபையெனச் சொல்லப்படுகிறது. இச் சபையில் முதலில் நடிகராகவும் பின்னர் ஆசிரியராகவும் சுவாமிகள் சில ஆண்டுகள் பணியாற்றினார்.

திருவாளர் சாமி நாயுடு அவர்களின் குழுவில் இருந்தபோது சுவாமிகள் வாழ்க்கையில் வெறுப்புற்றுத் தமது வழிபடு கடவுளாகிய முருகப் பெருமானின் திருவருளை வேண்டிக் கையில் ஐம்பது ரூபாய்களுடன் ஒரு நாள் ஆண்டிக் கோலத்தோடு தீர்த்த யாத்திரை செய்யப் புறப்பட்டு விட்டார். இவ்வாறு கோவணாண்டிக் கோலத்தோடு தலங்களைச் சுற்றி வந்தபோதுதான் எல்லோரும் அவரைச் சுவாமிகள் என்று அழைக்கத் தொடங்கினர்.

தீர்த்த யாத்திரை முடிந்ததும் சில ஆண்டுகள் புதுக்கோட்டை மகா வித்துவான் கஞ்சிரா மான்பூண்டியா பிள்ளை அவர்களுடன் சுவாமிகள் இருக்க நேரிட்டது.

புலவர்களால் மிகக் கடினம் என்று கருதப்பட்ட வண்ணம், சந்தம் இவற்றைப் பாடுவதில் சுவாமிகள் மிகவும் வல்லவராக இருந்தார். அவரது 'சந்தக் குழிப்பு'களிலே காணப்படும் தாள வித்தியாசங்களையும் சொற் சிலம்பங்களையும் பார்த்துப் பரவசமடைந்த மகாவித்துவான் மான்பூண்டியா பிள்ளை அவர்கள் தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகளைத் தமது 'தத்துப் புத்திரராக' ஏற்றுக் கொண்டார்.

சுவாமிகளைச் சந்தங்கள் பாடச் சொல்லி விட்டுப் பிள்ளையவர்கள் கஞ்சிரா வாசித்துத் தானே களிப்படைவாராம். இந்தச் சமயத்திலேதான் தமிழகத்தின் தலைசிறந்த மிருதங்க வித்வான்களான திருவாளர்கள் புதுக்கோட்டை தட்சிணாமூர்த்தி பிள்ளை, பழனி முத்தையா பிள்ளை இருவரும் மகா வித்துவான் மான்பூண்டியா பிள்ளை அவர்களிடம் மாணவர்களாக இருந்து வந்தனர்.

தமிழ்நாடு செய்த தவத்தின் பயனாக மகாவித்வான் மான்பூண்டியா பிள்ளை அவர்கள் வேண்டுகோளின்படி சில ஆண்டுகளுக்குப் பின் சுவாமிகள் மீண்டும் நாடக ஆசிரியப் பொறுப்பை மேற்கொண்டார்.

அக்காலத்தில் தமிழ் நாட்டில் நடைபெற்று வந்த எல்லா நாடக சபைகளிலும் சுவாமிகள் ஆசிரியராக இருந்திருக்கிறார்.

சமரச சன்மார்க்க நாடக சபை என்ற பெயரால் சுவாமிகள் தாமே சொந்தத்தில் ஒரு நாடக சபையையும் சில ஆண்டுகள் நடத்தினார். இந்த நாடகக் குழுவிலேதான் தமிழ் நாடக மேடையின் மங்காத ஒளி விளக்காகத் திகழ்ந்த எஸ். ஜி. கிட்டப்பாவும் அவரது சகோதரர்களும் பயிற்சி பெற்றனர். இசைப் புலவராக இன்று நம்மிடையே வாழும் மதுரை மாரியப்ப சுவாமிகளும் இந்த நாடகக் குழுவில் தோன்றியவரே.

மனம் போன போக்கில் பேசுபவர்களிடம் வெறுப்புற்ற சுவாமிகள் கட்டுத் திட்டங்களுடன் அடங்கி நடிக்கும் முறையில் சிறுவர் நாடகக் குழுவைத் தோற்றுவித்தார்.

சுவாமிகள் ஆசிரியராக இருந்த முதல் 'பாய்ஸ்' கம்பெனி திரு ஜகந்நாத ஐயர் அவர்களின் பால மீன ரஞ்சனி சங்கீத சபை. பிற்காலத்தில் ஆசிரியப் பொறுப்பேற்றுப் பல நடிக மணிகளைத் தோற்றுவித்த திருவாளர் பி. டி. சம்பந்தம், எம். எஸ். முத்துகிருஷ்ணன், டி. பி. பொன்னுசாமி பிள்ளை. எம். வி. மணி, டி. பாலசுப்பிரமணியம், கே. சாரங்கபாணி, எஸ். வி. வேங்கடராமன், நவாப் டி. எஸ். இராஜமாணிக்கம், எம். ஆர். ராதா முதலிய எண்ணிறந்த நடிகர்கள் மதுரை பால மீன ரஞ்சனி சங்கீத சபையில் இருந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

சில காலம் அந்தச் சபையில் இருந்த பிறகு சுவாமிகள் மதுரைக்கு வந்து சில நண்பர்களின் கூட்டுறவோடு 1918ம் ஆண்டில் தத்துவ மீனலோசனி வித்துவ பால சபா என்ற நாடகக் குழுவைத் தோற்றுவித்து அதன் ஆசிரியராக அமர்ந்தார்.

இந்தக் குழுவில்தான் டி. கே. எஸ். சகோதரர்கள் என்று குறிக்கப்படும் நாங்கள் சேர்க்கப்பட்டோம்.

ஆசிரியர்களுக்கெல்லாம் பேராசிரியராகவும், தமிழ் நாடக உலகின் தந்தையாகவும் பல ஆண்டுகளைக் கழித்த சுவாமிகள், இறுதிவரை பிரமச்சாரியாகவே இருந்து 1922ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 13ந் தேதி புதுச்சேரி நகரில் தமது பூதவுடலை நீத்தார்.

ஐம்பதாண்டுகளுக்கு முன்பெல்லாம் தமிழ் நாடக மேடையில் வசனங்கள் கிடையா. முழுதும் பாடல்களே பாடப்பட்டு வந்தன. சில ஆண்டுகளுக்குப் பின் இந்த நிலை மாறி நடிக நடிகையர் தமது திறமைக்கும் புலமைக்கும் ஏற்றபடி நாடகக் கதைக்குப் புறம்பாகப் போகாமல் கற்பனையாகவே பேசிக்கொள்ளும் முறை வழக்கத்தில் வந்தது. இவ்வாறு நடைபெறும் உரையாடல்களில் சில சமயங்களில் வரம்பு மீறிப் போய் விடுவதும் உண்டு. இந்தச் சமயத்தில்தான் நமது சுவாமிகள் தமிழ் நாடக உலகில் ஒழுங்கும் கட்டுப்பாடும் நிலவ வழிகோலினார்.

கோவலன், வள்ளி திருமணம், பவளக் கொடி, அல்லி அர்ஜுனா, சீமந்தனி, சதி அனுசூயா, மணிமேகலை, லவகுசா, சாவித்திரி, சதி சுலோசனா, பிரகலாதன், சிறுத்தொண்டர், பிரபுலிங்க லீலை, பார்வதி கல்யாணம், வீர அபிமன்யு முதலிய பல நாடகங்கள் சுவாமிகளால் இயற்றப் பெற்றவை.

இந்த நாடகங்களையெல்லாம் ஒழுங்காக நாடகங்களை நடித்து வந்த எந்த நாடக சபையாரிடம் நீங்கள் பார்த்திருந்தாலும் அவர்கள் நமது சுவாமிகளின் பாடல்களையும் உரையாடல்களையுமே உபயோகப்படுத்தியிருப்பார்கள் என்பதற்கு ஐயமில்லை.

சுவாமிகளின் புலமைக்கு எடுத்துக்காட்டாக எண்ணற்ற சம்பவங்கள் இருக்கின்றன. அவற்றில் அதிசயிக்கத்தக்க ஒரே ஒரு சம்பவத்தை மட்டும் கூறுகிறேன்:

நான் நடிக்கத் தொடங்கிய காலத்தில் அநேகமாக எல்லா நாடகங்களிலும் எனக்கு நாரதர் வேடமே கொடுக்கப்பட்டு வந்தது. ஒரு நாள் நாடகக் கம்பெனியின் உரிமையாளர்களில் ஒருவரான திரு பழனியா பிள்ளை அவர்கள் சுவாமிகளிடம், ''சுவாமி! சண்முகம் கதாநாயகனாக நடிப்பதற்கு ஏற்றபடி ஒரு நாடகம் எழுதுங்கள்'' என்று கூறினார். அப்போது எனக்கு வயது ஏழு. என்றாலும் நன்றாக நினைவிருக்கிறது.

அன்று மாலை சுவாமிகள் புத்தகக் கடைக்குச் சென்று அபிமன்யு சுந்தரி அம்மானைப் பாடல் பிரதியொன்று வாங்கி வந்தார். இரவு சாப்பாட்டுக்குப் பிறகு ஓர் 'அரிக்கன்' விளக்கை அருகில் வைத்துக் கொண்டு எழுதத் தொடங்கினார். மறுநாள் பொழுது விடிந்து எழுந்தபோது சுவாமிகள் நிம்மதி



திரு சங்கரதாஸ் சுவாமிகள்

யாக உறங்கிக் கொண்டிருந்தார். அவரது படுக்கை அருகே அபிமன்யு நாடகம் மங்களப் பாட்டுடன் முடிந்து வைக்கப்பட்டிருந்தது.

ஒரே இரவில் இவ்வளவு துரிதமாக எழுதி முடித்த 'அபிமன்யு' நாடகத்தில் உள்ள பாடல்களிலும் உரையாடல்களிலும் நிறைந்துள்ள கருத்துக்கள் எண்ணி எண்ணி இன்புறுதற்குரியன; சுவை மிகுந்த ஒரு வசனத்தைக் குறிப்பிடுகிறேன்:

> ''துந்துபிகளெல்லாம் 'தும் தும் தும்' என்றும், சங்குகளெல்லாம் 'பம் பம் பம்' என்றும், தாளவகைச் சல்லரி மல்லரி காடிகைகளோ 'நீம் நீம் நீம்' என்றும் முரசு, பேரிகை, மிருதங்கங்கள் 'தோம் தோம் தோம்' என்றும் தொனிக்

கின்றன. ஆகவே, இவ்வகை வாத்திய ஒலிகள் எல்லாம் ஒன்று கூடி, 'தும் பம் தீம்தோம்', 'தும்பம் தீம்தோம்', 'துன் பம் தீர்ந்தோம்', 'துன்பம் தீர்ந்தோம்' என்னும் பொருளைக் கொடுக்கலாயின. ஆஹா! நான் செய்த பாக்கியமே பாக்கியம்.''

கோவலன் நாடகத்தை முதன் முறை மதுரையில் அரங்கேற்றியபோது நிகழ்ந்த ஒரு சம்பவம் சுவாமிகளின் புலமைக்கு மற்றோர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

கண்ணகி கொடுத்த காற்சிலம்பை விற்று வர மதுரை நகருக்குப் போவதாகக் கூறுகிறான் கோவலன். அப்போது கண்ணகியின் வாய்மொழியாக,

''மாபாவியோர் கூடி வாழும் மதுரைக்கு
மன்னு போகாதீர் இன்று''

என்ற பாடல் பாடப்படுகிறது. மதுரை நகரில் அவர்கள் முன்னிலையிலேயே மாபாவியோர் கூடி வாழும் மதுரைக்குப் போக வேண்டாம் என்று பாடினால் அவர்கள் மனம் எப்படி இருக்கும்?...இந்தப் பாடலைப் பாடத் தொடங்கியதும், சபையோர் கூச்சலிட்டு ''எங்கே அந்த சங்கரதாஸ்? கொண்டுவா மேடைக்கு'' என்று ஆரவாரம் செய்தார்கள்.

சுவாமிகள் மேடைக்கு வந்து கம்பீரமாக நின்றார். தமது கரங்களை உயர்த்தி அமைதியாக இருக்கும்படி வேண்டிக்கொண்டு தமது கருத்தை விளக்கத் தொடங்கினார்.

'' 'மா' என்ற சொல் திருமகளாகிய இலக்குமியையும், 'பா' என்ற சொல் கலைமகளாகிய பாரதியையும், 'வி' என்ற சொல் மலைமகளாகிய பார்வதியையும் குறிக்கிறது'' என்று கூறி அதற்கு ஆதாரமாகப் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணத்திலிருந்து சில செய்யுட்களைப் பாடி, விளக்கம் தந்தார். ''மாபாவியோர் கூடி வாழும் மதுரை என்றால், திருமகளும், கலைமகளும், மலைமகளும் சேர்ந்து வாழும் மதுரை என்று பொருள் படுகிறது. அதாவது சகல செல்வங்களும் நிறைந்து விளங்கும் மதுரையில், செல்வம் கொழிக்கும் அத்திருநகரில் (போயும் போயும்) இந்தச் சிலம்பை வாங்க ஆள் கிடைக்காதே என்ற கருத்துப்பட 'மாபாவியோர் கூடி வாழும் மதுரைக்கு மன்னு போகாதீர்' என்று மதுரை நகரைப் பெருமையாகக் குறிப்பிட்டிருக்கிறேனே தவிர, சிறுமைப் படுத்தும் எண்ணம் எனக்கில்லை'' என்றார். சபையோர் சுவாமிகளின் புலமையை வியந்து கைதட்டிப் பாராட்டினார்கள்.

சுவாமிகள் அவ்வப்போது எழுதிய பக்தி ரசப் பாடல்களையெல்லாம் திரட்டி ஒரு சிறு நூலாக வெளியிடச் சில அச்சகத்தார் முயன்றனர். சுவாமிகளிடம் அனுமதி கேட்ட போது ''இலவசமாகக் கொடுப்பதானால் அச்சிட்டுக் கொள்ளுங்கள். தமிழை விலைக்கு விற்கச் சம்மதிக்க மாட்டேன்'' என்று மறுத்து விட்டார்.

---

# பஞ்சாமிர்தம்



'' ஏழுமலையானைத் தரிசிக்க வந்த பிரதமர் இந்திராவை யானை வரவேற்றது.''

— செய்தி

ஏழுமலையானைத் தரிசிக்க வருகையில் ஏழுமலை யானை வரவேற்புத் தந்தது பொருத்தம்தானே ?

ஃ ஃ ஃ

''பிரதமர் கோஷ்டியினர் திருமலை கோயிலில் சுற்றி வரும் போது தங்க விமானத்தின் மீது இரு குரங்குகள் விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்த்த ஆந்திர முதல் மந்திரி கரங்களைத் தட்டி அவற்றை விரட்டி விட்டார்.'' —அதே செய்தி



தங்களுடைய செய்கையைப் பாராட்டித் தான் முதன் மந்திரி கைதட்டியதாக அவை நினைக்காதிருந்தனவே !

''தெருக்களில் சிறுவர்கள் கிரிக்கெட் பந்து அடித்துக் கொண்டிருந்ததைத் தவிர, கல்கத்தா தெருக்கள் யாவும் வேலைநிறுத்த நாள் அன்று வெறிச்சோடிக் கிடந்தன.''

– செய்தி

''சிறுவர்கள் கிரிக்கெட் அடிக்க ஆரம்பித்து விட்டால் அந்த இடம் பொது நடமாட்டமின்றி வெறிச்சோடுவதற்குக் கேட்பானேன்?'' என்கிறார் பந்தடிபட்ட அநுபவசாலி ஒருவர்.

ஃ ஃ ஃ

''பதினாறு குழந்தைகள் பெற்ற நான் குடும்பக் கட்டுப்பாட்டைப் பற்றி எப்படிப் பேச முடியும்?'' என்று இங்கு மகளிர் கல்லூரி ஒன்றில் உபராஷ்டிரபதி கூறினார்.

— திருச்சி செய்தி



''பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க !'' என்று அவருக்கு யார் ஆசி கூறினார்களோ, தகவல் கண்டுபிடிக்க முடியுமா?

- ''கொக்கி''

டாக்டர் ஷண்முகநாதனின் கார் தெருவிலிருந்து பங்களா வாசலை நோக்கித் திரும்பியது. எதிரில் தெரிந்த காட்சியைக் கண்டு டாக்டர் திகைத்தார். பங்களா வாசலின் இரும்புக் கதவுகள் திறந்து கிடந்தன. வாசலருகில் வழக்கமாக நிற்கும் கூர்க்காவைக் காணவில்லை. பங்களாவின் முன் தாழ்வாரத்தில் யாரோ மூன்று பேர்கள் நடமாடிக் கொண்டிருந்தார்கள். அதுதான் ''ஸாலிட்யூட்'' (தனிமை) பங்களாவா என்று அவருக்குச் சந்தேகம்கூட வந்துவிட்டது. வாசலின் இடதுபுறச் சுவரில் பொருத்தப்பட்டிருக்கும் சலவைக் கல் பெயர்ப் பலகையை நோக்கி அவர் கண்கள் பாய்ந்தன. அது இருக்க வேண்டிய இடத்தில் சுவரில் அந்த அளவுக்கு ஒரு பள்ளம்தான் இருந்தது. அதற்குள் கார் வாசல் வழியாகப் புகுந்து முன் தாழ்வாரப் படியருகில் போய் நின்றது. தாழ்வாரத்தில் நடமாடிக் கொண்டிருந்தவர்கள் திகைப்புடன் திரும்பிக் காரைப் பார்த்துக் கொண்டு நின்றனர்.

பங்களாவின் உள்ளேயிருந்து, ''வாங்க, வாங்க. டாக்டர் ஸார்! சுதர்சனம் ஐயா உள்ளேதான் இருக்காங்க'' என்று கூவி வரவேற்றுக் கொண்டு வாசலுக்கு ஓடி வந்தான் சந்தானம்.

வண்டிக் கதவைத் திறந்து கொண்டு டாக்டர் ஷண்முகநாதன் கீழே இறங்கிய போது, ''வாருங்கள் டாக்டர். என்ன திடீரென்று நீங்களே புறப்பட்டு வந்துவிட்டீர்கள்?'' என்று கேட்டுக் கொண்டு சுதர்சனமே தாழ்வாரப் படிக்கட்டருகில் வந்து நின்றார்.

''வாரத்துக்கு இரண்டு தடவையாவது, வந்துவிட்டிருந்த ஒரு நோயாளி ஒரு வருஷம் முழுக்க டாக்டர் வீட்டு வாசற்படியையே மிதிக்காமே இருந்தா? டாக்டர் பொறுமைக்கும் ஓர் இல்லே இருக்கிறதில்லே? நம்மை மறக்கும்படியா இவருக்கு என்ன தான் வந்திருக்கும்னு நேரிலேயே பார்த்துடலாம்னு புறப்பட்டு வந்துட்டாரு'' என்று சொல்லிக் கொண்டே டாக்டரைப் பின் தொடர்ந்து படியேறினான் சந்தானம்.



டாக்டர் அவனைத் திரும்பிப் பார்த்துச் சிரித்துவிட்டுச் சுதர்சனத்திடம், ''ரொம்பச் சரியாகச் சொல்லி விட்டான்'' என்று கூறிக் கொண்டே தாழ்வாரத்தை அடைந்தார்.

அதற்குள் வீட்டுக்குள்ளிருந்து இன்னும் நாலைந்து பேர் அவசரம் அவசரமாக வந்து தாழ்வாரத்தில் கூடி விட்டார்கள். டாக்டர் ஷண்முகநாதன் அவர்களையெல்லாம் சுற்றிப் பார்த்துவிட்டு முகத்தில் ஒரு கேள்விக்குறியுடன் சுதர்சனத்தின்புறம் திரும்பினார்.

சுதர்சனம் அசட்டுச் சிரிப்புடன், ''நான் நான்தானு, இது என் வீடுதானு என்று உங்களுக்குத் திகைப்பாக இருக்கிறது. இல்லையா டாக்டர்? வாருங்கள். உள்ளே போவோம். விவரமாகச் சொன்னால்தான் புரியும்'' என்று டாக்டரைப் பங்களாவுக்குள் அழைத்துச் சென்றார். தாழ்வாரத்தில் நின்றவர்கள் ஒருவரையொருவர் கேள்வி கேட்டுக் கொள்ளும் பாவனையில் மாறி மாறிப் பார்த்துக் கொண்டு நின்றார்கள். சந்தானம் அவர்களைச் சுற்றிப் பார்த்து, ''என்னப்பா, ஒருத்தரை ஒருத்தர் பார்க்கிறீங்க? இந்த வீட்டுக்குள்ளே சுதர்சனம் ஐயாவைத் தவிர வேறு யாரும் — அரசாங்கம்கூட — நுழைய முடியாதபடி வேலி கட்டிக்கொடுத்தவர் இந்த டாக்டர்தான். அந்த வேலியை உடைச்சு, அந்த இரும்புக் கதவை அப்படி மல்லாக்கத் திறந்தே கிடக்கவைச்சவர் இந்தச் சந்தானம்'' என்று சொல்லிவிட்டு உள்ளே சென்றான்.

டாக்டரை முதல் மாடியிலிருந்த தமது அறைக்கு அழைத்துச் சென்று உட்கார வைத்துத் தாமும் அவர் எதிரில் அமர்ந்து சுதர்சனம், ''பத்து நிமிஷங்கள் இருக்கலாமல்லவா? இல்லே, வழக்கம்போல் பரபரப்புத்தானு?'' என்று கேட்டுச் சிரித்தார்.

ஷண்முகநாதன், ''பத்து நிமிஷம் இல்லே. ஒரு மணி நேரமானாலும் இருந்து, இந்த வீடு எப்போது, ஏன், எப்படி இந்த மாதிரி ஒரு நாடகக் கம்பெனியாக மாறியது என்பதைத் தெரிந்து கொள்ளாமல் நான் இந்த நாற்காலியிலிருந்து எழப் போவதில்லை. அப்படிக் குறுகுறுத்துப் போயிருக்கிறது என் மனம்'' என்றார்.

சுதர்சனம், ''நாடகக் கம்பெனியா?'' என்று வியப்புடன் கேட்டார்.

ஷண்முகநாதன், ''தாழ்வாரத்தில் வந்து கூடியவர்களின் முகங்களைப் பார்த்த போது, ஒவ்வொருத்தனும் ஒரு தனிக் கதாபாத்திரமாகத் தோன்றினான். இதில் யாருக்கும் ஒப்பனையேதும் செய்ய வேண்டாம். இப்போது இருக்கிறபடியே மேடையின்மேல் வந்தாலே போதும் என்று பட்டது எனக்கு'' என்றார்.

சுதர்சனத்தின் வியப்பு கட்டுக்கடங்காமல் உயர்ந்தது. ஒரு கணம் அவர் டாக்டரை அந்த வியப்புடன் பார்த்துவிட்டு, ''மன இயல்பு மருத்துவத்தில் இந்தியாவிலேயே நீங்கள்தான் முதல் என்பதன் காரணம்

இப்போதுதான் எனக்குப் புரிகிறது டாக்டர்! ஒருவன் முகத்தைப் பார்த்தே அவன் மன நிலைமையை எவ்வளவு நிச்சயமாகக் கண்டு கொள்கிறீர்கள்! அவர்கள் அத்தனை பேரும் கதாபாத்திரங்களல்ல, ரசபாத்திரங்கள். வீரம், சிங்காரம், கோபம், சோகம், நகைப்பு முதலிய ஒன்பது ரசங்களின் ஒவ்வொரு மனித வடிவம்....'' என்று சொல்லிக் கொண்டே வந்தவர் டாக்டரின் கண் இயக்கத்தைத் தொடர்ந்து அறையின் கதவின்புறம் திரும்பினார்.

அறை வாசலில் நிலைக்கு வெளியே நின்ற சரோஜா, ''ஸ்டுடியோவுக்குப் போகணும். இன்றைய காலை ரிப்போர்ட்டைச் சாயங்காலமாக வந்து சொல்லட்டுமா?'' என்றாள்.

பத்தொன்பது இருபது வயது மதிக்கத் தக்க இளம் பெண். இயற்கையாகவே நல்ல அழகு. அதோடு பருவத்தின் மூலாம் ஏறிய பக்குவம். ஆனால் தன் உடலழகைப் பற்றிய பிரக்ஞையே இல்லாது அவள் சர்வசகஜமாக நின்று பேசிய விதம் டாக்டரின் கவனத்தைக் கவர்ந்தது.

சுதர்சனம், ''ஆமாம். அப்படியே செய். டாக்டர் வந்திருக்கிறார். மாலையில் வா!'' என்று சொல்லித் தலையை ஆட்டினார். சரோஜா டாக்டரைப் பார்த்து ஒரு மரியாதைப் புன்னகை செய்து விட்டுத் திரும்பிச் சென்றாள்.

சுதர்சனம் டாக்டரிடம், ''அவள் சரோஜா. அவளுடைய அம்மாவுடன் தோட்டத்து வெளி வீட்டில் குடியிருக்கிறாள். இந்த நாடகக் கம்பெனி வீட்டுக்குக் கடைசியாக வந்து சேர்ந்தவள். நானே அந்த மாதிரி ஒருத்தியைத் தேட நினைத்த நேரத்தில் அவளாகவே என்னைத் தேடிக் கொண்டு வந்தாள். என்னிடத்தில் நேர்ந்த மாறுதலைப் பற்றி ஒரு வருஷத்துக்கு முன்பே வந்து உங்களிடம் நானே சொல்லியிருக்க வேண்டும்'' என்று தொடங்கினார்.

சுதர்சனத்தின் முன் வரலாறு முழுதும் டாக்டர் ஷண்முகநாதனுக்குத் தெரியும்.

ஜப்பானியப் படையெடுப்பின் போது குழந்தைகுட்டிகளுடன் தாய்நாட்டுக்கு ஓடி வரும் வழியில் குலைந்த குடும்பங்களில் சுதர்சனத்தின் குடும்பமும் ஒன்று. அவருடைய தந்தை பர்மாவுக்கு வியாபாரியாகப் போனார். அங்கே வேர்விட்டுத் தழைத்து லட்சாதிபதியானார். மகன் சுதர்சனத்தைப் படிக்க வைத்தார். கல்லூரிப் படிப்புக்கு அவனைச் சென்னைக்கே அனுப்பினார். சுதர்சனம் கல்லூரிப் பட்டத்துடன் பர்மா திரும்பினார். நிடீரென்று ஒருவர்பின் ஒருவராகத் தாயும் தந்தையும் காலமாகி விட, சுதர்சனம் அவ்வளவு சொத்துக்கும் ஒரே வாரிசானார். சாகும் முன் அவருடைய தந்தை அவருக்குப் பர்மாவிலேயே குடியேறியிருந்த ஒரு குடும்பத்தில் பெண் பார்த்து மணத்தையும் முடித்து வைத்து, தமது சொத்து, வியாபாரங்களைப் பற்றிச் சொல்லியும் வைத்திருந்தார். அதனால் சுதர்சனத்துக்கு அவ்வளவு பெரிய சுமையாக இல்லை. ஆனாலும் அவர் மனம் தந்தை





யைப் போல் வியாபாரத்தில் கலந்து நிலைக்க மறுத்தது.

அவ்வளவு பண வசதியிருந்தும் தன் மனைவியையும் மக்களையும் சௌகரியமாக இந்தியாவுக்கு அழைத்து வர இயலாமல் போனதுதான் அவர் மனத்தைப் பெரிய அளவுக்குக் கலக்கி விட்டது. ஒன்றுக்கு நாலுகாப் பணத்தை அள்ளி வீசி அவர்களை அழைத்து வரும் வழியில் நேர்ந்த விபத்தின் காரணமாகச் சுதர்சனம் தனியரானார்.

அவரிடமிருந்த செல்வத்துக்குச் சுதர்சனம் இங்கே ஒரு பெரிய வியாபாரம் அல்லது தொழிற்சாலையே தொடங்கியிருக்கலாம். ஒரு நல்ல பெண்ணைத் தேடி மணந்து புதிதாக ஒரு குடும்பத்தைக் கட்டியிருக்கலாம். ஆனால் அவர் மனத்தில் அதற்கெல்லாம் இடமேயில்லை. சென்னையில் இரண்டு மாடி பங்களாவை, தோட்டம், வளைவு மதில்களுடன் விலைக்கு வாங்கி அதில் குடியேறினார். வாசலில் ஒரு கூர்க்காவைக் காவலுக்கு நிறுத்திவிட்டு அவர் மட்டும் தனியாளாகப் பங்களாவுக்குள் புகுந்து கதவுகளை அடைத்துக் கொண்டார். தமது தேவைக்காக ஒரு கார் மட்டும் வாங்கினார். வாங்கும் போதே அது பழையது. நாலாம் கை மாறியது. அதை மறுபடியும் மாற்றவேயில்லை.

ஆறு மாதங்களுக்கு மேல் தனியாக அடைபட்டுக் கிடக்க இயலவில்லை. ஆனால் வெளியே

போய் உலகத்துடன் கலக்கவும் மனம் இடம் கொடுக்கவில்லை. புத்தகங்கள் வாங்கத் தொடங்கினார். அந்தப் பங்களாவின் முதல் மாடிக் கூடமும், அதை அடுத்திருந்த இரண்டு அறைகளும், தேக்கு மர அடுக்குகளும், அவற்றில் புத்தகங்களுமாக நிறைந்தன.

அவருடைய வீட்டுக்கு ''ஸாலிட்யூட்'' 'தனிமை' என்று பெயர் வைத்துச் சலவைக் கல்லில் செதுக்கி வாசல் நிலைச் சுவரில் பதிக்கச் செய்தார். தபால்காரர்கூட முன் வாசலைத் தாண்டித் தோட்டத்துக்குள் வர முடியாது!

தினம் ஒரே ஒரு வேளை காலையிலோ, பகலிலோ, அல்லது மாலையிலோ காரை எடுத்துக் கொண்டு புறப்படுவார். இந்த ஹோட்டல்தான் என்ற நிர்ணயம் எதுவும் கிடையாது. அப்போதைக்கு ஏதாவது சாப்பிட்டுவிட்டு அடுத்த வேளைக்கும் ஏதாவது வாங்கிக் கையில் எடுத்துக் கொண்டு வந்து விடுவார்.

அவ்வளவு பெரிய வீட்டில் அவர் மட்டும் தனியாக இருப்பதையறிந்த குடியிருப்பு வசதிக் கட்டுப்பாட்டு அதிகாரி அவருக்கு ஓர் உத்தரவு அனுப்பினார், அதில் சுதர்சனம் தமது சொந்தத்துக்கு வீட்டில் மூன்றில் ஏதாவது ஒரு பகுதியை வைத்துக் கொண்டு, மீதியை அரசாங்கத்திடம் விட்டுவிட வேண்டும் என்று. சுதர்சனம் அதை எடுத்துக் கொண்டு ஒரு வக்கீலிடம் போனார். வக்கீல்தான் அந்த யோசனை சொன்னார். அதன் விளைவாக இருவருமே மன நோய் மருத்துவ நிபுணர் டாக்டர் ஷண்முகநாதனிடம் போனார்கள். ''சுதர்சனத்தின் தனிமையைக் கலைத்து அவர் வாழ்வில் குறுக்கிட்டால் அவருக்குப் பைத்தியம் பிடித்துவிடும். அல்லது மரணம் நேரலாம். அதற்குப் பொறுப்பேற்கத் துணிந்தால் அரசாங்கம் அவர் வீட்டில் நுழையலாம்'' என்று சர்டிபிகேட் எழுதிக் கொடுத்தார். அந்த சர்டிபிகேட் அரசாங்கத்தையும் ''ஸாலிட்யூட்'' பங்களாவின் வெளி வாசலிலேயே நிறுத்திவிட்டது.

அதற்குப் பிறகுதான் சுதர்சனம் டாக்டர் வீட்டுக்குப் போவதையே நிறுத்திவிட்டார். ஏறக்குறைய ஓராண்டு ஆகிவிட்டது. சுதர்சனம் தம்மைத் தேடி வரவில்லை என்பது தெரிந்தும் டாக்டர் தாமாகவே அவரைத் தேடிப் போக வேண்டும் என்று நினைக்கவில்லை. அன்று காலையில்தான் சுதர்சனத்தின் மனச் சுருக்கம் மாறி விட்டதா, எப்படி, எவ்வளவுக்கு மாறியிருக்கிறது என்று அறிய வேண்டும் என்ற ஆவல் எழுந்தது, டாக்டரின் மனத்தில். அவகாசம் உண்டாக்கிக் கொண்டு புறப்பட்டு வந்தார்.

பங்களா வாசலிலேயே சுதர்சனத்தின் ''தனிமை'' விலாசம் தார்ச்சந்தி விலாசமாக மாறியிருந்ததைக் கண்டு டாக்டர் திகைத்துப் போய் விட்டார். தமது மருத்துவ வழியில் சாதிக்க முடியாத மன மாறுதலைத் தோற்றுவித்தது எது என்ற குறுகுறுப்பு வேகமாக எழுந்தது அவர் மனத்தில்.

''காரிடம் வந்து உங்களை வரவேற்றானே சந்தானம், அவனை உங்களுக்கு நினைவிருக்கிற இல்லையா டாக்டர்? என்னுடன் உங்கள் இடத்துக்கு ஒரு தடவை வந்திருக்கிறான்'' என்று தொடங்கினார் சுதர்சனம்.

ஒரு வருஷத்துக்கு முன் ஒரு நாள் காலையில் சுதர்சனம் காரை ஓட்டிக்கொண்டு ஹோட்டலுக்குக் கிளம்பினார். பலகாரம் சாப்பிட்டு விட்டு, அன்று பகல், இரவு இரண்டு வேளைக்கும் சேர்த்து ஏதோ பொட்டலம் வாங்கிக் கொண்டு வீட்டுக்குத் திரும்பிப் புறப்பட்டார். வழியில் கார் சண்டித்தனம் செய்து நின்று விட்டது. அது அதற்குமுன் அந்த மாதிரி நின்றதேயில்லை. அவ்வப்போது வண்டியில் ஏதாவது கோளாறு ஏற்பட்டால் அவர் கூர்க்காவையே அனுப்பிப் பக்கத்துத் தெருவிலிருந்த பட்டறையிலிருந்து ஒரு 'மெக்கானிக்'கை அழைத்து வரச் சொல்லுவார். காரைப் பங்களாவுக்கு வெளியிலேயே நிறுத்தி அவனைப் பார்க்கச் சொல்லி, ''இதைச் சரிப்படுத்தி விட்டுச் சொல்லு'' என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள் போய் விடுவார்.

அந்த மாதிரி ஒரு ஒக்கீட்டு வேலை நடந்து அப்போது மூன்று மாதங்கள்தாம் ஆகியிருந்தன. 'மெக்கானிக்' வண்டியையே பட்டறைக்குக் கொண்டு போய்ப் பழுது பார்த்துச் சரிப்படுத்திக் கொண்டு வந்தான். செலவும் பெரிய அளவில் ஆகியிருந்தது. அதன்பிறகு மூன்று மாதங்கள் ஒழுங்காக, ஓர் இருமல், உறுமல், உதறல் இல்லாமல் ஓடிக் கொண்டிருந்த வண்டி அன்று அப்படித் திடீரென்று நின்று விட்டது!

சுதர்சனத்துக்குக் கார் இயந்திரங்களைப் பற்றி ஒன்றுமே தெரியாது.

வண்டியை அங்கேயே விட்டு விட்டு வீட்டுக்குப் போய்க் கூர்க்காவை அனுப்பி மெக்கானிக்கை அழைத்து வரச் சொல்லவும் அவர் விரும்பவில்லை. தற்செயலாகச் சந்தானம் அந்த வழியாக வந்தவன் நின்று காரையும் அவரையும் பார்த்தான். அவனாகவே, ''ஸ்டார்ட் ஆகவில்லையா? தள்ளி விட்டால் புறப்பட்டு விடும். தள்ளட்டுமா?'' என்று கேட்டான். சுதர்சனம் ''தள்ளு'' என்றார். அவன் கொஞ்ச தூரம் தள்ளினான். இஞ்சின் இயங்கி வண்டி நகர்ந்தது.

அவர் திரும்பி வந்தபோது கூர்க்கா கதவைத் திறந்தான். சுதர்சனம் வண்டியை உள்ளே ஓட்டத் தயாரானபோது சந்தானம் அவர் அருகில் வந்து கதவின்மேல் கையை வைத்து ''எனக்கு ஒரு வேலையும் இல்லேங்கறது உங்க வண்டிக்கு எப்படித் தெரிஞ்சுதோ! 'டேய் சந்தானம், சோம்பேறியாயி விடாதே! வா, என்னைத் தள்ளு! இந்த ஒரு வேலையையாவது செய்'னு என்னைக் கூப்பிட்டிருக்கு. நான் வரேன் ஸார். நான் வர வழியிலே உங்க காரை நிக்க வச்சிருந்ததற்கு நன்றி!'' என்று சொல்லிவிட்டுக் கையை எடுத்தான்.

பதினொன்று வருஷங்களுக்குப் பிறகு சுதர்சனத்தின் முகம் முதல் தடவையாக மலர்ந்தது. புன்னகை செய்தாரோ, அல்லது சிரித்தாரோ அவருக்கே நினைவில்லை. திரும்பிய சந்தானத்தைக் குரல்கொடுத்து நிறுத்தினார். ''இந்தா, தம்பி!'' என்று அழைத்து, ''உனக்கு ஒரு வேலையும் இல்லையா? ஏன்?'' என்று கேட்டார்.

# அக்கோப்ரூ:ப்




## பவுடர்

**உபயோகிக்கச் சுலபமானது, எடுத்துச் செல்ல வசதியானது**

சிறந்த ஸிமெண்ட்-வாட்டர்ப்ரூஃபிங் தயாரிப்பான அக்கோப்ரூஃப் பவுடர், உபயோகிப்பதற்கும், இடத்திற்கு இடம் எடுத்துச்செல்லவும் வசதியாக இருக்கும்படி பேக் செய்யப்பட்டுள்ளது. 1 கிலோ பெட்டியானாலும், 20 கிலோ ட்ரம்மானாலும், வசதியாக, சேதமில்லாமல் இடத்திற்கு இடம் எடுத்துச் செல்லலாம்.

அக்கோப்ரூஃப் பவுடர் ஸிமெண்டுடன் இரண்டறக் கலந்து ஸிமெண்டை முற்றிலும் நீர் கசியாததாக்குகிறது. ஸிமெண்ட் காரை அல்லது கான்க்ரீட்டுடன் அக்கோப்ரூஃப் பவுடர் கலப்பதற்கு குறைந்த அளவு தண்ணீரே தேவைப்படுகிறது. அக்கோப்ரூஃப் பவுடரின் விசேஷம் என்னவென்றால், அது ஸிமெண்டின் உறுதி, இறுகும் தன்மை முதலிய குணங்களைப் பாதிப்பதில்லை.

1 கிலோ கிராம் பெட்டிகளிலும், 20 கிலோ கிராம் ட்ரம்களிலும் இந்த விலாசத்தில் கிடைக்கும்:

**தி ஸிமெண்ட் மார்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்**

ஸிமெண்ட் ஹவுஸ், 121, க்வீன்ஸ் ரோடு,
பம்பாய்-1

அகமதாபாத் . பெங்களூர் . கல்கத்தா . கோயம்புத்தூர் . புது டெல்லி . [illegible] . கான்பூர் மதராஸ் . பாட்னா . செகந்திராபாத் கிளைகளிலும் கிடைக்கும்.

> ஸிமெண்டை நீர் கசியாததாக்குவதற்கான பொருள்களுக்கென விதிக்கப் பட்டிருக்கும் இந்தியன் ஸ்டாண்டர்ட்ஸ் ஐ எஸ்: 2645-1964 க்கு ஏற்ப அக்கோப்ரூ:ப் தயாரிக்கப் படுகிறது.

## அக்கோப்ரூ:ப்

**ஏஸிஸி அளிக்கும் ஸிமெண்ட்-வாட்டர்ப்ரூஃபிங் தயாரிப்பு**

தி அஸோஸியேடட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்,
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்.

CMI-5767

சந்தானம், "நான் இங்கே வேலை செய்து சம்பாதித்து, அதில் ஒரு பகுதியை ஊரிலிருக்கும் என் அம்மாவுக்கும் இரண்டு தம்பிகளுக்கும் அனுப்புகிறேன். அவர்களுக்குச் சோற்றுக்கு வேறு வழி கிடையாது. என் சம்பாத்தியத்தில் அவர்கள் சாப்பிடுவது தப்பு என்று தெய்வத்துக்குப் பட்டிருக்கிறது. இருந்த வேலையும் போய்விட்டது. போகட்டும் சார்!" என்றான்.

அவன் குரலில் கசப்போ, எரிச்சலோ சிறிதுகூட இல்லை. அது சுதர்சனத்தின் மனசில் பதிந்தது. அவன் என்ன வேலை செய்து கொண்டிருந்தான், யாரிடம், ஏன் அது போய்விட்டது என்று கேட்டார். இப்படியெல்லாம் அவனிடம் கேட்க வேண்டுமென்று அத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு அவருக்கு ஏன் தோன்றியது என்பது அவருக்கே தெரியாது. எப்படியோ சந்தானம் அவர் மனத்தை அப்படி இயங்க வைத்து விட்டான்.

சுதர்சனம் "இந்தக் கார் உன்னைப் பார்த்துவிட்டுத்தான் நின்றது என்றாயே, அது மெய்தான் போலிருக்கு. இந்த வீட்டிலே நான் மட்டும்தான் இருக்கேன். இங்கேதான் உனக்கும் இருக்க இடம் இருக்கிறது" என்றார்.

"இதோ கால் மணி நேரத்திலே வரேன், சார்!" என்று சொல்லி விட்டு ஓடினான் சந்தானம். கையிலே ஒரு தகரப் பெட்டியுடன் திரும்பி வந்தான். அவனுக்காகத் தாழ்வாரத்திலேயே காத்து நின்ற சுதர்சனத்திடம், "சார்! இவ்வளவு பெரிய வீட்டை நான் அவமானப்படுத்தறேன்னு நெனைக்காதீங்க. இந்த வீட்டிலே இருக்கிறதுக்கு ஒரு கைவண்டி நிறையவாவது பெட்டி படுக்கை, பாண்டங்கள் கொண்டு வந்தாத்தான் மரியாதையாயிருக்கும். ஆனால் என் கிட்டே உள்ளதே இதுதான். இதுக்குள்ளே ஒரே ஒரு நல்ல வேட்டியும், ரெண்டு கிழிஞ்ச சட்டையும்தான் இருக்கிறது. பரவாயில்லையா?" என்றான்.

சுதர்சனம் வாய் விட்டுச் சிரித்தார். தன்னை அப்படிச் சிரிக்க வைத்தவனை வீட்டுக்குள் அழைத்துச் சென்று மூன்று தளங்களையும் சுற்றிக் காட்டி, "இங்கே எங்கே உனக்குப் பிடிக்கிறதோ அங்கே இருந்துகொள்" என்று கூறினார்.

சந்தானம் முதல் தளத்திலேயே முன் பக்கம் இருந்த ஓர் அறையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான். அன்று, சிறிது நேரம் அவருடைய மனச் சுருக்கம் விலகியது. ஆனால் மறுபடியும் அவர் பழைய சுதர்சனமே ஆகிவிட்டார். அவர் பாட்டில் தம் வழக்கம் போலப் புத்தகங்களைப் படிப்பதும் நினைத்தபோது தோட்டத்துக்குப் போவதுமாக இருந்தார். சந்தானமும் உற்சாகமாக அவன் பாட்டில் ஏதோ வேலை தேடிக் கொண்டு, போய் வந்து கொண்டிருந்தான்.

அன்று வெளியே சென்று திரும்பிய சுதர்சனம் சந்தானத்தின் கையைப் பற்றி மாடிக்கு அழைத்துச் சென்றார். அவனிடம் அவர் கேட்ட முதல் கேள்வி: "உன்னால் எப்படி இந்த மாதிரி கவலையில்லாமல் இருக்க முடிகிறது?" என்பதுதான்.

## குரு பக்தி



சமீபத்தில் காலஞ்சென்ற இருவையாறு பிரம்மஸ்ரீ அண்ணாசாமி பாகவதரவர்களிடம் சிட்சை பெறாமலேயே ஒருவர் அவரைத் தமது குருவெனச் சொல்லிக் கொண்டு புகழ் பெறப் பார்த்தாராம். இந்த விஷயத்தைப் பாகவதர் அவர்களிடம் ஒருவர் தெரிவித்து, பிரஸ்தாப நபர் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றார். பாகவதர் அவர்களோ சிரித்தபடி, "எதற்காக நடவடிக்கை எடுப்பது? இந்த நாட்களில் குரு பக்தி என்பதே இல்லை. உண்மையாகத் தமக்குப் போதித்தவர் பெயரையே ஒருவரும் வெளியில் சொல்லாமல், தாங்களாகத் தெரிந்து கொண்டதாகத்தான் சொல்கிறார்கள். ஆனால் இவரோ என்னிடம் போதனை பெறாமலே என்னிடம் குரு பக்தி செலுத்தி எனக்குப் பெயர் வாங்கித் தருகிறார். தந்துவிட்டுப் போகட்டுமே!" என்றார்.

சந்தானம், "ஸார்! நீங்க என்னைவிடப் பெரியவங்க. இவ்வளவு புத்தகங்களையும் படிச்சிருக்கீங்க. உங்களுக்குத் தெரியாததை நான் என்ன ஸார் சொல்லிடப் போறேன்? இருந்தாலும்... உலகத்திலேயிருந்து நீங்க இப்படி ஒதுங்கி யிருந்தால் அது தெரியாது. உலகத்துக்குள்ளேயே போய் அதோட பழகி, உரசி, மோதிப் பார்த்தால்தான் தெரியும். உலகத்திலே மனிதர்களுக்கு ஏற்படுகிற துக்கம், துன்பம், ஏமாற்றம், எரிச்சல் எல்லாத்தையும் சேர்த்துப் பார்த்தால் இவ்வளவுக்கும் ஈடு கொடுத்து மனிதர்கள் எப்படி உயிர் வாழ்ந்து கொண்டிருக்காங்கன்னு பிரமிச்சுப் போயிடுவீங்க. ஆனால் அவ்வளவு துக்கம், துன்பம், ஏமாற்றம், எரிச்சலையும் மீறி வாழும் சக்தி மனிதன் மனத்துக்குள்ளேயே ஏதோ இருக்கு ஸார். உங்களைப் போலப் படிச்சவங்க தேடினால் அந்தச் சக்தி எதுங்கறதைக் கண்டுபிடிச்சிடலாம்" என்றான்.

அந்த நொடியிலேயே சுதர்சனம் அதைக் கண்டுபிடிப்பதென்று உறுதி செய்துகொண்டார். ஆனால் அதற்காக அவர் உலகத்திடம் போக விரும்பவில்லை. உலகத்தையே தம்மிடம், தம் வீட்டுக்குள் அழைக்கத் தீர்மானித்தார். வீட்டு வாசலில் "வாடகைக்கு விடப்படும்" என்று பலகை ஒன்றை மாட்டி

வித்தார். அதே கையோடு ''தனிமை'' விலாசம் பலகையைப் பெயர்த்து எறியச் சொன்னார்!

சென்னையில் அவ்வளவு பெரிய வீட்டு வாசலில் ''வாடகைக்கு விடப்படும்'' பலகை மாட்டப்பட்டால் எவ்வளவு பெரிய கூட்டம் சேரும் என்று கேட்கவா வேண்டும்? இருப்புக் கதவுகளை அடைத்துப் பூட்டிவிட்டு உட்புறம் நின்ற கூர்க்கா திணறினான். மறு நாள் காலையிலேயே சுதர்சனம் 'வாடகைக்கு விடப்படும்' பலகையைக் கழற்றச் சொல்லி விட்டார். அதன் பிறகும் இடம் கேட்டுக் கொண்டு ஏராளமான பேர்கள் வந்தார்கள். வந்தவர்களைத் தனித்தனியாக உள்ளே அழைத்துச் சுதர்சனம் அவர்களுடன் பேசி னார். உலகத்தைப் பற்றிய ரகசியத்தைக் கண்டுபிடிப்பதுதானே அவருடைய குறிக் கோள்? அதற்காக வந்தவர்களில் பொறுக் கிப் பொறுக்கி, குடும்பம் இல்லாத தனிக் கட்டைகளாக ஒன்பது பேர்களுக்கு மட்டும் வீட்டில் ஒவ்வோர் அறை கொடுத்துக் குடி யேற்றிக் கொண்டார்.

''அந்த ஒன்பது பேர்களும் நானே பொறுக்கி எடுத்த ரசபாவப் படைப்புகள் டாக்டர். வீரம், சோகம், ஹாஸ்யம், மூன் றும் கீழே முதல் தளத்தில் இருக்கிறார்கள். சிங்காரம், பயம் இரண்டும் இந்த மாடி யிலேயே இருக்கின்றன. கோபம், சாந்தம், அருவருப்பு, கருணை ஆகிய நான்கும் இரண் டாவது மாடியில் இருக்கின்றன. இவர் களில் ஒருவன் குடிகாரன். ஒருவன் மகா சூதாடி. மூக்கு நுனியிலே கோபம் இருக்கிறது என்பார்களே, நான் தேடிப் பிடித்த கோபக்காரன் உடலில் ஒவ்வோர் அணு விலும் கோபம் பிரத்யட்சமாக இருக்கிறது. ஒருத்தனுக்கு எதிலும் திருப்தி கிடையாது. எந்தநேரமும் முணுமுணுப்பும் அழுகையு மாகவே இருக்கிறான்.

''சாந்த ரசத்துக்கு உரியவர் ஓர் அறிஞர். அவர் காலடியில் அணுகுண்டே வெடித் தாலும் கூட அவர் மன அமைதி கலையாது. அவ்வளவு வலுவான அமைதி. சற்று முன் வந்தாளே சரோஜா, அவளுக்கு இந்த வீட் டில் இடம் கிடைத்தது அவரால்தான்.

''ஒரு நாள் நான் அவருடன் பேசிக் கொண்டிருந்தபோது இந்தப் பெண் வந்து வாசலருகில் தயங்கித் தயங்கி நின்றாள். 'எனக்கும் என் தாயாருக்கும் இங்கே இடம் கொடுத்து உதவணும்' என்று சொல்லிக் கையைக் கூப்பினாள். 'இந்த வீட்டில் அவ் வளவும் தனிக்கட்டை ஆண்பிள்ளைகள்தான் இருக்கிறார்கள். இங்கே பெண்களுக்கு இடம் இல்லை' என்றேன்.

''சரோஜா உள்ளே வந்து, 'நானும் என் அம்மாவும் பெண்கள் என்பதே தெரியாமல் இருப்போம் ஸார்' என்றாள். நான் அதெல் லாம் சாத்தியமில்லை என்று சொல்லிவிட் டேன். அப்போதுதான் சாந்த ரசம், 'நீங்கள் உலகத்தை, உலகத்தின் ரகசியத்தைக் கண்டு பிடிக்கத்தானே இவ்வளவு பேரையும் கூட்டிச் சேர்த்திருக்கிறீர்கள்? அதற்கு இந்தப் பெண் இங்கே வந்து சேருவது ரொம்ப உதவியாக இருக்கும். இவள் வந்து ஒரே மாதத்துக்குள் அந்த ரகசியத்தையும் உங்களுக்குப் புலப் படுத்திவிடக் கூடும்' என்றார். அவருடைய அறிவுத் தெளிவில் எனக்குள்ள மதிப்பில் அவ ளுக்கும் அவள் தாயாருக்கும் தோட்டத்து வெளி வீட்டைக் கொடுத்து விட்டேன்.

''அவள் இங்கே குடிவந்து ஏறக்குறைய எட்டு மாதங்கள் ஆகின்றன. அவள் இங்கே வந்து சேர்ந்த மறுநாளிலிருந்தே இந்த வீட்டின் காற்று நிலைமையே மாறிவிட்ட தைக் கண்டேன். தினம் சிறிது சிறிதாக எனக்கு ஏதோ புரிவது போல் இருக்கிறது. ஆனால் அது என்ன என்பதுதான் எனக்குப் புரியவில்லை. கூடிய விரைவில் அது தெளி வாகிவிடும் என்று நினைக்கிறேன். இங்கே உள்ள மற்றவர்களைப் போலவே சரோஜா வும் தினம் என்னிடம் வந்து அன்றைய விசேஷ நிகழ்ச்சி ஏதாவது இருந்தால் அதை 'ரிப்போர்ட்' செய்துவிட்டுப் போகிறாள்... அதற்குத்தான் சற்று முன் வந்தாள்'' என்று சொல்லி முடித்தார் சுதர்சனம்.

''மன நோய் மருத்துவ சாஸ்திரத்தை வகுத்தவர்களுக்கும் மேலே ஒருபடி போய் விட்டீர்களே நீங்கள்! ஒன்பது ரசங்களின் பிரதிநிதிகளாக ஒன்பது மனப் போக்கு உடைய மனிதர்களையே கூட்டி மனித மனப் போக்குகளை நேரடியாகவே கணிக்கும் இந்த முறை எங்களுக்கு ஏன் தோன்றவில்லை?'' என்று தமது வியப்பை வெளியிட்ட டாக்டர் ஷண்முகநாதன், ''இவர்களுக்கெல்லாம் சாப் பாடு? எல்லாம் உங்கள் செலவுதானா?'' என்று கேட்டார்.

''அவனவன் சாப்பாட்டுக்கு அவனவன் பாடுபட்டுத் தேடிக் கொள்ள வேண்டும். அதற்காக அவன் முட்டி மோதி முண்டி யடிக்கும்போதுதான் ஒருவனுடைய இயல்பு வெளிவருமில்லையா? அதுவுமின்றி இங்கே யாரும் எனக்குக் கடமைப் பட்டிருக்கவோ கடன்பட்டிருப்பதாகவோ நினைத்து என் முன் குழைந்து தன் சுபாவத்தை மறைத்து மூட இடம் கொடுக்கக் கூடாதென்று ஒவ் வொருவரிடமும் ஒப்புக்குச் சிறிய வாடகை யும் வாங்குகிறேன். சாந்த ரசம் பெரிய வருக்கு மட்டும் பென்ஷன் வருகிறது. சரோஜா விளம்பரங்களுக்கு அடவு பிடித்துப் படமெடுக்க நிற்கும் வேலை செய்கிறாள். அவளுடைய முகத்தைப் பல விளம்பரங் களில் பார்த்திருப்பீர்களே. நல்ல களை யான முகம் இல்லையா? விளம்பரங்களைப் பார்த்து யார் யாரோ சினிமாக்காரர்களெல் லாம் வந்து அவளுக்கு ஆசை காட்டினார் களாம். ஆனால் அந்தப் பெண் அதெல்லாம் வேண்டவே வேண்டாம் என்று மறுத்து விட்டாளாம். இவ்வளவு தூரம் துணிந்து விளம்பரங்களுக்காக என்னென்ன தோற் றத்திலோ படம் எடுத்துக்கொள்ள இசை கிறவள் ஏராளமான செல்வத்தைச் சேர்க்க வாய்ப்பளிக்கும் சினிமாவில் நடிக்க மறுப்ப தன் காரணம்தான் புரியவில்லை. இரண் டொரு தடவை சாடை மாடையாக அதைப் பற்றிக் கேட்டேன். அவள் சிரித்து மழுப்பி விட்டாள். மற்றவர்களில் ஒவ்வொருவருக் கும் தனித்தனி வேலை, உத்தியோகம் ஏதோ இருக்கிறது'' என்றார்.

# இண்டியனுயில்

## எங்களுடையது-நாட்டுக்குச் சொந்தமானது !

நாட்டின் பாதுகாப்புப் பணியில் ஈடுபட்டுள்ள நாங்கள் இண்டியனுயிலின் நெருங்கிய துணையுடன் நம் நாட்டை அந்நிய ஆதிக்கத்தினின்றும் பாதுகாக்க வேண்டி தரையிலும் ஆகாயத்திலும் கடலிலும் இடைவிடாமல் சேவை புரிகிறோம். எல்லைப்புற யுத்தகாலங்களில் **இண்டியனுயில்** ஒரு மகத்தான பொறுப்பை ஏற்று வந்திருக்கிறது. இந்திய விமானப்படைக்கு தேவையான விமான எண்ணை சப்ளை செய்வதற்கும் சரி, எந்த வகைப்பட்டயுத்த விமானத் திற்கும் தன சேரத்தில் எண்ணை நிரப்புவதற்கு விசேஷ வசதிகள் செய்து கொடுப்பதற்கும் சரி, பகலென்றும் இரவென்றும் பாராமல் பணியாற்றி வந்தது. **இண்டியனுயிலின்** அபரிமித வேகம் தரும் டீசல் எண்ணையிலுல் சக்தி பெறும் டிரக்குகளும் மற்றும் சப்ளை அலுவல்களை இடைவிடாமல் செய்து வந்தன. சுதந்திர தீபம் சுடர்விட்டுப் பிரகாசிக்கச் செய்வதில் **இண்டியனுயில்** எங்களுக்கு பேருதவி புரிந்தது.

**இண்டியனுயில்** இவ்வளவும் செய்ய முடிகிறதென்றால் அது நாட்டுச் சொந்தமாக இருப்பதே காரணம்.




**இண்டியன் ஆயில் கார்ப்பொரேஷன் லிட்.,**

சுதர்சனமும் டாக்டரும் மாடியிலிருந்து இறங்கி வந்தபோது கீழ்க்கட்டில் யாரோ ஒருவன் கோபாவேசத்துடன் கத்திக்கொண்டிருந்தான். சுதர்சனம் புன்னகையுடன் டாக்டரிடம், "அவன்தான் ரௌத்ர ரசம். அவனுக்குக் கோபம் வரும்போது பார்த்தால் அந்த வெறியில் யாரையாவது கொலை செய்துவிடுவானோ என்று பயமாகக் கூட இருக்கும். இன்னும் அப்படி நேரவில்லை" என்று சொல்லிச் சிரித்தார்.

டாக்டர் காரில் ஏறி அமர்ந்தவுடன், சுதர்சனம் குனிந்து, குரலைத் தணித்து, "இங்கே யிருக்கும் ஒன்பதில் ஆறு ரசங்கள் சரோஜாவை வட்டமிட்டு வலை வீசி, கண்ணி வைத்து, ஆடாத ஆட்டமெல்லாம் ஆடிக் கொண்டிருக்கின்றன. அவள் அவ்வளவுக்கும் ஈடுகொடுத்து, மேலே பட்ட தூசியைத் தட்டுவது போல ஆறு பேர்களையும் ஒதுக்கி நிறுத்தி வைத்து விட்டுத் தன் வேலையைக் கவனித்துக் கொண்டிருக்கிறாள். அதோ, அவன் கூச்சலுக்கும் காரணம் அவள்தான் என்று தெரிகிறது. அவன் மாலையில் வந்தால் விவரம் புரிந்துவிடும்" என்றார்.

டாக்டர் ஷண்முகநாதன் விடைபெற்றுக் கொண்டார்.

சுதர்சனம் காலைச் சிற்றுண்டியை முடித்துக் கூடத்தில் வந்து அமர்ந்தார். அதற்காகவே காத்திருந்தது போல் தாமோதரன் வேகமாக உள்ளே வந்து, "ஸார்! நிச்சயமாகப் பெரிய விபரீதம்தான் நடக்கப் போகிறது. அந்தச் சரோஜா இந்தக் காம்பவுண்டுக்குள் நுழைந்ததே நல்லதுக்கில்லை. அவளாலே இங்கே ரணகளமாகப் போகிறது" என்று படபடப்புடன் பேசினான்.

அவன்தான் சுதர்சனம் கண்டுபிடித்து வீட்டுக்குள் அழைத்துக் கொண்ட பய ரசம். சந்தானம் அவனுக்குத் 'தொடை நடுங்கி தாமு' என்று பட்டப்பெயர் வைத்திருந்தான். சுதர்சனம் முகத்தில் பாசாங்குக் கவலையைப் படர விட்டுக் கொண்டு, "ஏன் தாமு? என்ன நடந்தது?" என்று கேட்டார்.

"ஒரே பெண், எத்தனை பேரிடம் 'நான் உன்னையே மணம் செய்து கொள்கிறேன்' என்று சொல்லி எவ்வளவு காலம்தான் ஏமாற்ற முடியும்? இந்த வீட்டில் உங்களையும் என்னையும் தவிர மற்ற எல்லாரிடமும் சிரித்துச் சரியென்று தலையை ஆட்டி, ஒவ்வொருத்தரிடமும் அகப்பட்டவரையில் பறித்திருக்கிறாள் ஸார். மூர்த்தி விழித்துக்கொண்டு விட்டான். காலையிலே வெளிவீட்டு வாசலுக்கே போய், அவளை மடக்கி யிருக்கிறான். 'இன்றைக்கு எனக்கு முடிவாகத் தெரிய வேண்டும். எப்போது முகூர்த்தம் வைத்துக் கொள்ளலாம்' என்று நேரடியாகக் கேட்டு விட்டான். அதற்கு அவள் என்ன சொன்னாளாம் தெரியுமா? 'உன்னைக் கல்யாணம் செய்துகொள்கிறேன் என்று நான் எப்போது சொன்னேன்?' என்று கேட்டாளாம் ஸார்.! அதைக் கேட்டுத் திகைத்து நின்ற மூர்த்தி பதில் சொல்லுவதற்குள் பின்னாலே குரல் கேட்டதாம். இதோ இருக்கிறானே சூரப்புலி– அவன்தான் சேகர் – 'சரோஜாவுக்கும் எனக்கும்தான் திருமணம் நடக்கப் போகிறது. மரியாதையாகப் போய்விடு' என்று சொல்லி மூர்த்தியின் கழுத்தில் கைகொடுத்து அப்பாலே தள்ளிவிட்டானாம். அவர்கள் இருவரும் போட்ட கூச்சலைக் கேட்டு மற்றவர்கள் அங்கே வந்து சேர்ந்துவிட்டார்கள். சரோஜா மொத்தம் ஆறு பேர்களுக்கு அந்த மாதிரி தலையை ஆட்டியிருக்கிறாள் என்பது அப்புறம்தான் வெட்டவெளிச்சமாயிற்று. நிச்சயமாக ரணகளம்தான் ஆகப் போகிறது" என்று அவன் பேசி, மூச்சு வாங்க நிறுத்தினான்.

சுதர்சனத்தின் உள் மனம் பொங்கியது. அந்த ஆறு பேர்களும் யார் யார் என்பது அவருக்குத் தெரியும். மூர்த்திதான் சிங்கார ரசம். சூரப்புலி சேகர்தான் வீரம். ஏதோ நிகழப் போகிறது. அதிலிருந்து ஏதோ ஒரு உண்மை நமக்குத் தெளிவாகிவிடப் போகிறது என்ற உற்சாகத்தில் அவர் மனம் அவரையும் அறியாமலேயே துள்ளிக் குதித்தது. அந்த உற்சாகம் தவறாகவும் இல்லை. தாமோதரன் தன் அச்சம் முழுவதையும் அவர் மடியில் கொட்டிவிட்டு வெளியே போன சற்று நேரத்துக்கெல்லாம் சூரப்புலி சேகர் அவரைத் தேடிக் கொண்டு வந்தான்.

அவன் எடுத்த எடுப்பிலேயே, "சுதர்சனம் ஸார்! உங்க முகத்துக்காகப் பார்க்கிறேன். நான் யார் என்பதை இவர்கள் இன்னும் புரிந்து கொள்ளவில்லை. உங்களிடம் ஒரு வார்த்தை முன்கூட்டியே சொல்லிவிட வேண்டும் என்ற மரியாதைக்காகத்தான் வந்தேன். எவனாவது சரோஜா விஷயத்தில் தலையிட்டால், அவன் எவனாக இருந்தாலும் சரி, ஒரு கை பார்த்துவிடுவேன். ஆமாம்,

### பெண் வேஷத்தில் பையன்



சென்ற மாதம் மராட்டித் தினசரி ஒன்றில் வெளியான செய்தி இது:

நாகபுரியில் ஒரு பெண்கள் பள்ளியில் மாணவன் ஒருவன் இரண்டு ஆண்டுகள் பெண் வேஷத்தில் படித்திருக்கிறான். பத்தாவது வகுப்பில் அவன் சேர்ந்தான். ஒரு வருஷம் பெயிலாகி மறு வருஷமும் அதே வகுப்பில் படித்து வந்தான். இத்தனை காலத்திலும் அவன் பெண் என்றே பள்ளியில் அனைவரும் நினைத்துப் பழகி வந்திருக்கிறார்கள். வைத்திய சோதனையின் போதுதான் குட்டு வெளிப்பட்டது. பையன் நாகபுரியிலிருந்து பம்பாய்க்குக் கம்பி நீட்டி விட்டான். — வி.

நீங்களே அவர்களுக்குச் சொல்லி மரியாதையாக ஒதுங்கிப் போய்விடச் சொல்லுங்கள்'' என்று வீரப் பிரசங்கம் செய்தான். சரோஜாவுக்கு அவன்தான் மாலையிடப் போவதாகச் சபதம் செய்துவிட்டுப் போனான்.

அவன் பின்னாலே வந்த மூர்த்தி சுதர்சனத்திடம், ''காதல் என்றால் என்ன என்பது இவனுக்குத் தெரியுமா ஸார்? இல்லை மற்றவர்களுக்குத்தான் தெரியுமா? எங்கள் இரண்டு உள்ளமும் காதலில் உருகிக் கலந்து விட்டன. இனி அவற்றை எங்களைப் படைத்தவனாலும் பிரித்துவிட முடியாது. காதல் போயின் சாதல். எனக்கு மட்டுமில்லை. சரோஜாவும் என்னைப் பிரிந்து ஒரு நொடி உயிர் தரிக்க மாட்டாள். ஒரே ஒரு மூச்சுக் கூட விட மாட்டாள். அவள் மூச்சு நின்று விடும்'' என்று பேசிப் புதுயுகத்துக் கவிஞர் ஒருவரின் ஒரு காதல் கவிதையைப் பாடத் தொடங்கிவிட்டான்.

அவன் பாட்டுக்கு அணை போட்டு நிறுத்திச் சுதர்சனம், ''உன்னை அவள் காதலிப்பதாகச் சரோஜாவே சொன்னாளா?'' என்று கேட்டதற்கு, அவன், ''இந்த எட்டு மாதங்களில் நான் இரண்டாயிரம் ரூபாய் வரை அணிகளும், அழகுப் பண்டங்களுமாக அவளுக்கு என் காதல் காணிக்கையாகக் கொடுத்திருக்கிறேன், ஸார். என்மேல் காதல் இல்லாவிட்டால் அவள் ஒரு 'நன்றி' கூடச் சொல்லாமல் அவ்வளவையும் வாங்கிக் கொண்டிருப்பாளா'' என்று பதில் கேள்வி கேட்டான்.

அவன் வெளியே போய், அரை மணி நேரத்துக்குப் பிறகு, கோபம், கருணை, சோகம், ஹாஸ்யம் ஆகிய நான்கு ரச பாத்திரங்களும் ஒருவர் பின் ஒருவராக அவரிடம் வந்தார்கள். கோப ரச கோதண்டன்; சுதர்சனம்தான் சரோஜாவுக்கும் அவனுக்கும் தடையாக நிற்பது போலப் பேசிவிட்டுப் போனான். கருணை ரசம் கந்தசாமி நந்தன். வேதியரிடம் கெஞ்சியது போல் அவரிடம் நீதியும் நியாயமும் கேட்டுவிட்டுப் போனான்.

சோக ரசம் சொன்னதைக் கேட்டபோது சுதர்சனத்தின் கண்களே ஈரமாகிவிட்டன. அந்த மூவரில் ஒவ்வொருவனும் சரோஜா தன்னைத்தான் மணக்க விரும்புவதாகவும் மற்றவர்கள் அதற்குக் குறுக்கே நிற்பதாகவும் அடித்துச் சொன்னான்.

கடைசியாக வந்த சந்தானம், சுதர்சனத்திடம், ''காற்று வேகம் ஏறிக்கொண்டே போகிறது. வானத்தில் கருமேகங்கள் அடையாகக் குவிந்து விட்டன. மின்னல் வெட்டுகிறது. இடியோசை கூட மெதுவாகக் கேட்கிறது. பெரிய மழையும் புயலும் சேர்ந்து வரப்போகிறது போலிருக்கிறது. இவ்வளவையும் கூட்டி வைத்துவிட்டு, நீங்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறீர்கள்'' என்றான்.

சுதர்சனம் திடுக்கிட்டு, ''நான் சேர்த்து வைத்தேனா!'' என்று கேட்டார். சந்தானம் ''சார்! நான் சம்பாதித்து அனுப்புவதில் என் தாயும் தம்பிகளும் அரை வயிற்றுக்குத்தான் சாப்பிட முடியும். ஆகையால் சரோஜாவுக்காக நான் இன்றுவரை ஒரு ஐந்து காசுகூடச் செலவு செய்ததில்லை. எனக்கும் சாப்பாடு போட்டு, துணிமணி வாங்கிக் கொடுத்து, என் தாயையும், தம்பிகளையும் கூடக் காப்பாற்ற வக்குள்ள ஒரு பெண்தான் நமக்குக் கட்டி வரும் என்று அப்படி ஒருத்தியைத் தேடிக் கொண்டிருக்கிறேன். இருந்தாலும் சரோஜாவை ஐந்து பேர்கள் வளைய வருவதைப் பார்த்தவுடன் நாம் ஒதுங்கியிருந்தோம் என்ற பழியை ஏற்பானேன் என்று நானும் இடையில் புகுந்து சிரிக்க வைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் ஒன்று சார். அவள் சிரிக்கும்போது, அவள் அப்படித் தலையைச் சாய்த்துப் பார்க்கும்போது அவள் கண்களைப் பார்த்து நான் கூட இவள் நம்மைக் காதலிக்கிறாளோ என்று நினைத்து ஏமாந்திருக்கிறேன். அந்த மாதிரி நேரங்களில்தான் 'அத்தனை பேரும் சுதர்சனம் ஐயா சுழற்றி விட்ட பம்பரங்கள், அதிலே நானும் ஒன்று' என்று எனக்கு நினைவு வரும். பாருங்க சார். மனம் கொண்ட மட்டும் பாருங்க, வேடிக்கை பாருங்க'' என்றான்.

''இவ்வளவுக்கும் மூலகாரணம் நீதான்'' என்று சொல்லி விட வேண்டுமென்ற வேகம் எழுந்தது சுதர்சனம் மனத்தில். சரோஜாவின் காதலுக்குப் போட்டியில் சந்தானம் போட்டது வேஷம்தான், கூட்டத்தில் கோவிந்தாதான் என்பது அவரால் நம்ப முடியாமலிருந்தது. அவனைத் துருவித் துருவிக் கேள்விகள் கேட்டு அது பொய்தான் என்பதை அவர் நிச்சயம் செய்துகொண்டார்.

சாந்தரசம் சாரங்கபாணி காலையில் எங்கேயோ வெளியே சென்று மாலை ஐந்து மணிக்குத்தான் திரும்பி வந்தார். இருந்தும் அவருக்கு அந்தக் கூட்டத்தினுள் இருந்த வெப்ப நிலை துல்லியமாகத் தெரிந்திருந்தது. அவர் நேரே சுதர்சனத்திடம் வந்து, ''சரோஜா இன்று மாலைக்குள் ஒரு முடிவு செய்ய வேண்டியிருக்கும். நிலைமை அந்த நெருக்கடி எல்லையை எட்டிவிட்டது. உங்களுக்கும் உலகம் ஒரு மாதிரியாகப் புரிந்து விடும்'' என்றார்.

அவருக்குப் பதில் சொல்லச் சுதர்சனத்துக்கு நேரமில்லை. தாமோதரன் பதறிக்கொண்டு உள்ளே ஓடிவந்து, ''சார், சீக்கிரம் வாங்க. நீங்களும் வாங்க. கீழே குத்துப் பழி வெட்டுப் பழி ஆயிடும் போலிருக்கு'' என்றான்.

அவர்கள் மூவரும் கீழே போனபோது தாழ்வாரத்தை அடுத்த முன் கூடத்தில் தனிமை விலாசத்தின் மற்ற ஏழு ரச பாத்திரங்களும் ஆளுக்கு ஒரு பக்கமாக நின்று கொண்டிருந்தார்கள். நடுவில் ஒரு பெட்டியும், கட்டிய படுக்கையும் இருந்தன. பெட்டியின் அருகில் சரோஜாவின் தாயார் செந்தாமரை அம்மாள் கலவரத் தோற்றத்துடன் நின்று கொண்டிருந்தாள். சுதர்சனத்தைக் கண்டவுடன் மூன்று ரசங்களும் ஒரே நேரத்தில் பேசத் தொடங்கின. கோப ரசத்தின் குரல்தான் எல்லாவற்றுக்கும் மேலே ஓங்கி ஒலித்தது. அவர்கள் என்ன சொல்லுகிறார்கள் என்பது தெளிவாவதற்குள் சரோஜா கையில் ஒரு ஜமுக்காளப் பையுடன் உள்ளே

# அவளுடைய படிப்பு திருப்திகரமாக இல்லை என்றார்கள்!

சோர்ந்து, மந்தமாக ஆவதற்குமுன், அவள் சுறுசுறுப்பு கெட்டிக்காரியாக இருந்தாள்! டாக்டரிடம் காட்டுவதுதான் நல்லது என்று நினைத்தேன்.




"வளரும் குழந்தைகளுக்கு அதிக சக்தி தேவை. இந்தச் சக்தியைப்பெற அதிக போஷாக்கு வேண்டும். உங்கள் குழந்தைக்கு ஹார்லிக்ஸ் கொடுங்கள்" என்றார் டாக்டர்.



இப்பொழுது நிலைமையே வேறு! அவள் அளவற்ற உற்சாகத்துடன் இருக்கிறாள்... கேள்விகளுக்கெல்லாம் உடனுக்குடனேயே டக்டக்கென்று பதில் சொல்லுகிறாள். எல்லாம் ஹார்லிக்ஸ் செயல்!

## ஹார்லிக்ஸ் கொடுத்த பின் சிறந்த ஆரோக்கியமும் அறிவுக் கூர்மையும் பெற்றாள்!

ஹார்லிக்ஸ், வளரும் குழந்தைகளுக்கு மிகவும் சிறந்தது. வளர்ச்சியின் வேகத்தில், விரைவில் செலவழிந்து விடும் சக்திக்கு ஈடு செய்யப் போதுமான அளவு போஷாக்கு, வழக்கமான உணவில் அவர்களுக்குப் பெரும்பாலும் கிடைப்பதில்லை. அவர்களுக்குத் தேவையான அதிகப்படி போஷாக்கைத் தருகிறது ஹார்லிக்ஸ். தனிச்சிறந்த இயற்கை உணவுப் பொருள்களிலிருந்து ஹார்லிக்ஸ் தயாரிக்கப்படுவது தான் இதற்குக் காரணம். ஆகவே தான் டாக்டர்கள் ஹார்லிக்ஸ் சிபாரிசு செய்கிறார்கள். உங்கள் குழந்தைக்கும் ஹார்லிக்ஸ் தேவை!




ஆடைச் சத்து நீக்காத பாலுடன், கோதுமை மாவு, மால்ட்டட் பார்லி ஆகியவற்றின் போஷாக்குச் சத்து கூடியது



# ஹார்லிக்ஸ்

அதிக சக்தியை அளிக்கிறது!

வந்து தன் தாயின் அருகில் போய் நின்று மற்றவர்களைச் சுற்றிப் பார்த்தான்.

சுதர்சனத்தைக் கண்டவுடன் அவள், "சார்! அம்மாதான் என்னவாகுமோ, ஏதாகுமோ என்று பயப்படுகிறாள். அதனால் நாங்கள் வேறு இடம் பார்த்துக்கொண்டு போகிறோம். உங்களிடம் சொல்லிக்கொண்டு போக மாடிக்கு வர விருந்தேன். இன்றைக்குக் காலையிலிருந்து இவர்கள் போட்ட கூச்சலில் இந்த வீடு அதிர்ந்து சரியாமல் எப்படி நிற்கிறது என்று ஆச்சரியமாக இருக்கிறது. இந்த ஆறு பேரையும் நான் கல்யாணம் செய்து கொள்வதாய்ச் சொல்லியிருக்கிறேனாம். நீங்களே இவர்களைக் கேளுங்கள் ஸார். நான் இவர்களில் யாருக்காவது வாயால் சரி என்றது மட்டுமில்லை. தலையையாவது சரியென்று ஆட்டியிருக்கிறேனா என்று கேளுங்கள்" என்றாள்.

சுதர்சனம் அந்த ஆறு பேர்களின் பக்கம் திரும்பினார். சந்தானத்தைத் தவிர மற்ற ஐவரும் ஒரே காலத்தில் பேசத் தொடங்கினார்கள்.

சுதர்சனம் கைகாட்டி அவர்களை அமர்த்தி ஒவ்வொருவராகப் பேசச் சொன்னார். ஒருவராவது நிச்சயமாகச் சரோஜா தன்னை மணந்து கொள்ள வாக்களித்திருக்கிறாள், அல்லது சம்மதித்திருக்கிறாள் என்று நிலைநாட்டவில்லை. ஒவ்வொருவரையும் சரோஜா அப்படி மடக்கி மடக்கிக் கேள்வி கேட்டாள். "இருந்தாலும், ஆனால்...." என்று ஒவ்வொருவனும் குன்றினான்.

கடைசியாகக் கருணை ரசம் கந்தசாமி சரோஜாவுக்குப் பதில் சொல்ல இயலாமல் திணறிக் கொண்டிருந்தபோது, ஓர் இளைஞன், "அத்தே, சரோஜா! டாக்ஸியை கொண்டு வந்துவிட்டேன். புறப்படலாமா?" என்று கேட்டுக் கொண்டு கூடத்துக்குள் வந்தான்.

அங்கிருந்த கூட்டத்தைக் கண்டு அவன் திகைத்து நின்றான். சரோஜா, "வாங்க அத்தான், வாங்க!" என்று அவனைத் தன் அருகில் அழைத்து நிறுத்திக் கொண்டு, சுதர்சனத்தைக் காட்டி, "இவர் தான் சுதர்சனம் சார்" என்று அறிமுகம் செய்து வைத்தாள். சுதர்சனத்திடம் அவள், "சார், இவர் எங்க அத்தை மகன் கோபு. நாங்க ரெண்டு பேரும் ஒருத்தொருக்கொருத்தர் வாழ்க்கைத் துணையா யிருக்கிறது என்று நாலு வருஷங்களுக்கு முந்தியே முடிவு செய்திட்டோம். அம்மாவும் சரின்னுட்டாங்க. ஆனால் அத்தான்தான் என்ஜினீரிங் படிப்பு முடிஞ்ச பிறகுதான் திருமணம் நடக்கணும் என்று உறுதியாகச் சொல்லிவிட்டார். கடைசி ரெண்டு வருஷப் படிப்பை முடிக்க முடியாதுங்கற நிலைமை வந்துவிட்டது. அதுக்குப் பணமில்லே. அதை அவர் முடிக்கிறதுக்கு வழி செய்யறதுக்காகத்தான் நான் விளம்பரப் படங்களுக்கு நிற்கத் தீர்மானித்தேன். தொடக்கத்திலே அம்மாவும் அத்தானும் கூடவே கூடாதுன்னுட்டாங்க. அப்புறம் சரின்னுட்டாங்க. அத்தான் கடைசிப் பரீட்சை எழுதிட்டார். நிச்சயமா தேறிடுவார், சார். நாங்க மூணு பேரும் அடுத்த வாரம் ஊருக்குப் புறப்படறதா இருந்தோம். இன்னிக்குக் காலையிலே இவங்களெல்லாம் கூடி வந்து இன்னைக்கே புறப்படுன்னு விரட்டிட்டாங்க. என்னைக் கூட்டிக்கிட்டுப் போறதுக்குத்தான் வந்திருக்கார். நாங்க போய் வரோம், சார்!" என்று பேசிக் கையெடுத்துக் கும்பிட்டாள்.

பிறகு அவள் மற்றவர்கள் பக்கம் திரும்பி, "நீங்கள் எல்லோரும் எனக்குக் கொடுத்த பரிசுப் பொருள்களெல்லாம் அப்படி அப்படியே அந்த வெளி வீட்டு முன் அறையிலே இருக்கு. அவங்க அவங்க கொடுத்ததைப் பார்த்து எடுத்துக்குங்க. எங்க திருமண அழைப்பு எல்லோருக்கும் வரும். எல்லாரும் அவசியம் வாங்க!" என்று அவர்களுக்கும் கைகூப்பிவிட்டு, "வாங்க அத்தான், வா, அம்மா" என்று அவர்களை அழைத்துக் கொண்டு புறப்பட்டாள்.

சரோஜாவின் காதலர்கள் ஐவருக்கும் அந்த நிலைமையின் திகைப்புக் கலைய ஐந்து நிமிஷங்களுக்கு மேல் ஆயிற்று. அந்த நிகழ்ச்சியின் விளைவாகச் சுதர்சனத்துக்கு ஏதோ புரிவது போலவும் இருந்தது. ஆனால் என்னவென்றும் தெரியவில்லை.

கூடத்தின் ஒரு மூலையிலிருந்து வந்த குரலைக் கேட்டு அவர் திடுக்கிட்டுத் திரும்பினார். அங்கே கார்த்திகேயன் நின்றுகொண்டிருந்தான். அவன்தான் பேசினான்: "பைத்தியங்கள். அத்தனையும் பைத்தியங்கள்" என்று உரக்கச் சொல்லிவிட்டுச் சிரித்துக் கொண்டே அவன் வெளியே சென்றான்.

சந்தானம் உரத்த ஒலியுடன் விரல்களைச் சொடுக்கி, "சுதர்சனம் ஐயா! நீங்க தேடின வாழ்க்கை ரகசியம் வெளியாகி விட்டது. என்ன சார் அப்படிப் பாக்கறீங்க! நீங்க வீட்டுக்குள்ளே ஒன்பது ரசங்களை மட்டும் கொண்டு வந்து சேர்த்தீங்க. ஆனால் ஒவ்வொரு மனிதனையும் ஆணையும் பெண்ணையும் வாழ்க்கையிலே ஓட்டிக் கொண்டு சுழலவைக்கும் சக்தி அந்த ஒன்பதுக்கும் அப்பாலும் நின்று, அந்த ஒன்பதுக்குள்ளேயும் மறைந்து கலந்திருக்கும் ஒரு தனி ரசம். அதுதான் பத்தாவது ரசம்" என்றான்.

சுதர்சனம் புரியாத குரலில், "பத்தாவது ரசமா?" என்று கேட்டார்.

சந்தானம், "ஆமாம் சார். அதுதான்—பைத்திய ரசம். நம்மில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகையில் பைத்தியம். எனக்கு அம்மா தம்பிகளைக் காப்பாற்றும் பைத்தியம். இந்த ஐந்து பேருக்கும் சரோஜா மேல் காதல் பைத்தியம். சரோஜாவுக்கு அவளுடைய அத்தானை வாழ்க்கைத் துணையாகப் பிடித்துக்கொள்ள வேண்டும் என்ற பைத்தியம். அந்த அத்தானுக்கு என்ஜினீயர் ஆகும் பைத்தியம். உங்களுக்கு அதைப் பற்றி அறிய வேண்டும் என்ற பைத்தியம். நம்மில் ஒவ்வொருவரையும் இந்த மாதிரி ஒரு பைத்தியம் பிடித்துக் கொள்கிறது. நாம் அதைப் பிடித்துக் கொண்டு அந்தப் பலத்தில் வாழ்க்கையையும் விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டு ஓடியாடுகிறோம். மனிதர்கள் எல்லாருடைய கோடிக்கணக்கான பைத்தியங்கள் தனித் தனியாகவும் மொத்தமாகவும் இந்த உலகத்தை நடத்தி ஓட்டிக் கொண்டிருக்கின்றன. அதுதான் நீங்கள் கண்டுபிடிக்க விரும்பின வாழ்க்கை ரகசியம்" என்றான்.

# காணி நிலம்

## கு. அழகிரிசாமி

*பாரதியார் தமது ஒப்பற்ற 'காணி நிலம்' பாடலை எந்த நோக்கத்துடன் பாட நினைத்தார் என்பதை விளக்கும் இந்தக் கட்டுரை, ஐரோப்பியக் கவிஞர்கள் இருவரின் 'காணி நிலம்' பாடல்களை வென்று தமிழ் சிறப்புடன் திகழ்வதை நயம்பட உரைக்கிறது. பாரதியாரின் நினைவுநாளை யொட்டி இந்தக் கட்டுரையை வெளியிடுவதில் மகிழ்ச்சி கொள்கிறோம்.*

“காணி நிலம்” பாட்டை ஆராயும்போது அது, “ஒரு சின்னக் குடும்பம் பிழைக்க எவ்வளவு நிலம் 'வேண்டும்'” என்பதை விவரிப்பதற்காகப் பாடப்பட்டதுபோல் தோன்றவில்லை. குடும்ப வாழ்க்கை பற்றிய பிரஸ்தாபத்தையே பாட்டில் காணோம். குடியிருக்க வீடு கேட்கும் ஒரு குடும்பஸ்தனின் வேண்டுகோளாக இல்லாமல், கல்யாணமாகாத ஓர் இளைஞனின் அல்லது இளைஞனாக இருக்கும் ஒரு கவிஞனின் ஆசைக் கனவாகவே இருக்கிறது.

பாரதியாரைப் போல் வேறு கவிஞர்களும் காணி நிலம் கேட்டிருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் ஆப்ரஹாம் கௌலி (1618–1667) என்ற ஆங்கிலக் கவிஞர். அவர் ஷேக்ஸ்பியர் காலமாகி இரண்டு ஆண்டுகளுக்குப்பிறகு பிறந்தவர். அவர் பிரபலமான கவிஞர் என்பதுடன், குறிப்பிடத்தக்க வியாசகர்த்தாவும் ஆவார். அவருடைய கட்டுரை ஒன்றில் காணப்படும் வரிகளைப் போட்டுத்தான் நேருஜி தமது சுயசரிதையை எழுதத் தொடங்கியிருக்கிறார் என்பதைப் பலரும் அறிவார்கள். ஆப்ரஹாம் கௌலி நகர வாழ்க்கையின் பரபரப்பையும், இரைச்சலையும், நெருக்கடியையும், சூதுவாதுகளையும், நயவஞ்சகங்களையும் சகிக்க முடியாமல் அதை விட்டுத் தப்பி ஓடிப் போய் வசிப்பதற்காகக் “காணி நிலம்” கேட்டார். அவருடைய பாடலின் தமிழாக்கம் இதோ இதுதான்:

பேயினைப் போலப்
 பறக்கும்இவ் வையத்தின்
பெற்றியை நன்கு
 உணர்ந்துவிட் டேன்;
நோயினைப் போலும்இவ்
 வாழ்வினில் காலத்தை
நோவதை இன்று
 வெறுத்துவிட் டேன்;

வாயின் சுவைக்கொத்த
 பண்டங்கள் போல்,வைய
வாழ்வெனும் தேனும்
 தெவிட்டுத டா!
சீ!இந் நகரத்தின்
 கும்பலைக் கூச்சலை
சிந்திக்கில் நெஞ்சம்
 குமட்டுத டா!

செத்தும் சவக்குழி
 சேருமுன் னேயொரு
சின்னஞ் சிறுஇல்லம்
 வேண்டும டா!

நித்தமும் பூக்கும்ஓர்
 தோட்டம் அதைச்சுற்றி
நீண்டு கிடக்கவும்
 வேண்டும டா!

அத்துடன் ஓர்சில
 நண்பரும், பற்பல
அரிய பெரியநல்
 நூல்களு மே

சத்திய மும்தனி
 ஞானமும் கொண்
 டென்றன்
தனிமையைப் போக்கிட
 வேண்டும டா!

உள்ளன்பை என்றென்றும்
 போற்றி வளர்த்திடும்
உன்னதப் பண்பைப்
 படைத்தவள் யாள்;

'அள்ளிஅள்ளி அன்பைப்
 பெற்றும் அளித்தும்என்
அண்டையில் கூடி
 அமர்ந்திருக் க

கள்ளமில் வாழொரு
 கன்னிம கள்,என்னைக்
காத்திடும் தேவதை
 போன்றவளாய்,

வெள்ளமெ னப்பாயும்
 அன்பினை வாய்என்னை
மேவும் துணைவளாய்
 வேண்டும டா!

நீர்நிறை தங்களை
 ஓரம் இருந்தென்றன்
நெஞ்சம் சுமக்கும்
 கவலைத் தை

சோரவிட் டேசுகச்
 சாந்தியில் என்மனம்
தோய்ந்திடும் நாளென்று
 வந்திடு மோ?

பாரில் பொலியும்
 பசும்வய லே!உயர்
பச்சை மரங்களின்
 சோலை யே!

சீர்பெறும் உம்நிழல்
 தேடி வசித்தற்குச்
சேர்ந்திடும் நாளென்று
 வந்திடு மோ?



இதன் பிறகு, அந்தச் சின்னஞ்சிறு இல்லமே இன்பத்தின் ஊற்று என்றும், அதுவே இயற்கையின் கருவூலம் என்றும், அங்கே ஆணவம், பேராசை, முணுமுணுப்பு, முகஸ்துதி போன்றவை கிடையாது என்றும், தேவர்கள் வானுலகிலிருந்து இறங்கி வரும்போது அந்தப் பாதை வழியாகவே வருவார்கள் என்றும் கூறும் கௌவி மேலும் பாடுகிறார் :

என் துணை யானவள்
தன்னுடன் கூடியான்
எத்துணை இன்பத்தில்
மூழ்கிடு வேன் !

என்னவள் தன்னை
அணைத்துமே 'யங்கியே
எத்துணை இன்பத்தில்
மாய்ந்திடு வேன் !

அன்னவ ளோடொடும்
பாலெலி தூரந்துமே
அற்ற தனிமையைப்
போக்குவ னாம்....



என்னென்ன வோபல
செப்புகின் றேன்; ஐயோ !
என்னுள்ளே அச்சமொன்(று)
உள்ளத டா !

அது என்ன அச்சம்? காதலியோடு தனி இல்லத்தில் இன்ப வாழ்க்கை வாழக் கனவு காணும் கவிஞருக்கு உள்ளத்தில் இருக்கும் அச்சம் என்ன? அவரே கூறுகிறார் :

இன்பம் நிறைந்திட்ட
வாழ்வினைத் துய்த்துயான்
இங்கு வசிப்பதைக்
காண்பவர் கள்,

முன்புவந் திட்ட என்
பாதையில் கூடியே
முட்டியும் மோதியும்
ஓடிவந் தால்,

பின்பு பலப்பல
வீடுகள் கட்டிப்
பெருந்நகர் ஒன்றினைத்
தோற்றுவித் தால்,

துன்பமும் தொல்லையும்
கூடிடு மே! இன்பம்
சொல்லிக்கொள் ளாமலே
ஓடிடு மே !

கவிஞர் சோலையின் நடுவே சின்னஞ்சிறு இல்லத்தில் சுகமாக வாழ்வதைப் பார்த்து மற்றவர்களும் அங்கு வந்து வீடு கட்டி வசிக்க ஆசைப்பட்டு விட்டால், அங்கே ஒரு பெரிய நகரம் தோன்றி விடுமே என்று அவர் அஞ்சுகிறார். அவர் விரும்புவது ஏகாந்தமான ஒரு வீட்டில், மனத்துக் கினியாளான ஒரு காதலியுடன் வாழும் அமைதியான தனி வாழ்க்கைதான். அதற்கு ஆசைப்பட்டே அவர், ''காணி நிலம்'' கேட்டார்.

இனி ஒரு ரஷ்யக் கவிஞரின் ''காணி 'நில'த்தைப் பார்க்கலாம். மைக்கேல் லெர்மாந்தோவ் (1814–1841) என்ற இந்தக் கவிஞர் அக்காலத்திய ஜார் அரசாங்கத்தை எதிர்த்துப் பாடி இருமுறை காகஸஸுக்கு நாடு கடத்தப்பட்டவர். 27ம் வயதிலேயே காலமாகிவிட்டார். கொடுங்கோலாட்சியை எதிர்த்ததிலும், சிறு வயதிலேயே காலமாகி விட்டதிலும் இவருக்கும் பாரதிக்குமிடையே ஓர் அதிசய ஒற்றுமை கூட இருக்கிறது! லெர்மாந்தோவ் ஆயுதம் தாங்கிப் போரிடும் ஒரு வீரராகவும் விளங்கினார். அவர் பிரபல ஆங்கிலக் கவிஞரான பைரனைப் பின்பற்ற முயன்றவர் என்றும், ஆனால் பைரனைவிடப் பெரிய கவிஞர் என்றும், சில அம்சங்களில் அவருக்கு இணையான வேறொரு கவிஞர் ரஷ்யாவில் இடையாது என்றும், அவருடைய தேசபக்திப் பாடல்கள் அற்புதமானவை என்றும் புகழ்ந்து கூறியிருக்கிறார்கள்.

சிறையிலே கிடந்து உழலும் ஒருவனுடைய ஆசையாக அவர் தமது 'காணி நில'த்தைப் பாடியிருக்கிறார். இந்த உலக வாழ்க்கையையே ஒரு சிறைவாசம் போல் அநுபவித்துக் கொண்டு, துன்பங்களிலிருந்து மீள ஆசைப்படும் ஒரு ஜீவனின் தவிப்பாகவும் அந்த ஆசையைக் கருதலாம். அவருடைய பாடலின் மொழிபெயர்ப்பு பின்வருமாறு:

சிறையின் கதவைத்
திறந்து விடுங்கள்!
பகலொளி தனையான்
பார்த்திட விடுங்கள்!



கருநிறக் கண்ணுள்
    கன்னிகை ஒருத்தியும்,
கரும்பிடர் கொண்ட
    கதியினில் சிறந்த
குதிரைஒன் றினையும்
    கொடுங்கள்! யான்போய்ப்
பசும்புல் படர்ந்து
    பரந்தவெளியினில்
பாய்ந்திடும் புரவிமேல்
    பயணம் செய்தே
ஓர்முறை இன்னும்
    உற்றுநின்(று) அந்த
வேற்று நிலத்தை,
    வியன்மிகு வாழ்க்கையை
சுதந்திரம் தன்னையான்
    காணவே விடுங்கள்!

ஓட்டைப் படகு
    ஒன்றும் தருவீர்!
உளுத்துப் போனதோர்
    பலகையும் கொடுப்பீர் !
காற்றில், புயலில்
    கந்தலாய்ப் போன
படகின் பாயும்
    பரிந்தே அளிப்பீர்!
தோழர்கள் இன்றி,
    தொல்லைகள் இன்றி,
ஆழநீர்க் கடலில்
    அகன்ற பரப்பில்
யாத்திரை தொடங்கி,
    இராக்கத வெறியும்
ஊக்கமும் கொண்டு
    மோதி அலைதி

கடலுடன் கடுஞ்சமர்
    செய்வேன் ; களிப்பேன் !

பச்சைப் பசுந்திற
    மரங்கள் கூட்டமும்
பழுத்துத் தொங்கும்
    முந்திரிக் கொடிகளும்
தரைமேலாம் படர்ந்த
    தண்ணிழல் தானும்
வாய்ந்ததோர் வானுயர்
    மாளிகை கொடுப்பீர்!

பளிங்குத் தூண்களின்
    பத்தியின் நடுவே
பாடிப் பறந்து
    ஓடும் ஊற்றுநீர்
துயில்உணர்த் திடுக!
    துயின்றபின் எனக்குப்
பள்ளி எழுச்சி
    பாடியே, விண்ணகக்
கண்கவர் காட்சி—
    யிடையே தெறிக்கும்
நுண்துளித் திவலைகள்
    குளிர்மையின் நடுவே,

என்றனைத் துயிலும்
    இனிதெழுப் புகவே !

ரஷ்யக் கவிஞர் காணி நிலத்தில் போய்த் தங்குவதற்குமுன் குதிரையிலும் படகிலும் பிரயாணம் செய்ய விரும்புகிறார். ஒரு கருங்கண் நங்கை வேண்டும் என்று கேட்டாலும், அவளோடு கூடி வாழ்வதைப் பற்றி அவர் பிரஸ்தாபிக்கவே யில்லை! போர் வீரரானபடியால் கடலோடு போரிடுவதிலும், அந்தப் போரில் களிப்படைவதிலுமே அவர் கவனம் செல்கிறது. அது போகட்டும்: மாளிகை வேண்டும் என்று கேட்கிறார் அவர். அங்கே போய் ஊற்று நீரின் சலசலப்பைக் கேட்டு இனிதே தூங்கவும், அதன் திருப்பள்ளி எழுச்சி கேட்டுத் துயில் எழவுமே அவர் ஆசைப்படுகிறார். மொத்தத்தில், ரஷ்யக் கவிஞருக்கு, உலகத்தோடு எவ்விதத் தொடர்புமின்றி, அருகில் இருக்கும் கருங்கண் நங்கையைக்கூட மறந்துவிட்டு, காணி நில மாளிகையில் நிம்மதியாக வாழ்வதிலும் நிம்மதியாகத் தூங்கி எழுவதிலுமே ஆசை என்பது தெரிகிறது.

கௌலியும் சரி, லெர்மாந்தோவும் சரி, உலகை விட்டு ஓடத்தான் விரும்புகிறார்களே ஒழிய, அதைப் பற்றி, அதன் நலனைப் பற்றிச் சிந்திக்கக்கூட அவர்கள் தயாராக இல்லை. போன இடத்திலும் ஜனங்கள் வந்து தொல்லை கொடுக்கக் கூடாது என்று வேறு நினைக்கிறார் கௌலி. இதைப் பார்க்கும் போது, இந்த இரு கவிஞர்களுடைய காணி நில ஆசையும் முழுக்க முழுக்கச் சுயநலத்தி லிருந்து எழுந்ததே என்பது தெளிவாகிறது. ஆனால் பாரதியாரோ தன்னலத்தைப் பற்றிச் சிறிதும் எண்ணாமல், பொதுநல நோக்குடனேயே காணி நிலம் கேட்கிறார். அதுவும் கௌலியைப் போல் உள்ளுக்குள் ஆசைப் பட்டு மனக் கோட்டை கட்டாமல், லெர் மாந்தோவைப் போல் மனிதர்களிடம் பிச்சை கேட்காமல், பராசக்தியிடம் வரம் கேட்கிறார்.

அன்னையிடம் கேட்பது பிச்சையல்லவே ! அவர் வரம் கேட்கும் அழகே ஓர் அழகு ! முதலில் காணி நிலம் "வேண்டும்" என்று தொடங்கினார்; மறுமுறையும் "வேண்டும்" என்ற சொல்லை உபயோகித்தார். அப்புறம் பராசக்தி மனக்கண்முன் தோற்றம் அளிக்கவே, அன்னை வடிவத்தைக் கண்டதும், "வேணும் வேணும்" என்றே ஒவ்வொன்றையும் கேட்கலானார். அன்னையிடம் யாரும் இலக்கணமாகப் பேசுவார்களா? தாயைக் கண்ட பாரதி தாம் கவிஞர் என்பதையே மறந்து விட்டார். மகனாக நின்று கொண்டு அன்னையிடம் உரிமையோடு கேட்கிறார். அதனால்தான், "வேண்டும்" என்ற சொல்லை விட்டு "வேணும்" என்று பேசத் தொடங்கி விட்டார் !

அழகான தூண்களும், மாடிகளும் கொண்ட ஒரு மாளிகையைக் காணி நிலத் திடையே கட்டித் தர வேண்டும் என்றும், அங்கே கேணியும், தென்னை மரங்களும், நிலவொளியும், குயிலோசையும், இளந் தென்றலும் வேண்டும் என்றும் பராசக்தி யிடம் கேட்கும் பாரதியார், தம்மோடு சேர்ந்து பாடுவதற்கு ஒரு பத்தினிப் பெண் ணும் வேண்டும் என்றும் கேட்கிறார். ஒரு பெண் வேண்டும் என்று கேட்பதால், இது குடும்பஸ்தனின் வேண்டுகோளாக இல் லாமல் பிரம்மச்சாரியான ஒரு கவிஞனின் பிரார்த்தனையாகவே இருக்கிறது என்பதைக் கண்டுகொள்ள முடிகிறது.

பாட்டுக் கலந்திடவே—
அங்கே ஒரு
பத்தினிப் பெண்வேணும்—
எங்கள்
கூட்டுக் களியினிலே
கவிதைகள்
கொண்டு தரவேணும் —
அந்தக்
காட்டு வெளியினிலே —
அம்மா நின்றன்
காவல் உறவேணும் —
என்றன்
பாட்டுத் திறத்தாலே —
இவ்வையத்தைப்
பாலித்திட வேணும்
காணிநிலம் வேண்டும் —
பராசக்தி
காணி நிலம்
வேண்டும்

பாரதியார் எப்படிப் பொதுநலனைக் கருதியே காணி நிலம் கேட்டிருக்கிறார் என்பதை இந்தப் பாட்டிலிருந்து தெரிந்து கொள்ளலாம். பாட்டுக்கள் பாடி, அந்தப் பாட்டுக்களின் ஆற்றலினால், இந்த உலகத்துக்கு நல்வாழ்வு அளிக்க வேண்டும், அந்தப் பணியை நிம்மதியாகவும், நிறைவாகவும், மகிழ்ச்சியோடும் செய்வதற்கே ஒரு காணி நிலமும், அதில் ஒரு மாளிகையும், அங்கே ஒரு பத்தினிப் பெண்ணும் வேண்டும் என்று கேட்கிறார். பொதுநலப் பணியை நன்கு செய்வதற்கே இத்தனையும் தேவை என்கிறாரே ஒழிய, தாம் சுகமாகக் காலம் கழிப்பதற்கு அல்ல. சுயநலத்தின் வாசனை கூட இங்கே வீசவில்லை.

பிறர் எக்கேடு கெட்டாலும் சரி, நாம் ஒரு காணி நிலம் பார்த்து ஓடி விட்டால் போதும் என்று பாரதியார் நினைக்கவில்லை.

மற்றவர்கள் கேட்ட காணி நிலம் ஒரு போக பூமி. பாரதியார் கேட்ட காணி நிலமோ ஒரு தவச்சாலை.

அந்த வசதி வேண்டும், இந்த வசதி வேண்டும் என்று பட்டியல் வைத்துக் கொண்டே போனால் அது வெறும் சுயநல மாகவே இருக்கும் என்பதோடு அந்தப் பாட்டுக்கு ஒரு முடிவும் இராது; உருவமும் இராது. அதனால் ஒரு முத்தாய்ப்பு வைக்க வேண்டும். கௌளியும் லெர்மாந்தோவும் முத்தாய்ப்பு வைத்திருக்கிறார்கள். அந்த முத்தாய்ப்பிலும் பட்டியலில் காண்பது போலவே சுயநலத்தைத்தான் காண்கிறோம். ஆனால் பாரதியாரோ, "என்றன் பாட்டுத் திறத்தாலே, இவ்வையத்தைப் பாலித்திட வேணும்" என்று முத்தாய்ப்பு வைத்தார். அதில் பொதுநல விருப்பமே இருக்கிறது. அத்துடன் அந்த முத்தாய்ப்பு பாட்டுக்குத் தெய்வீகமான முழுமையும், அபூர்வமான உருவமும் கொடுத்து விடுகிறது. ஆசையை விவரிக்கும் உள்ளடக்கத்தில் மட்டுமின்றி, கவியம்சத்திலும் பாரதியாரின் காணி நிலம் அந்த இரு கவிஞர்களுடைய காணிநிலங்களையும் விடப் பன்மடங்கு உயர்ந்து விட்டது.

எனவே தான், கௌலியின் பாட்டும், பைரனையும்விடப் பெரிய கவிஞர் என்று போற்றப்பட்ட லெர்மாந்தோவின் பாட்டுமே பாரதியின் காணி நிலத்துக்குமுன் சூரியனுக்குமுன் மின்மினி போல் ஆகிவிட்டன.

## களி நடம்புரிந்த கண்ணன்



அவள், ஜகந்நாதபுரி கோயிலில் தோட்ட வேலை செய்பவனுடைய மகள். கண்ணனைப்பற்றிய ஒரு பாடலைப் பக்திப் பரவசமாகிப் பாடிக் கொண்டிருந்தாள் அவள். மறுநாள் காலையில் பார்த்தால் சன்னிதானத்தில் இறைவன் திருமேனியை அலங்கரித்த துகில்கள் கிழிந்து அலங்கோலமாகக் கிடந்தன. இதைக் கண்டு அர்ச்சகர்களும் அரசனும் கலவரம் அடைந்து இன்னதென்று புரியாமல் தவித்தார்கள்.

அன்றிரவு அவர்களது கனவில் இறைவன் தோன்றினான். தோட்டக்காரன் மகள் பாடிய பாடலுக்கு ஏற்பத் தான் ஆடியபோது தோட்டத்து முட்செடிகளில் தனது ஆடைகள் அகப்பட்டுக் கிழிந்து போனதாகக் கூறினான்.

அன்று முதல் இந்தப் பாடலை மிகப் பரிசுத்தமான இடத்தில்தான் பாட வேண்டும் என்று கட்டளையிட்டான் மன்னன். இறைவனுக்கு மிகவும் பிரீதியானதும் அவனை ஆனந்த நடனம் புரியச் செய்வதுமான இந்தப் பாடலுக்கு இப்படி ஒரு நியதியை ஏற்படுத்த வேண்டுவது மிக அவசியம் எனக் கருதினான் மன்னன்.

கண்ணனைக் களிநடம் புரியவைத்த அந்தப் பாடல்தான் கீத கோவிந்தம். ஜயதேவர் இயற்றியது.

- வி. என். வெங்கடேசன்

"அமைதி! அமைதி!" என்று அலறினார் தணிகாசலம்.

"சும்மா இருங்க, சார்! இந்த விஷயத்திலே இரண்டிலே ஒன்று தெரிந்தாக வேண்டும்" என்று இடது பக்கமிருந்து பரந்தாமனும், "பேசத்தான் சார், இங்கே கூடியிருக்கிறோம்! மௌன விரதம் அனுஷ்டிப்பதற்காக இல்லை" என்று வலது பக்கமிருந்து நாகராஜனும் சேர்ந்தாற்போல் பேசித் தலைவர் தணிகாசலத்தின் அமைதி வேண்டுகோளை அப்படியே அமுக்கினார்கள்.

"ஒவ்வொருவராகப் பேசுங்களேன்!" என்று தணிகாசலம் இரண்டு உள்ளங்கைகளையும் ஒலிபெருக்கி போல் குவித்துக் கொண்டு அடிவயிற்றிலிருந்து கத்திய போதிலும் அப்போது நிலவியிருந்த சந்தடியில் அவர் குரல் ஏதோ ரகசியம் பேசுவதுபோல்தான் ஒலித்தது.

இத்தனைக்கும் அந்தப் பத்துப் பதினைந்து நபர்கள், இருபதடிக்கு இருபதடி அளவில் அமைந்திருந்த அந்த அறையில் ஜமுக்காளத்தின் மீது உட்கார்ந்துதான் பேசிக் கொண்டிருந்தார்கள்.

மேஜையைத் தட்டித் தம் அதிகாரத்தைக் காண்பிக்க முடியாத நிலையிலிருந்த தலைவர், கையிலிருந்த காலியான காப்பி டம்ளர், கான்டீனின் உடைமைதான் என்ற நிச்சயத்தில் கீழே 'டங் டங்' என்று மோதினார். தணிகாசலத்தின் குரலுக்குக் கிடைக்காத மதிப்பு அந்த டம்ளரின் மோதல் ஓசைக்கு இருந்தது. திடீரென்று மௌனம் நிலவியது.

"நான் இப்போது என்ன கேட்க விரும்புகிறேனென்றால்...." என்று 'விருட்' என்று எழுந்து நின்று பேச ஆரம்பித்த அப்பாசாமி அப்படியே மின்சாரக் கோளாறினால் விளக்கு அணைவது போல், பேச்சை நிறுத்தித் திரும்பிப் பார்த்தார். காரணம், அதே வினாடியில் அவருக்குப் பின்னால் ஐந்து நபர்கள் எழுந்து நின்று அவர் ஆரம்பித்தது போலவே பேச்சை ஆரம்பித்திருந்தார்கள். "இப்போது நான் என்ன கேட்க விரும்புகிறேன் என்றால்....." என்பதுதான் அவர்கள் பல்லவியும். அப்பாசாமி சத்தம் 'பட்' என்று ஓய்ந்த அடுத்த அரை விநாடியில் அவர்களும் 'டக்' என்று சத்தத்தை வாபஸ் வாங்கிக் கொண்டு விட்டார்கள். திருவையாறு தியாகப் பிரம்ம உற்சவத்தில் முதல் வரிசை சீனியர் வித்துவான்கள் 'எந்தரோ மகானுபாவ' கீர்த்தனையைப் பாடி முடித்து அடுத்த கீர்த்தனையை எடுப்பதற்கு முன்பாக நிலவும் இடைவேளை போல் இருந்தது அந்தக் கட்டம்.

தலைவர் தணிகாசலம் தம் கண்களை இறுக மூடிக் கொண்டார்.

"நான்தான் சொல்லி அழுறேனே!" என்று பின் வரிசைப் படைகளைப் பார்த்து ஏக்கத்துடன் கேட்டார் அப்பாசாமி. எங்கே அவர்களும் உடனடியாகத் தொடர்ந்து கோஷ்டி கானம் செய்ய ஆரம்பித்து விடுவார்களோ என்ற அச்சத்தில் தாற்காலிக



அமைதியை அவசரம் அவசரமாகப் பயன் படுத்திக் கொண்டு, பதிலுக்குக் காத் திராமல், ''தலைவர் யோசனையை ஏற்றுக் கொள்ள முடியாது. கூடாது! கமிட்டி அங்கத்தினர்களின் சம்மதத்தைப் பெறாமல் இவர் எப்படி இந்த விஷயத்துக்குச் சம்மதம் அளிக்க முடியும்? நாங்கள் என்ன ஜமாஜி கோயில் மண் குதிரைகளா?'' என்று ஏறிக் கொண்டே போன சுருதியில் வார்த்தைகளை வீசி விட்டு, வானவெளியில் எட்டு நாட்கள் தொடர்ந்து ராக்கெட்டில் சுற்றிவிட்டுத் தரைக்கு வந்து சேர்ந்த விண்வெளி வீரர் மாதிரி களைப்படைந்து உட் கார்ந்தார்.

'' கரெக்ட் !'', '' சரியான கேள்வி !'' ''அப்பா சாமியா கொக்கா?'', ''வெல் டன் அப்பாசாமி!'' ''தலைவர் என்ன சொல் கிறார்?'' என்ற. வார்த்தைக் கோவைகள் வாணச் சரங்களாகச் 'சர் சர்' என்று பாய்ந்தன.

''நான் உங்களுக்கு விவரமாகச் சொல்லு றேன்.....'' என்று ஆரம்பித்தார் தலைவர். ஆனால் என்ன சொல்லுவதென்றுதான் அவ ருக்கும் தெரியவில்லை. இந்த அப்பாவிபோல் தோற்றமளிக்கும் அப்பாசாமி எவ்வளவோ எக்கச்சக்கமாகப் பேசிப் பிரச்னையின் போக்கையே மாற்றித் தொலைத்து விட் டானே !

''மிஸ்டர் தண்ணிசலம்!....மெம்பர்களை இன்சல்ட் பண்ணும ஒரு பிராபிளத்தை யுவர் செல்ஃப் டேல் பண்ணினது பெரிய தப்பு.... யூ எக்ரீ....'' என்று ஆரம்பித்தான் மங்களூர்க்காரனான கல்யாண பிரபு. அவ னுக்கு 'க' உச்சரிப்பு சரியாக வராது. அவன் 'கன்சல்ட்' என்று சொன்னது 'இன்சல்ட்' மாதிரியே ஒலித்தது.

''ஏனையா, தலைவர் மேலே இப்படி இரண்டு தடவை ஜலத்தைக் கொட்டறே ! தண்ணின்னாலும் ஒண்ணுதான், ஜலம்னு னும் ஒண்ணுதான்'' என்று இடைவெட்டி னான் நம்பிராஜன்.

''கல்யாண்! சொன்னது ரொம்ப கரெக்ட்! தலைவர் இந்த விஷயத்திலே நம்மைக் கன்ஸல்ட் பண்ணாத போனாலும் 'இன்ஸல்ட்' பண்ணினது என்னவோ உண்மைதான்!'' என்று நிலைமையை மேலும் மோசமாக்குவதில் முனைந்தான் சிங்காரம். அவனுக்கு இதுவே வழக்கம்.

தலைவருக்கு இந்தத் தடவை எவர்சில்வர் தம்ளர் உதவவில்லை. எழுந்து நின்று விட் டார். ''நண்பர்களே!'' என்று பேச ஆரம்பித்தார்.

''அந்த வார்த்தை இந்தச் சூழ்நிலையிலே பொருந்துமா ?'' என்று ஒரு கீச்சுக் குரல் மூலையிலிருந்து கிளம்பியது.

''அன்பார்ந்த நண்பர்களே!'' என்று அடைமொழியையும் சேர்த்துக் கொண்டு விட்ட இடத்தைத் தொட்டு, நிறுத்தாமல், ''நம்ப அக்கௌண்டெண்ட் ஆனந்தம் நம் எல்லாருக்கும் வேண்டியவர்தான்! அவர் மாற்றுதலாகிப் போகும்போது ஒரு தேநீர் விருந்து கொடுத்து அனுப்புவது நம்ப கடமை.......''

''இதுக்கு முன்னாலே மாற்றுதலாகிப் போன அக்கௌண்டன்ட் நரசிம்மத்தின் காலத்திலே இந்தக் கடமை கண்டுபிடிக்கப் படவில்லையோ?'' அப்பாசாமி அடையாளம் தெரியாமலிருக்கத் தலையைக் குனிந்து கொண்டே கேட்டான்.

''அப்போ ஏதோ சந்தர்ப்பம் சரியாக இருந்திருக்காது'' என்று மழுப்பினார் தலைவர்.

''அப்போ நரசிம்மன் காலி பண்ணின வீடு தலைவர் தணிகாசலத்துக்குக் கிடைக்க வில்லை; இப்போ ஆனந்தம் தம் வீட்டைத் தலைவருக்குக் கொடுத்திருப்பதாகச் சம்மதித் திருக்கிறாராம். அதற்கும் நமது பொழுது போக்குக் கிளப் ஆனந்தத்துக்குத் தேநீர்



## 'பத்திர'மான இடம்!

ஒருவன் பாங்கிக்குச் சென்று ஒரு டாலர் கடன் கேட்டான்.

பாங்கு முதன்மை சொன்னார். "வருட முடிவில் நான்கு சதவீதம் வட்டி கொடுக்க வேண்டும்."

"அதாவது நாலு சென்டுகள்தானே?"

"ஆமாம். இந்தக் கடனுக்கு உத்தரவாதமாக என்ன கொடுப்பாய்?"

"50000 டாலர்களுக்கு யு. எஸ். பத்திரங்கள் தருகிறேன்."



பாங்கு ஒப்புக் கொண்டு அவனுக்கு ஒரு டாலர் கடன் கொடுத்தது.

ஒரு வருடம் கழித்து ஒரு டாலருடன் நான்கு சென்டுகளும் திருப்பிக் கொடுத்துவிட்டுப் பாண்டுகளைப் பெற்றுக் கொண்டான். அப்பொழுது பாங்கு முதன்மை 'இவ்வளவு பாண்டுகள் வைத்திருக்கும் போது ஒரு டாலர் ஏன் கடன் வாங்கினாய்?'' என்றார்.

"கடன் யார் வாங்கினது? குறைந்த செலவில் என் பாண்டுகளுக்கு ஒரு வருடத்துக்குப் பத்திரமான இடத்தைத் தேர்ந்தெடுத்தேன். அவ்வளவு தான்!" என்றான்.

ஆதாரம்: காரனெட்
தகவல்: வி. கோபாலன்

---

விருந்து கொடுப்பதற்கும் எதும் சம்பந்தம் உண்டு என்று நான் சொல்ல வரவில்லை..." என்று பொடி வைத்துப் பேச்சை ஆரம்பித்தான்.

"என்னை ரொம்பத் தர்மசங்கடமான நிலையிலே நிறுத்தறீங்க. நான் பதில் சொல்லியும் ஆகணும். நான் பதில் சொல்ல விரும்பவும் இல்லே. உங்க இஷ்டம்போல் முடிவு செய்து கொள்ளலாம்" என்று சொல்லிவிட்டுத் தலைவர் உட்கார்ந்து விட்டார்.

"என்னதான் தலைவர் என்றாலும் கமிட்டி அங்கத்தினர்களைக் கலந்து கொண்டுதானே ஆகணும்!" – இது ஒரு தனிக் குரல்.

"இப்போ விட்டுடுங்க. இனிமேல் எப்பவாவது ஆனந்தன் இந்தக் கிராமத்துக்குத் திரும்பி அக்கௌண்டண்டாக வந்தால் அப்போது ஒரு வரவேற்பு விருந்து கொடுத்து விடலாம்!"–அது அப்பாசாமி.

"நான் சொந்தச் செலவிலே விருந்து கொடுத்துவிட்டுப் போறேன்! அதுக்கு நீங்க அவசியம் வந்து பங்கெடுத்துக் கொள்ளணும்" என்று தலைவர் சற்றுக் காரமாகவே சொன்னார்.

"பேஷாய்க் கொடுக்கலாம்! ஆனால், நீங்கள் கமிட்டியை மதிக்கலேங்கிறது அப்போது உறுதியாயிடும்" என்றான் இது வரை பேசாதிருந்த சாரங்கன்.

"என்னை என்னதான் செய்யச் சொல்றீங்க? முன்னாலேயும் போகவிட மாட்டேங்கிறீங்க. பின்னாலேயும் நகர விடமாட்டேங்கிறீங்களே!" என்று தணிகாசலம் அங்கலாய்த்தார்.

"இந்த விவகாரத்தை நீங்க முறைப்படி கமிட்டியிலே வைச்சு முடிவு தேடணும்! தீர்மானமாக வேண்டுமானாலும் கொண்டு வரலாம்" என்றான் சாரங்கன்.

"இந்தக் கௌப்புக்குத் தலைவர் அவசியமில்லை என்று ஒரு தீர்மானம் போடுங்கள். எனக்கு நிம்மதியாயிருக்கும்" என்று தணிகாசலம் முனகினார்.

அப்பாசாமி கையில் ஒரு கடிதத்துடன் எழுந்திருந்து நின்றான். "நான் வாசிக்கிறேன் என் தீர்மானத்தை" என்று சொல்லிவிட்டு, கோஷ்டி கானத்துக்கு யாரும் துணை சேர்ந்து விடுவார்களோ என்ற பயத்தோடு வேகமாக "இந்தக் கமிட்டி, மாற்றலாகிப் போகும் அக்கௌண்டண்ட் திரு ஆனந்தனுக்கு வழியனுப்பு உபசாரமாக ஒரு தேநீர் விருந்து கொடுப்பதை ஆட்சேபிக்கிறது" என்று வாசித்து நிறுத்தினான்.

தலைவர் முகத்திலே சுயாடவில்லை. சிலையாக அமர்ந்திருந்தார். பின்மொழிவதற்காகச் சிங்காரம் தலையை நிமிர்த்தினான். ஆனால் அப்பாசாமி கையை அமர்த்திவிட்டு மேலும் கொஞ்சம் இடைவெளி கொடுத்தான் அப்பாசாமி.

"தலைவருக்கே விருந்து கொடுத்துடலாமா?" என்றான் பரந்தாமன்.

"ஆனால்..." என்று மறுபடியும் முழங்கிய அப்பாசாமி, "தேநீர் விருந்துக்குப் பதிலாக ஒரு விருந்தே கொடுப்பது என்று இந்தக் கமிட்டி ஏகமனதாகத் தீர்மானிக்கிறது" என்று சொல்லிவிட்டு உட்கார்ந்தான்.

ஒரு நிமிடம் அசாதாரண அமைதி நிலவியது. தலைவர் சிலைபோல் ஆகிவிட்டார். யாருக்கும் என்ன பேசுவது என்றே தெரியவில்லை.

"யாராவது என் தீர்மானத்தை 'செகண்ட்' பண்ணுங்களேன். கமிட்டியோட அதிகாரத்தை இந்தமாதிரி 'பாசிடிவ் அப்ரோச்' மூலம் நிலைநிறுத்துவோமே! பகௌமாத்தையும் பாயசத்தையும் முழுங்குகிறபோது வாயை மூடிக் கொள்ளுங்கோ! இப்போ வாயைத் திறங்கோ!" என்று அதட்டினான் அப்பாசாமி. "நான் பின்மொழிகிறேன்" என்று விருட்டென்று சொல்லிவிட்டுச் சிங்காரம் கையை உயர்த்தினான்.

அவன் மாத்திரமா உயர்த்தினான்?

அத்தனை கைகளும் மேலே நின்றன.

கடைசியாகக் கையைத் தூக்கி போட்டவர் தலைவர் தணிகாசலம்தான்!

கமிட்டிக்கு வெற்றியா, தலைவருக்கு வெற்றியா என்று தெரியாமலே கூட்டம் கலைந்தது.

# தரத் தேயிலைத்தூள்களிலே தனிப்பெருமை வாய்ந்தது

## லிப்டன்ஸ் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ




குணமும், சுவையும் நிறைந்த
பொன்னிறமுள்ள டீ யை வெகு சீக்கிரத்தில்
இந்தத் தேயிலையைக் கொண்டு அதிகமான
கப்புகளைப் பெறுவீர்கள். இந்த ஒப்புயர்
வற்ற டீ யை நீங்களே பருகிப் பாருங்கள்
—உங்கள் விருந்தினர்களுக்கும்
கொடுங்கள் நிச்சயமாக இதை ரசித்து
நீங்கள் மகிழ்வீர்கள்—ஆம்!—அப்படியே
உங்கள் விருந்தினர்களும்கூட!
தரத் தேயிலைத் தூள்களில் லிப்டன்ஸ்
ஹிமாலயன் கோல்டன் டஸ்ட்
தனிப்பெருமை வாய்ந்தது.
தன்னிகரற்றது என்பது உண்மை.

**லிப்டன் என்றாலே**




**நல்ல டீ**

LHGC-3 TAM



- சிவசேனை
- அம்பலமேருச்சொல்
- இயந்திரப் போக்கு
- அறிஞரையும் பற்றும் ஆசாபாசம்

''மகாத்மா காந்தியின் ஆன்மா சாந்தி யடைவதற்காக அவரது ஜயந்தி நாளாகிய அக்டோபர் 2-ந் தேதியன்று தமிழர்களின் குருதியைத் தெருக்களில் ஓட விடுவோம்'' என்று கொக்கரிக்கிறது சிவசேனை. மகாராஷ்டிர அரசாங்கம் சிவசேனையை ஒடுக்க இதயபூர்வமாக முனைந்திருக்கிறதா என்ற ஐயம் தென்னிந்தியரிடையே நீங்கவில்லை. மாநில ஆட்சியாளர்கள் சிவசேனை இயக்கத்துக்கு மறைமுகமாக ஆதரவு அளிப்பதாகவும் பரவலாகச் சந்தேகம் உள்ளது. அக்டோபர் 2ந் தேதிதான் தெரியவேண்டும்—மகாராஷ்டிர முதல் அமைச்சர் ஸ்ரீ நாயக் என்ன செய்யப் போகிறார் என்பது.

தென்னிந்தியர்கள் பம்பாய்க்கு வரக் கூடாது என்பவர்கள் ஒரு முக்கியமான விஷயத்தைக் கவனிக்க வேண்டும். இம்மாநிலத்துத் தொழிலகங்கள் இம்மாநிலத்தின் தேவைகளை மட்டும் பூர்த்தி செய்யவில்லை. இந்தியாவிலுள்ள தொழிற்சாலைகளில் மிகக் கணிசமான பகுதி பம்பாயிலும், அதன் சுற்று நகரங்களிலுமே உள்ளன. ஐந்நூறு கோடி ரூபாய் செலவில் பம்பாயை இருபது ஆண்டுகளில் மெட்ரோபாலிடன் நகரமாக்கப் போவதாகவும் சொல்லப்படுகிறது. ஒரு மாநிலத்தின் தலைநகரம் என்பதற்காக இது செய்யப்படவில்லை. அகில இந்திய கேந்திரம் என்ற முறையிலேயே இந்த அபிவிருத்தித் திட்டங்களுக்கு ஒப்புதல் அளிக்கப்படுகிறது. எனவே, இந்தியா முழுவதற்கும் பொதுவாக உள்ள ஒரு பகுதியில் அப்பகுதி மக்களுக்கு மட்டும் தனி உரிமை கோருவது பொருத்தமல்ல.

எஸ்.வி. லக்ஷ்மி
(ஒரு மகாராஷ்டிரவாசி)

இல்லி காங்கிரஸ் அரசாங்கம் இந்தியாவை மொழிவாரியாகத் துண்டிக்க ஏற்பாடு செய்த பொழுது, தீர்க்கதரிசியான ராஜாஜி அவர்கள் அந்தச் சமயத்தில் பாஷாவாரியாகப் பிரிவினை செய்வதால் ஏற்படக்கூடிய அனர்த்தங்களை விரிவாக எடுத்துச் சொல்லியும், காங்கிரஸ் அதிபர்கள் செவிசாய்க்கவில்லை. இந்தியாவின் ஒற்றுமைக்குத் தீங்கு விளைவித்து வரும் இந்த மொழிவாரி மாகாண ஏற்பாடு, சமீப காலமாகச் சிவசேனை முதலிய விதத்தில் பயங்கர உருவம் எடுத்துள்ளது.

வெளி எதிரிகள் நம் நாட்டுக்கு எதிராகச் சதிசெய்து வரும்பொழுது இந்தியர்களுக்குள் ஒற்றுமை சிதையவிடலாமா?

பம்பாய்-19 ஆர். வாசுதேவன்

20–8–67ல் வெளியான 'பரிசப் பணம்' கதை ஓர் உணர்ச்சிப் படைப்பு. விவரமறியாத அநேக அம்மாசிகள் பாவம்! பணத்துக்காக விவரமறிந்தவர்களால் ஏமாற்றப்பட்டு வாழ்வைச் சூனியமாக்கிக் கொள்வதை அறிந்தும் பொருட்படுத்தாமல் இயங்கும் சர்க்காரின் இயந்திரப் போக்கை இலைமறை காயாக இடித்துரைப்பது பாராட்டுக்குரியது.

சென்னை
23–8–67 ரா. பாலாஜி

27–8–67 இதழில் ரா. கணபதி எழுதிய 'கண்ணன் பாதம்' என்ற சிறுகதையில் 'அசுவத்தாமன் இறந்து விட்டான்' என்று கண்ணன் பொய் கோஷம் செய்ததாக எழுதியுள்ளார். ஆனால் மகாபாரதத்திலோ தருமன் கூறியதாக வருகிறது. புராணக் கதைகள் பல அற்றுப்படியான வலிக்கு இந்தத் தவறுதல் தெரியவில்லையா?

சிதம்பரம்
25–8–67 வி. ஞானமணி

''கண்ணன் பாதம்'' கதையில், 'கண்ணனின் உடம்பு சாமானிய மானுட காயம் போல் அம்பு பட்டு அழியலாமா?'' என்று கேட்கப்படுகிறது.'

கண்ணன் மீது அம்பு எய்த வேடன் முற்பிறப்பில் வாலியாக இருந்தவன். வாலி ராமபிரானிடம் 'என்னை நீங்கள் அம்பினால் அடித்ததைப் போல உங்களை நான் அடிக்கும் வாய்ப்பைத் தர வேண்டும்' என்று கேட்டுக் கொண்டிருந்தான். அந்தக் கடன் கிருஷ்ணாவதாரத்தில் தீர்க்கப்படுகிறது.

பெங்களூர்
27–8–67 ஆர். எஸ். ரத்னம்

தக்ஷிணேசுவரத்தில் சில துறவிகளை நான் சந்திக்க நேர்ந்தபோது, குழந்தை லலிதா கேட்டதையே நானும் கேட்டேன். 'சிரஞ்சீவியான அசுவத்தாமன் இறந்ததாகக் கிளப்பிய வதந்தியைத் துரோணர் நம்பியதற்கு அவர்கள் தந்த விளக்கம் வருமாறு': துரோணர் பேரறிஞராயினும் அவ்வப்போது சாதாரண மானுடருக்குள்ள ஆசாபாசங்களுக்குட்பட்டு உணர்ச்சி வசமாகி விடுபவர். துருபத மகாராஜன் என்றோ இழைத்த கொடுமைக்காக அவனைத் துரோணர் தேர்க் காலில் கட்டி இழுத்து வரச் செய்ததும், அர்ஜுனனை யாரும் மிஞ்சி விடக் கூடாது என்பதற்காக ஏகலைவனின் கட்டை விரலை அவர் தட்சிணை கேட்டதும் சான்றுகள். இப்படிப்பட்டவர் பேரபிமானமுள்ள புத்திரன் இறந்ததாகச் சொல்லப் பட்டவுடன், மனக்கலக்கமுற்றது நியாயம்.

ஜாகராகண்டு
23–8–67 லலிதா பரமேசுவரன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No. M. 4593
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால்செலவு தனி